# காட்டில் கண்ட மர்மம்

மானிட இயல் அறிஞர்

பிலோ இருதயநாத்



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி. நகர், சென்னை-17.

ARCHBISHOP'S HOUSE
Santhome, Madras - 4
23rd March, 1970

Mr. Philolruthayanath is one of those rare men who are prepared to do anything and undergo any difficulty or inconvenience to achieve the object proposed for realization. He took it upon himself to study the life and history of the many tribal people who are still found in India. For this he has had to travel to far, out of the way areas, live with the people for days together, experience many inconveniences and even dangers.

The many interesting facts he has gathered and brought out in attractive publications are a real contribution to the history of our country. One may perhaps look down upon the tribal life as primitive, barbarous and uncivilized, but a perusal of these books will show that in their poverty and primitive life, these people have many traits of character and life which may, at times, put to shame the so-called modern civilization. His books certainly make very interesting reading and are bound to contribute towards a greater appreciation of our country. I wish therefore that these rather original publications find a place in all the libraries of our country and the Government may recognise his work and further promote his research capacity.

I wish God s blessing on the tireless work of Mr. Philolruthayanath.

(Sd) R. ARULAPPA
Archbishop of Madras & Mylapore,
South India

# பதிப்புரை

காடு என்றதும் நம் மனதில் ஒருவகை அச்சமும், பயமும், பீதியும் ஏற்படுகின்றன. ஆனால் ஆசிரியர் திரு. பிலோ இருதயநாத் அவர்களுக்கு மட்டும் காட்டைக் கண்டால் பயமென்பதே கொஞ்சம்கூட இல்லை. அவர் துணிச்சலாக அவருடைய சைக்கிளிலேயே காட்டைச் சுற்றிச் சுற்றி வருகிறார். பல ஆண்டுகளாகச் சுற்றி வருகிறார்.

காட்டில் வாழும் ஆதிவாசிகளையும் பல்வேறு இனத்தவர்களையும் காட்டு மனிதர்களையும் நண்பர்களாக்கிக் கொண்டு அவர்களோடு இரண்டறக் கலந்து அவர்கள் பழக்கவழக்கங்களையும் அவர்கள் வாழ்க்கை முறைகளையும் தெரிந்துகொண்டு அவர்களின் பூர்வீகக் கதைகளை அவர்கள் வாய்மொழியாகவே கேட்டு அவற்றை எல்லாம் அற்புதமாக நூல் வடிவில் எழுதித் தருபவர் திரு. பிலோ இருதயநாத் அவர்கள். இது எல்லோராலும் எளிதாகச் செய்யக் கூடிய செயலன்று.

காட்டில் சிங்கம், புலி, கரடி, யானை, மான், குரங்கு போன்ற மிருகங்களைக் கண்டு பயப்படாமலும், ஊர்வன, பறப்பன இவற்றைக் கண்டு அச்சப்படாமலும் அவைகளின் இயல்பை நன்கு தெரிந்துகொண்டு அவைகளைச் சமாளித்து அடர்ந்த காட்டினுள் புகுந்து காட்டுவாசிகளைச் சந்தித்து அங்குள்ள சகல தகவல்களையும் சேகரிப்பதற்கு மாபெரும் துணிவும் மதிநுட்பமும் வேண்டும். இத்தகைய திறமைகள் எல்லாம் நிரம்பப் பெற்ற ஆசிரியர் திரு. பிலோ இருதயநாத் பல்லாண்டுகளாக காட்டில் சுற்றி வந்தபொழுது காட்டில் தாம் கண்டவற்றையும் கேட்டவற்றையும் ஆதாரபூர்வமாக "காட்டில் கண்ட மர்மம்" என்ற நூலை இப்பொழுது அளித்துள்ளார். இது படிக்கப் படிக்கச் சுவையாகவும் விறுவிறுப்பாகவும் வியப்பாக

வும் இருக்கிறது. இது வாசகர்களுக்குக் கிடைத்த அரியதொரு புதையல். இந்த அரிய நூலை வானதி பதிப்பகத்தில் மகிழ்ச்சியோடு வெளியிடுகிறேன். இந்நூலுக்கு வாசகர்களின் வரவேற்பும் தமிழக அரசின் பாராட்டும் நிச்சயம் கிடைக்கும் என்று நம்புகிறேன்.

மானிடஇயல் குறித்து பல ஆண்டுகளாக எழுதிவரும் ஆசிரியர் திரு. பிலோஇருதயநாத் அவர்களுக்கு மேலும் மேலும் பல பரிசுகளும் பாராட்டுக்களும் கிடைக்க வேண்டும் என விரும்புகிறேன். ஆசிரியர் திரு. பிலோ இருதயநாத் அவர்களை நன்றியறிதலோடு போற்றுகிறேன்.

ஏ. திருநாவுக்கரசு

வானதி பதிப்பகம்.

புனித தோமையார் பேராலயம்,
மயிலாப்பூர், சென்னை-4

# வாழ்த்துரை

''யாதும் ஊரே, யாவரும் கேளிர்'' என்ற தமிழகத்தின் தாரக மந்திரத்தைத் தன் வாழ்வின் திருமந்திரம் ஆக்கிக்கொண்டு, அசாத்தியத் துணிச்சலோடு பல காடுகளையும் மலைகளையும் சுற்றி அங்கு வாழும் மக்களோடு வாழ்ந்து பழகி அவர்களைப் பற்றிய அபூர்வமான செய்திகளை ஏராளமாக வழங்கி வருகிறார் என் அன்புக்குரிய நண்பர் திரு. பிலோஇருதயநாத்.

நாற்பத்துநான்கு ஆண்டுகளுக்கு முன் யான், ''நல்லாயன்'' பத்திரிகை ஆசிரியராக இருந்த காலத்தில், அன்பர், பிலோஇருதயநாத் சிறுகதைகள் எழுதுவதில் ஆர்வம் கொண்ட இளம் எழுத்தாளராக இருந்தார். அந்த எழுத்தார்வத்தை நல்ல முறையில் பயன்படுத்தி, மானிட இயல் சம்பந்தமான ஆராய்ச்சிக் கட்டுரைகளை ஏராளமாய் எழுதிக் குவித்து, இன்று ஒரு சிறந்த மானிட இயல் ஆராய்ச்சி நிபுணராய் விளங்குகிறார்.

கடந்த அரை நூற்றாண்டளவாக, அவர் செய்துள்ள சுற்றுப்பயணங்களையும், சென்ற இடங்களையும், சந்தித்த மக்களையும், அவர்களோடு பழகிய விதத்தையும், அடைந்த அனுபவங்களையும், சந்தித்த ஆபத்துக்களையும், தவிர்த்த விபத்துக்களையும் படிக்கும்பொழுது நமக்கே வியப்பாய் இருக்கிறது; மயிர்க்கூச்செறிகிறது.

ஒரு தனிமனிதன், தொடக்கப்பள்ளி ஆசிரியராய் பணி யாற்றிக்கொண்டே, சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம், விடாமுயற்சியுடன் மேற்கொண்டு முடித்துள்ள இச்சீரிய ஆராய்ச்சிப் பணி மிகமிகப் பாராட்டற்குரியது; ஊக்கு வித்தலுக்கும் கௌரவமளித்தலுக்கும் தகுதியானது.

இவருடைய ஆராய்ச்சிக் கட்டுரைகள் பல மொழிகளில் பல் வேறு பத்திரிகைகளில் தனிக்கட்டுரைகளாகவும், சிறப்புக் கட்டுரைகளாகவும் புகைப்பட விளக்கங்களுடன் வெளிவந்துள்ளன. அவற்றில் பெரும்பாலானவை தொகுக் கப்பட்டு நூல் வடிவமாகவும் இதுவரை 20 புத்தகங்களாய் அச்சிடப்பட்டிருக்கின்றன. இந்நூல்களில் பலவற்றை நான் படித்துள்ளேன். அவற்றை படிக்கும்போதெல்லாம், சுற்றுச் சூழ்நிலைகளை மறந்து ஆசிரியரோடு நானும் பயணம் செய்வது போலவும் காடர்களுடனும் ஆதிவாசிகளுடனும் பழகுவது போலவும் பிரமை ஏற்படுவதுண்டு. ஒவ்வொரு புத்தகத்தைப் படித்து முடித்ததும், ஏதோ ஒரு தனி உலகில் சஞ்சரித்துவிட்டுத் திரும்புவது போன்ற உணர்ச்சியே மிஞ்சும். அந்த அளவுக்கு நம்மை வசீகரித்து மெய் மறந்து இருக்கச் செய்யும் ஆற்றலும், லாவகமான எளிய இனிய கதைப்போக்கில் எதையும் விவரித்துச் சொல்லும் வன்மையும் படைத்தவர் ஆசிரியர். பேச்சிலும் அப்படியே!

ஒரு அரசின் அல்லது பலகலைக்கழகத்தின் ஆராய்ச்சித் துறையினர் எடுத்துச் செய்யவேண்டிய பெரும்பணியை, ஒரு தனிமனிதனாய் நின்று, பொருட்செலவையும், பிரயாசை யையும், களைப்பையும், தவிப்பையும், கண்விழிப்பையும், உடல் நலத்தையும் பொருட்படுத்தாமல், "முயற்சி திரு வினையாக்கும்" என்ற முதுமொழிக்கேற்ப, முயன்று முடித்து வரும் அவருக்கு நாட்டில் நல்ல பெரும் புகழும், வெற்றி வாகையும், கௌரவ விருதும், பாராட்டுப் பதக்கமும் நிச்சயமாய் கிடைக்கும் என்று நான் உறுதியாய் நம்பு கிறேன். சில கிடைத்தும் விட்டன.

என் நம்பிக்கையில் நீங்களும் பங்கு கொள்ள விரும்பி ஞல், ஆசிரியர் எழுதியுள்ள இந்நூலை ஆர்வமுடன் வாசி யுங்கள். சுவையான பல விஷயங்களை அறிந்து கொள்வ தோடு, இத்தனை இடங்களையும் இவ்வளவு சொற்ப காலத் தில் நேர்முகமாய்ப் போய்ப் பார்த்து, ஆங்காங்கே வாழும் மக்களோடு இவ்வளவு அந்நியோந்நியமாய் தொடர்பு கொண்டுவிட்ட பாச உணர்வை நீங்களே புரிந்து கொள் வீர்கள்!

இதுபோன்ற இன்னும் பல நூல்களை ஆசிரியர் வெளி யிடுவதன் மூலம், நாட்டிலே வாழும் நகர மக்கள் காட்டிலே வாழும் லட்சக்கணக்கான மக்களை அறிந்து கொள்ளவும் ஆத்ம நேயத்தை வளர்த்து தேசீய ஒருமைப்பாட்டு உணர்வுக்கு வழிகோலவும் பெரிதும் உதவியவராவார். அவருடைய எதிர் காலத் தொண்டு இன்னும் சிறப்பாய் அமைய எல்லாம் வல்ல இறைவனின் திருவருள் துணைசெய்ய வேண்டுமென ஆசி கூறி வாழ்த்துகிறேன். வணக்கம்!

சுவாமி ஆ. ஜோ. அடைக்கலம்

# ஆதிவாசிகளின் இதயவாசி!

## ஆசிரியர் முன்னுரை

இங்கே உள்ள ஒவ்வொரு கட்டுரையிலும், அந்த அந்த இடத்து மக்களின் முன்னாள் பழக்கவழக்கங்களும், சூழ்நிலைகளும் அப்படியே எடுத்துக்காட்டப்பெற்றிருக்கின்றன. இவை வெறும் கதைகள் அல்ல; சமுதாய வளர்ச்சியையும்—வரலாற்றையும் நிர்ணயித்துக் கதை போல் எழுதிய வரலாறுகளே.

வரலாற்றைப் படிப்பதால் ஏற்படும் சலிப்பும், தத்துவத்தைக் கற்பதால் ஏற்படும் சிரமமும் இந்த நூலில் தோன்றமாட்டா. தும்பிகள் பூக்கள்தோறும் பறந்து சென்று தேனைச் சேகரித்து வைத்தால் அதைக் காடர்கள் கொண்டுவந்து எடுத்துக் குடித்து மகிழ்வதுபோல், நானும் பல காடுகளுக்குச் சென்று, பசி, தாகம் பாராமலும், காட்டுவாழ் மக்களோடு கூழ் குடித்தும், அதனால் சில பொழுது எனக்கு நேர்ந்த வயிற்றுளைச்சலையும்—பொருட்படுத்தாமல், ஊர் ஊராகச் சுற்றிப் பலவகை மக்களிடமிருந்து பல வியக்கத்தக்க பழக்கவழக்கங்களும் — சிறந்த பண்புகளும் பற்றிய தகவல்களாகிய தேனைச் சேகரித்துக்கொண்டு வந்து நிறைத்த பல கட்டுரைகள்தாம் இங்கே இடம் பெற்றிருக்கின்றன.

இந்தியாவில் (தமிழ்நாடு உட்படத்தான்) பழங்காலம் முதல், முறையான, தொடர்ச்சியான வரலாறு எழுதும் பழக்கம் இருந்ததில்லை. ஆங்கிலேயர்களின் தொடர்பு ஏற்பட்ட பின்னரே, இந்த வகையில் வரலாறு எழுதும் பழக்கம்

தோன்றியது என்பதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். நமது நாட்டை அரசாண்ட ஆங்கிலேயர், நம் நாட்டு மக்களின் வரலாற்றை அறிய விரும்பினார்கள். அதற்குத் தக்க வரலாற்று நூல்கள் இல்லாமையை அறிந்தார்கள். வரலாற்றுச் செய்திகளைச் சிறிதளவு கொண்டுள்ள கல்வெட்டுகளும், செப்பேடுகளும் பல இடங்களில் சிதறிக் கிடந்தன. அவற்றை அடிப்படையாகக் கொண்டு அந்தக் காலத்தில் ஆங்கில அரசினரும், பல பாதிரிமார்களும், நவீன நாகரிகம் அறியாமல் மலையிலும், காடுகளிலும் மறைந்து வாழும் மக்கள் சிலரின் சமூகத்தை ஆராய்ந்ததுடன், அவர்களிடம் சீர்திருத்தம் செய்யப் புகுந்தார்கள். அங்ஙனம் புகுந்தவர்கள் தங்களுக்குத் தெரிந்த, புரிந்த, தாங்கள் தெரிந்துகொண்ட சில செய்திகளை விவரித்து ஓரளவுக்கு ஆங்கிலத்தில் எழுதினார்கள். ஆனால் அவர்கள் எழுதியவை சங்க கால நூல்களையும், காடர்களின் மொழிகளையும் தெரிந்துகொண்டு எழுதியவை அல்ல. ஆனால் அவ்வளவாவது செய்தார்களே என்று நாம் நன்றி பாராட்டத்தான் வேண்டும்.

இந்தப் பழங்குடி மக்களுக்கென்று சமூக சேவை செய்ய முன் வந்த மக்களும், சங்கங்களும் அன்று இல்லை. போதாக் குறைக்குக் காட்டில் வாழும் பழங்குடிகளில் சில பிரிவினர்களைக் "குற்றப் பரம்பரையினர்"—Criminal Tribes என்று வேறு பெயரிட்டுப் பிரித்து வைத்தார்கள். 1947—ஆம் ஆண்டில் பாரதம் விடுதலை அடைந்தபின், இந்தச் சட்டம் நீக்கப்பட்டுவிட்டது. இந்த நிலையில் நான் இந்தியக் காடுகளைச் சுற்றி, அவற்றில் வாழும் பழங்குடிகளிடமும், பிற மக்களிடமும் பழகி, காட்டைவிட்டு வீட்டை அடைந்ததும் அவர்களுடைய வரலாறுகளை ஆராய்ந்து பழங்காலத்து நூல்களையும், கல்வெட்டுகளையும் ஆதாரமாகக்கொண்டு, பல குறிப்புகளையும் துருவித் துருவிச் சான்றுகள் கண்டு, அந்தந்தப் பழங்குடிகளின் கருத்துக்கு

மாறுபடாமல், என் வாழ்க்கைப் போராட்டத்தினிடையே கிடைத்த சிறிதளவு நேரத்தைப் பயன்படுத்திக்கொண்டு எழுதிய கட்டுரைகளே இங்கே இடம் பெற்றிருக்கின்றன.

அவ்வவ்விடங்களில் சேகரித்த குறிப்புகளையும், நான் பிடித்த புகைப் படங்களையும் வைத்துக்கொண்டு என் வீட்டில் சரிபார்த்துக் கொண்டிருக்கும்பொழுது, "திடீர்—திடீர்" என்று என் உடம்பு சிலிர்த்ததைப் பின்னாலிருந்து கவனித்த என் மனைவியும், என் மகளும், என்ன நடந்தது காட்டில்? ஏன் ஆழ்ந்த சிந்தனையில் உங்கள் உடம்பு சிலிர்க்கிறது. 'திடீர்—திடீர்' என்று மௌனமாக யோசனையில் ஆழ்ந்து விடுகிறீர்களே? என்ன, ஏதாவது ஆபத்து நடக்க இருந்ததா?" என்று கேட்டார்கள்.

அப்பொழுதுதான் என் சிந்தனை கலைந்து, "ஒன்றுமில்லை. புகைப்படம் பிடிக்க வேண்டும், செய்திகள் சேகரிக்கவேண்டும் என்ற நினைப்பிலேயே கிடைத்ததைச் சாப்பிட்டுக்கொண்டு காட்டில் சுற்றியதையும் சில இடங்களில் தலை தெறிக்கக் கண் மூடித்தனமாக ஓடி வந்ததையும் இப்பொழுது நினைத்துப் பார்த்தால், சில இடங்களில் எத்தகைய முட்டாள்தனமான வேலை செய்துவிட்டோம் என்று நினைத்து வருந்துகிறேன். என்னை ஆண்டவன் தன் கருணையுடன் காப்பாற்றியதை நினைத்து அவருக்கு நன்றி செலுத்துகிறேன். காட்டில் புத்திசாலி தைரியம் தான் வேண்டும்—முட்டாள் தைரியம் உயிருக்கு ஆபத்து என்று கூறினேன்.

நான் "மானிட இயல் துறை" பயின்று, பட்டம் பெற்றவனும் அல்லன். ஆயினும் பழைய, காட்டு மக்களைப் பற்றியும் பழங்குடிகளைப் பற்றியும் அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தால் சுமார் 50 ஆண்டுகளுக்கு

முன்னமே, சில காடுகளுக்குச் செல்லத் தொடங்கினேன். பஸ் வசதியும், வண்டி வசதியும் இன்று இருப்பது போல், அன்று இல்லை. நடந்தும், வைக்கோல் ஏற்றிச்செல்லும் லாரி யிலும், யானையின் சாணத்தைச் சேகரிக்கக் காடுகளுக்குப் போகும் லாரியிலும், மாட்டுவண்டியிலும் ஏறிச் சென்றேன்.

காடுகளுக்குச் சென்று நான் கண்டு வந்த செய்திகளை விவரித்துக் கட்டுரைகளாக எழுதிப் பல புகைப்படங்களுடன் பல செய்தி இதழ்களுக்கு உதவிப் பதிப்பிக்க வேண்டிக் கொண்டேன். பழங்குடிகளிடம் பழகி நான் அடைந்த பலன்கள் ஏட்டில் அடங்கமாட்டா.

ஓரளவுக்கு பொதுமக்கள் யாவரும் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற கருத்துடன், ஒவ்வோர் இனத்தாரைப் பற்றியும் வரலாற்றுச் சான்றுகள் கொடுத்து, எம்மதத்தினருக் கும், எவ்வினத்தினருக்கும் மனம் புண்படாத வண்ணம் நடுநிலையோடு எழுத விரும்பினேன். எனவே இயன்ற வரையில் ஒவ்வோர் இடத்துக்கும் நேரில் பிரயாணம் செய்து ஒரு முறைக்கு ஒன்பது முறை அந்த மக்களைக் கேட்டுச் சந்தேகங்களை நீக்கிக் கொண்ட பின்னரே, சுருக்கமாகவும், தெளிவாகவும் எழுதிய கட்டுரைகள் இவை.

உலகத்தில் மொழியில்லையானால் நாகரிகமே தோன்றி யிருக்காது. ஆகையால் காடர்களின் நாகரீகத்தைப் பற்றிய முழு விவரங்களையும் அறிய வேண்டி அவர்களுடைய மொழிகளைப் பற்றியும் ஏதோ சிறிது தெரிந்து கொண்டேன். அவர்களுடைய உணவுகளை உண்டு பழகிக் கொண்டேன். காட்டில் வாழும் மக்களிடையே வழங்கும் மொழிகள் எப்படித் தோன்றின என்று அறிய நானும் அவற்றுள் சில மொழிகளைக் கற்றும் எழுதியும் வந்துள்ளேன்.

மேலும், மேலும் எனக்கு ஆராய்ச்சித் துறையில் ஊக்க மளித்த மறைந்த உயர்திரு. மயிலை. சீனி வேங்கடசாமி

அவர்களுக்கும், உயர்திரு. சாண்டில்யன் அவர்களுக்கும் நான் சோர்வடையும் போதெல்லாம் எனக்கு ஊக்கமூட்டி உற்சாகமளித்த விவேகானந்தா கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்கள் உயர்திரு. ஜெகந்நாதாச்சாரி அவர்களுக்கும், உயர்திரு. வித்வான் A. S. இராமமூர்த்தி M.A. அவர்களுக்கும், இந்நூலை நன்முறையில் உருவாக்கி வெளியிட்டிருக்கும் வானதி பதிப்பகம்—உரிமையாளர் திரு. திருநாவுக்கரசு அவர்களுக்கும், சிறந்த முறையில் அச்சேற்றிய ஸ்ரீ பரமேஸ்வரி பிரஸ் உரிமையாளர் அவர்களுக்கும் என் நன்றி கலந்த வணக்கம்.

மிகப் பயனுள்ள இந்நூலை ஆதரித்து என் பணியை ஊக்குவிக்குமாறு எல்லாத் துறையினரையும் வேண்டுகிறேன். இப்பொழுது கட்டுரைகளை வாசிக்கவும்.

No. 2. செயின்ட் லாசர்
கோவில் தெரு,
மந்தவெளி—சென்னை-28.

பிலோ இருதயநாத்



ஆசிரியர் பிலோ இருதயநாத் காட்டில் தமது
சைக்கிளிலேயே ஓய்வெடுக்கும் முறைகளில் ஒன்று

## பொருளடக்கம்



யானை வேட்டை

பக்கம் - 25



தற்காலத்தில் தேன் எடுக்கும் டின்னுடன் காடர்
பக்கம் - 40



மலைப் பாம்பு
பக்கம் - 45



பாடும் குட் கல்
பக்கம் - 82



பேசிய வேட்ல் மர்ம்
பக்கம் - 88



மான்
பக்கம் - 107



காடர்கள் தங்கள் குழந்தைகளுக்கு கற்பிக்கும் காட்டுக்கலை நடனம்
பக்கம் - 114

# 1. ஆதிவாசிகள் காட்டிற்கு வந்த கதை

காடுகளில் ஆதிவாசிகள் வாழத் தொடங்கியது ஏன் என்று ஆராயத் தொடங்கினேன். புல்லெரியக் காய்ந்தாலும் சரி, கல்லுருகப் பெய்தாலும் சரி, எந்த இடத்தில் இயற்கை நிலை எவ்வாறிருந்தாலும் சரி மக்கள் போகாத இடமும், குடியேறி வாழாத இடமும் பண்டையிலும் இல்லை, இன்றுமில்லை. எனவே பண்டைத் தமிழ் மக்கள் தாங்கள் குடியேறிய பல இடங்களைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐவகை நிலங்களாகப் பிரித்து வகுத்து வாழ்ந்து வந்தனர். அப்படி வாழ்ந்து வந்த மக்களிடம் சூரியனை வணங்கும் வழக்கமிருந்தது. அதே பழக்கம் தான், இன்றும் காட்டில் வாழும் ஆதிவாசிகளிடமும் காணப்படுகிறது.

பல ஆயிரம் ஆண்டுகட்கு முன்பு நான்கு வகை நிலங்களில் மக்கள் கூட்டம் கூட்டங்களாக வாழும்போது, படிப்படியாகப் பல தலைவர்களும் பிறகு அரசர்களும் தோன்றினார்கள். அரசாளும் அரசர்களுக்குள் ஆணவம் அதிகமானது, அடக்குவாரின்றி அனைவரும் ஆடினார்கள். இந்நிலையில் ஒரு அரசனுக்கும், மற்றொரு அரசனுக்கும் போர் உண்டானது. சரித்திரக் காலங்களைக் கணக்கெடுத்துக் காண்போமானால், பத்தாண்டுகளில் குறைந்தது ஐந்து போர்களுக்குக் குறைவில்லாமல் நடந்தன என்று சரித்திரம்

கூறுகிறது. அங்ஙனம் சண்டைகள் ஏற்படும்போது, ஊர் களில் பறையடித்து, எல்லோரையும் காடுகளிலும், மலைகளி லும் ஓடும்படி சொன்னார்கள். அங்ஙனம் யார் யார் ஓடிச் சென்றார்கள், அப்படி யார் யார் போருக்காக மறைந்து, மலை களுக்கும், காடுகளுக்கும் சென்றார்கள், என்பதைப் புறநானூற்றுப் பாடல் படம் பிடித்துக் காட்டுகிறது.

''ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர்ப் பெரு(அ)தீரும்
எம் அம்பு கடிவிடுதும்; நும் அரண் சேர்மின் என
அறுத்தாறு நுவலும் பூட்கை.''

(புறநானூற்றுச் செய்யுள்)

பண்டையில் மக்கள் எவ்விதம் நாட்டை விட்டு காட்டை அடைந்து, ஆதிவாசிகளாகவும் மலைவாசிகளாகவும் மாறி இருக்க வேண்டும் என்பதற்கு—விளக்கம் இது.

போருக்கு அஞ்சிப் பறையடித்தபின் காட்டிலும், மலை யிலும் மறைந்து காடர்களாக வாழ்ந்தவர்களின் சரித்திரங் களையும், அவர்கள் வாழுமிடங்களையும் ஆராய்ச்சி செய்யும் போது, இந்தியாவில் எங்கெங்கெல்லாம் போர்கள் நடை பெற்றனவோ, அவ்விடங்களுக்கு அருகில்தான், அநேக மலைவாசிகளும், காட்டுவாசிகளும் இன்றும் வாழ்கிறார்கள்.

உதாரணமாக இமயமலையடிவாரங்களிலும், மத்தியப் பிரதேசத்திலும், குஜராத் பகுதிகளிலும், ஒரிசா மாகாணத் திலும், அஸ்ஸாம் பகுதிகளிலும் விந்திய மலைப் பகுதி களிலும், பம்பாய் மாகாணத்திலும், கிழக்கு மேற்கு மலைத் தொடர்ச்சிகளிலும், மலபார் பகுதிகளிலும், கிழக்கு மேற்குக் கடற்கரைப் பகுதிகளிலும் இன்றும் பல பிரிவுகளாகப் பிரிந்து வாழ்கிறார்கள்.

அங்ஙனம் தாங்கள் போருக்கு அஞ்சி, தங்கள் பொருள்களை முதுகில் சுமந்து வந்ததால் இன்றும் ஆனை மலையில் வாழும் ஒரு இன மக்களாகிய ஆதிவாசிகளுக்கு, "முதுவர்" என்ற பெயர் இடப்பட்டுள்ளது. மேலும் ஒரே மலையில் வாழும் ஒரே இன மக்களை, "மலசர்" என்றும், "மலமலசர்" என்றும் பிரித்து வைத்திருக்கின்றனர். ஆனால், அவர்களுக்குள் பழக்க வழக்கங்களும், பேசும் மொழிகளும், பெண் கொடுக்கல் வாங்கலிலும் வித்தியாசம் மிகக் குறைவு.

இங்ஙனம், அவர்கள் எங்ஙனம் பிரிந்தனர் என ஆராய்ச்சி செய்யுங்கால், போர்க்களத்திலிருந்து வரும் போது, போர் வீரர்கள் முதலில் இருந்த ஒரு கூட்டத்தினரை, "நீங்கள் யார்?" என்று கேட்டிருக்க வேண்டும். அவர்கள், "மலசர்" என்று சொல்லி இருக்க வேண்டும்.

அதே போர் வீரர்கள் இன்னும் சிறிது தூரம் சென்று மற்றொரு கூட்டத்தினரைக் கண்டு, "நீங்கள் யார்?" என்று கேட்டிருக்க வேண்டும். தங்கள் இன மக்கள் முதலில் என்ன கூறினர்களோ, அது தெரியாமல், நாம் ஏதாவது பிழைபடக் கூறிவிட்டால் என்ன நேரிடுமோவென்று போர் வீரர்களுக்கு அஞ்சி "மலசர்" என்பதை "மலமலசர்" என்று கூறி, தங்களுக்கும், மலையடிவாரத்தில் வாழும் மலசருக்கும் தொடர்பில்லை என்று கூறியிருக்க வேண்டும்.

மலசர் என்பதற்குச் சிலர் வேறொரு பொருள் கூறுகிறார்கள். "மல + அரசர்" "நாங்கள் மலைக்கு அரசரைப் போல் அன்று வாழ்ந்தோம்" என்று கூறுகின்றனர்.

மேலும் சில மலைவாசிகளும், சில காட்டுவாசிகளும், பண்டைக் காலங்களில் கொள்ளையடித்துவிட்டுக் காடுகளிலும், மலைக்குகைகளிலும் மறைந்து வாழ்ந்தார்கள். அங்

வனம் வாழ்ந்த பலரை "குற்றமுள்ள ஆதிவாசிகள்" (Criminal Tribes) என்று பிரித்து வைத்திருந்தார்கள். 1947-ம் ஆண்டில் இந்தியா சுதந்தரம் அடைந்தபின் இச் சட்டத்தை நீக்கி விட்டனர்.

# 2. மூப்பாயி தோன்றினள்!

ஆதியில் மக்கள் கூட்டங் கூட்டமாக மலைகளிலும், காடுகளிலும், வாழ்ந்தார்கள். அவர்கள் நடக்கவும் தெரியாம லிருந்தார்கள். மிருகங்கள் ஓடுவதையும், மரமேறுவதை யும், ஒன்றோடொன்று வேட்டையாடுவதையும், சண்டை செய்வதையும் நீந்துவதையும், விளையாடுவதையும் கரடி, குரங்கு, காங்கரூ, காட்டாடு முதலியவைகள் நிற்பதை யும் கண்டு தானும் நின்றான். ஓடினான், வேட்டையும் கற்றான், ஆடினான். அன்று சிறிய சிறிய கூட்டங்கள் உண் டாயின. அதில் ஆண்களும், பெண்களும் பெருகினர். முதலில் தாய் மாக்களைப் போல தானும் பால் கொடுக்கக் கற்றுக் கொண்டாள். பல்லாண்டுகள் அகன்றன. அக் கூட்டத்திற்கு, அன்று தலைவன் கிடையாது. முதலில் தலைவியே தான் இருந்தாள். தலைவிக்கு, தன் கைக் கீழ் சுமார் முப்பது, நாற்பது ஆண்கள் இருந்தார்கள். அந்த ஆண்கள் எல்லோருமே அவளுக்குக் கணவன்மார்கள்.

ஆண்டுகள் ஆயிரக்கணக்கில் அகன்றன. தலைவி நேர்மையாகவும், நீதியாகவும் நடந்து கொண்டாள். தனக்குக் கீழ்படியாத ஆண்களைக் கொலை செய்து வந் தாள். அத்தலைவிக்கு, "மூப்பாயி" என்று பெயர் வைத்து அழைத்தார்கள். ஒரே கூட்டத்தில் இரண்டு தலைவிகள் உண்டானார்கள். ஒரு தலைவி தனியாகத் தனக்கு வேண் டிய ஆண்களை அழைத்துக்கொண்டு மிருகங்களின் பின்னால், பிரயாணமானாள். ஆண்டுகள் அகன்றன. மூப்பாயி

எக்காரணத்தை முன்னிட்டோ மறைந்தாள். ஒரு கூட்டத்திற்கு, ஒரு பகுதியில், "மூப்பன்" உண்டானுன். மூப்பனுக்குப் பல மனைவிகள் இருந்தார்கள். இந்த நிலையில் மக்களின் கூட்டங்கள் அதிகமாகப் பரவின. மக்கள் முதலில் காட்டுக்கிழங்குகளையும், காய்கறிகளையும் பச்சையாகப் புசித்தார்கள். இன்றும் காடுகளில் வாழும் மக்கள் வழவழப்பான ஒருவகைக் கிழங்குகளை வேக வைத்து சாப்பிடுகிறார்கள்.

மாக்கள் ஒன்றுக்கொன்று சப்தம் செய்து, சைகைக் காட்டிக் கொள்வதை, ஆதிவாசி கவனித்தான். முதலில் தன் கருத்தை, அவன் வெளிப்படுத்த எண்ணினான். அதை விரும்பினான். அதையும் அவன் மாக்களிடமிருந்து கற்றுக்கொண்டான். இப்படி கூட்டம் கூட்டமாக மிருகங்களின் பின்னல் சென்றார்கள். காரணம், தாங்களும் மிருகங்கள் என்று உணர்ந்துதான். மாக்கள் ஆண், பெண் இன்பத்திலும் தன் குரலோசைக்குத் தடையில்லாமல் வெளி வருவதை உணர்ந்தான் மனிதன். தானும் வேலை செய்யும் போது, கையால் சைகை காட்ட முடியாத நிலையில் குரலோசையை உபயோகப்படுத்திப் பேசவும், "கூ"; "போ"; "ஞவ்"; வென்று ஒலி கொடுக்கவும் கற்று, அதன் மூலம் பேசத் தலைப்பட்டான். இப் பண்டைக் காலப் பழக்கமே இன்றும், நாகரிகமடைந்த நம்மிடம் சில ஒலிகளாக இருக்கின்றன. கன்னடியன் தயிர் விற்பனையில் "ஞ" வென்றும், கோழி விற்பனையில், "கோ" என்றும், "சீ சீ" "தூ தூ", "ஞஞ" வென்றும் மிருகங்களைப் பார்த்து அன்று கற்றுக்கொண்ட பழக்கமே, இன்றும் "மியா, மியா" "கா—கா" "வௌ—வௌ" வென்று குழந்தைகளிடம் கூறுகிறோம். சில சமயங்களில் விளக்கில்லாமல் காட்டிலிருக்கும்போது அவர்களின் மொழி தெரியாமல் சில சமயங்களில் படும்பாடு எனக்குத்தான் தெரியும். 'ஒரு ஊமையன் இருக்கும் இருள் சூழ்ந்த அறையில் பக்கத்திலிருக்கும் தாய் தனக்கு வாய் இருந்தும், மொழி

யிருந்தும், இருளில் வீட்டுக்குள் திருடன் வந்திருக்கிறான்'' என்பதை எங்ஙனம் விளக்க முடியும்! அதைப்போல் பண்டை மனிதன் விளக்கில்லாத காலத்தில் என்ன பாடு பட்டிருப்பான் என்பது, இன்று விளக்கு வைத்தால் குல தெய்வத்திற்குக் கோபம் உண்டாகும் என்று, இருளில் காட்டில் தங்கும்போதுதான் தெரிகிறது. அன்று மொழி யின்மையால் எல்லோரும் ஊமையர்களைப் போல்தான் இருந்திருக்கவேண்டும். அந்த நிலையில் துஷ்ட மிருகங் கள் வருவதைக் கண்டு, அதைப்போலவே இவனும் கத்தி, தன் இன மக்களுக்குக் காட்டினான். ஏனென்றால் இன்று காட்டில் வாழும் மக்கள் தாங்கள் காணும் மிருகங்களைப் போல், கத்தவும், ஊளையிடவும், உருமிச் சத்தம் செய்ய வும் பழகி இருக்கின்றனர். இன்றும் 'நரிக்குறவன்' வலை யைக் கட்டிவிட்டு பெண் நரியைப் போல் மறைந்து நின்று, ''ஊளை'' இடுவான். ஆண் நரிகள் ஏமாந்து அவனுடைய வலையில் சிக்கிக் கொள்வதை, இன்று கண் கூடாகக் காண்கிறோம். மனிதன் தந்திரத்தால் நரி பிடிக்க வும் கற்று இருக்கிறான்.

இப்படிப் படிப்படியாக மக்கள் கத்தவும், பேசவும் பழகி னார்கள். பிறகு ஒரே இடத்தில் குடிசைகளும், குகைவாசி களும் பெருகவே, நாகரீகமும் பெருகவே, மூப்பனும் மறைந்தான். தலைவனுக்கு அரசன் என்ற பெயர் உண் டானது. இன்றும் நீலகிரியில் வாழும் இருளர், குறும்பர், ஊராணியர் முதலியவர்கள் தலைவனை, ''மூப்பன்'' என்றே அழைக்கின்றனர்.

முதன்முதலில் தோன்றிய மூப்பனின் இனமக்கள் பரந்த நிலப்பகுதியில் வாழ்ந்தார்கள். அது ஒரு தீவு பாகம். அது, ''நாவலந்தீவு'' எனப்படும். ''லெமூரியா கண்டம்'' பிறகு குமரி நாடு எனப்படும். ''கன்னியாகுமரி'' யாக மாறியது. இப்பாகங்கள் இரண்டும் கடலில் மறைந்தன வாம். நாவலந் தீவும், குமரி நாடும் மறைந்து குறைந்த

பிறகு அதிலிருந்து தப்பினோம், பிழைத்தோம் என்று மக்கள் இப்பொழுது, "இந்தியா" எனப்படும் சம்புத் தீபத்தின் தென்பாகத்தின் நிலத்தைக் கண்டு, நிலைத்து வாழத் தொடங்கினார்கள். அவர்களே தமிழர்களாகிய ஆதிக்குடி மக்கள்.

பல்லாயிரமாண்டுகள் மறைந்தன. மக்களும் பெருகினர். ஆகாரத்திற்கும், கால்நடைகளுக்கும் தெற்கிலிருந்து வடக்கு நோக்கிச் சென்றார்கள். அவர்கள் வடக்கு நோக்கிச் செல்ல முடியாவண்ணம் விந்திய மலையும், தண்டகம் என்னும் பெரிய காடும் குறுக்கிட்டதால், இவர்கள் தெற்கேயே பரவி வாழ்ந்தார்கள். இவ்வளவு பெரிய தென் பகுதியில் மேலும், இரண்டு மூன்று தலைவர்களும், மூப்பன்மார்களும் உண்டானார்கள்.

புதிய இடங்களில் குடிபுகுந்த இவர்கள், புதிய பொருள்களுக்குப் பெயர் தெரியாமல் கஷ்டப்பட்டார்கள். பெயர் தெரியாத பொருள்களுக்கும் தாங்கள் தூரத்தில் ஒரு கொடிய மிருகத்தைக் கண்டு, கலங்கி ஓடி வந்தேன் என்று விளக்குவதற்கும், ஒரு கொடிய மிருகத்தின் உருவத்தின் படத்தைப் பாறையில் வரைந்து காட்டினார்கள். இதைப்போல் வரைந்த பல சித்திரங்கள், இன்றும் சாத்பூரா மலைச்சாரலில் இருக்கின்றன. அதில் "காங்கூரு" மிருகத்தின் படமும் ஒன்று இருக்கிறது. இச்சித்திரத்திலிருந்து, அந்த மிருகம் பண்டையில் இந்தியாவில் இருந்தது என்றும் எக்காரணத்தைக் கொண்டோ சிதறுண்டு, இன்று ஆஸ்திரேலியா சென்றது என்றும் கூறப்படுகிறது. எனவே சித்திரம் வரையும் பழக்கத்திலிருந்தும் "ஒரு மொழி" வளர ஆரம்பித்திருக்க வேண்டும்.

இங்ஙனம் இந்தியா முழுவதும் பரவிய பண்டை மக்கள் கூட்டங்களில் பல மூப்பன்மார்கள் மாறி ஆங்காங்கே பல அரசர்களாக, குடிமக்களின் தலைவனாக வாழ

ஆரம்பித்தார்கள். ஒவ்வோர் பகுதியிலும் அரசனுக்குப் பணி செய்யப் பல பணியாட்கள் வேண்டியிருந்தனர். அங்ஙனம் அரசர்களிடம் பணி செய்தவர்கள் யார் யார் என்பதைச் சில கவிதைகள் விளக்குகின்றன.

"தொண்டை மண்டல வரிசை மூவாறு குடிமக்கள்
சுருதி நாள் முதலாகவே
துங்கமிகு நாவிதன் குயவன், வண்ணான்,
ஓலை சொன்னபடி எழுதும் ஓச்சன்,
கண்டகம் மாளவர் வகை ஐவர், வாணியர் மூவர்
கந்தமலர் மாலைகாரர், கலைமீது சரடோட்டும் பாணர்,
தலைக்கடைக் காவல்புரி, பள்ளி வலையன்
பண்டு முதல், ஊரான் மறிக்கும் இடையன் விருது,
பல கூறு வீரமுடையான்,
பதினெண்குடி மக்கள்,
அனைவரும் காராளர்,
பணிச்செய்து, பல முறைமையும்,
கொண்டுபரி, வட்டமும்,
கட்டியே வருவர்,
இக்குவலயம் மதிக்கவே—தான் கூறிய
கச்சிவாழ் ஏகம்பர் ஆலய முகத்தில் இட்ட லிபியே"

இவ்விதமாக அரசனிடம் பல பணிகள் செய்யும் மக்கள் அன்று நெருங்கி, அரசனுடன் தொடர்புகொண்டு வாழ்ந்து வந்தார்கள். ஆண்டுகள் ஆயிரக்கணக்கில் அகன்றன. ஆள பல அரசர்கள் தோன்றினார்கள்.

# 3. ஆதிவாசிகளின் அற்புதக் காட்டு நடனக்கலை

இந்தியாவின் மலைகளிலும் காடுகளிலும் வாழும் ஆதிவாசிகளின் எண்ணிக்கை சென்ஸஸ் கணக்குப்படி பத்தொன்பது மில்லியன் என்று தெரிய வந்திருக்கிறது.

இந்தியாவிலுள்ள ஆதிவாசிகளைக் கண்டுபிடித்து அவர்களுடன் தங்கி, அவர்களின் வாழ்க்கைத் தரத்தைக் கண்டறிய, என் ஆயுள் காலம் போதுமோவென அடிக்கடி நான் நினைப்பதுண்டு. இவர்களில் சிலர் காடுகளிலும், சிலர் மலைகளிலும் கூட்டமாகவும், தனித்தும் குடிசைகளைக் கட்டிக் கொண்டு வாழ்கின்றனர். இவர்களில் சிலர் யார்? எங்கிருந்து வந்தவர்கள்? ஏன் வந்தார்கள்? இவர்கள் காட்டிற்கு வருவதற்கு முன், என்ன இனப் பெயரில் எங்கு வாழ்ந்திருந்தனர்—என்ற கேள்விகளுக்குச் சரியான சரித்திரச் சான்றுகள் இன்னும் கிடைக்கவில்லை. வழக்கங்களை யும், உடைகளின் தோற்றங்களையும் கொண்டு, இன்ன இடங்களிலிருந்து வந்திருக்கலாமென்று யூகிக்கப்படுகிறது என்று தான் பலர் எண்ணுகிறார்களே தவிர, திட்டமாகச் சொல்வதற்கு முன் வரவில்லை. ஆனால் ஆராய்ச்சியில் கூடிய மட்டும் திட்டமாகக் கூற நான் முயல்கிறேன்.

காட்டில் வாழும் ஆதிவாசிகள் ஆண்களும், பெண்களும் உடல் கட்டிலும், தைரியத்திலும், விடா முயற்சியிலும்,

ஒற்றுமையிலும், பிறர் உதவியின்றித் தாங்களே தங்களுக்கு வேண்டிய வேலைகளைச் செய்ய வல்லவர்கள் மோப்பத்தாலும், மிருகங்களின் காலடிச் சுவடுகளாலும், எந்த மிருகங்கள் எவ்வளவு தூரத்தில் எத்திசையிலிருக்கின்றன வென்று எளிதில் அறிந்து கொள்வார்கள். கல்வியறிவு இல்லாவிட்டாலும், அவர்கள் சிறந்த புத்தி கூர்மை உடையவர்கள். கல்வி அறிவு கற்ற நம்மில் சிலரைப் போல் சும்மா இல்லாமல், ஆதிவாசிகள் ஒவ்வொருவரும் பாடவும், ஆடவும் கற்றிருக்கின்றனர். பொதுவாக இவர்களுக்குள், பேச்சும் பழக்க வழக்கங்களும், தேன் சேகரிக்கும் முறையும் வித்தியாசப்படுகின்றன. இவர்கள் பேசும் பாஷைக்கு இலக்கணமும், இலக்கியமும் இல்லை. ஒவ்வொரு ஆதிவாசிக் கூட்டத்தினரும் தனித்தனியாகத் தங்களுக்கென்று நடனஉடையும், நடனக் கலையும் ஏற்படுத்திக்கொண்டு நடனமும் ஆடத் தெரிந்து வைத்திருக்கின்றனர்.

அந்தந்த நடனக் கலையையும் பலவகையாகப் பாகுபாடு படுத்தி வைத்திருக்கின்றனர். இன்று நடனக்கலை உலகம் முழுவதும் பல வகையாக வளர்வதற்கு வேண்டிய முயற்சிகள் செய்கிறார்கள் கலைஞர்கள். ஆனால் இன்று வளர்ந்திருக்கும் நடனக்கலை முதன் முதலில் எங்ஙனம் தோன்றியது? மானிடன் எங்ஙனம் கூத்தாடவும் பாடவும் கற்றுக்கொண்டான் என்று சிந்தித்தால், அது பண்டை ஆதிவாசிகளாகிய (நம் மூதாதையர்களோ) காட்டின்கண் வாழும் மக்களிடம்தான் முதன் முதலில் தோன்றியது என்பதூஉ உண்மை. ஆனால், ஆதியில் காட்டு மிராண்டிகளாக இருக்கும் காடர்கள் எப்படி ஆடவும் பாடவும் அறிந்து கொண்டார்கள்?

## ஆதி மனிதன் ஆடக் கற்றது எப்படி?

மயில் ஆடுவதையும், கரடி தன் இரு கரங்களைத் தூக்கி முட்டியிட்டு ஆடுவதையும், புருக்களும், குயில் இனங்களும் தம் தீங் குரல்களால் பாடி ஆடுவதையும், பல மான்கள் கானகத்தில் ஒன்றோடொன்று விளையாடுவதையும், கண்ட மலை மக்கள், தாங்களும் விளையாடவும், கூத்தாடவும், பாடவும், பழகிக் கொண்டார்கள். மீனைக் கண்டு, மானிடன் நீந்தவும், குரங்கைக் கண்டு மரமேறவும், மிருகங்களைக் கண்டு வேட்டையாடவும் அன்று மனிதன் பழகிக் கொண்டான் அல்லவா? அதைப்போலவே, இன்றும் ஆடையில்லாச் சில ஆதிவாசிகள், உலகம் முழுவதும் உள்ள காட்டு மக்கள், கானகத்தில் உண்டாகும் எல்லாச் சம்பவங்களிலும், இரவிலும், பகலிலும், நன்மைக்கும் தீமைக்கும், ஆண்களும் பெண்களும் சேர்ந்து நடனமாடுவதென்பதை ஒரு முக்கியமான கொள்கையாக வைத்திருக்கின்றனர் என்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தேன். இன்று காட்டுவாசிகள் தங்கள் நடனத்தைத் தேவதை நடனமென்றும், திருமண நடனமென்றும் பௌர்ணமி இரவு நடனமென்றும், விருந்தினர் நடனமென்றும், காதல் ஜோடி நடனமென்றும், சீமந்த நடனமென்றும், மழைத் தேவதை நடனமென்றும், மயான நடனமென்றும் பல வகையாகப் பிரித்து வைத்துக் கொண்டு நடனமாடுவதை இன்றும் கானகத்தில் காணலாம்.

நடனம் குடும்ப சம்பிரதாயத்தின் கலை என்று சில ஆதிவாசிகள் அக்கலையைத் தங்கள் குழந்தைப் பருவம் முதற்கொண்டே கற்றுக் கொள்ளுகின்றனர். 'காட்டில் வாழ்க்கையை நடத்தும் காடர்களுக்கு என்ன தெரியும்?' என்று நினைக்கின்றனர் சிலர். ஆனால் அழகாகவும், ஒரே விதமாகவும் நடனத்தில் காலைத் தாளத்துடன் அவர்கள் அடி அடியாக முன்னும் பின்னும் வைப்பதைக் கண்டால், மிகவும் ஆச்சரியமாக இருக்கும். பண்டைக்கால ஆதி

மக்களின் நடனங்களேதான் நாகரிகம் வளர வளர நூல்களிலும் இடம் பெற்றுள்ளன.

## கூத்தோ கூத்து !

**சொ**க்கம் கூத்து, மெய்க் கூத்து, அபிநயக் கூத்து, நாடகக் கூத்து என்ற நான்கு வகைச் 'சாந்திக் கூத்தும்' குரவைக் கூத்து, கலிநடம் கூத்து, குடக் கூத்து, கரணம் கூத்து, நோக்குக் கூத்து, தோற்பாவைக் கூத்து என்று கூறும் ஆறுவகை 'விநோதக் கூத்தும், வேத்தியல் கூத்து, பொதுவியல் கூத்து என்று கூறும் இருவகைப்படும் 'வைகக் கூத்தும்' பண்டைக்காலத்தில் ஆதிவாசிகளிடமிருந்து பெயர் நாமகரணம் செய்யத் தெரியாமல் பிறந்திருக்க வேண்டும். ஏனென்றால் இக்கூத்துக்களில் சிலவற்றை மாற்றுப் பெயருடன், உச்சரிப்பையும் சற்று வித்தியாசமாகச் சொல்லி இன்று ஆடுகின்றனர்.

"குரவைக் கூத்து" என்பது: அன்று கண்ணகி தன் கணவனையிழந்து, வையைக் கரை வழியே நெடுவேள் குன்றத்தை அடைந்து, ஒரு வேங்கை மரத்தின் கீழ் நிற்க, அம்மலையின் மேலிருந்த மலை வேடுவரில் சிலர் அவளை நோக்கி, "முலையிழந்து வந்து நின்றீர் யாவிரோ?" என்று கேட்டதாகவும், தேவர்கள் கண்ணகிக்குத் தன் கணவனைக் காட்டி, அவளையும் விண்ணுலகம் அழைத்துச் சென்றதை வேடுவர் கண்டு, அங்கு வந்த அவளை வேடுவர் குலத்திற்கே ஒரு பெரும் தெய்வம் என்று எண்ணி, எல்லோரும் குரவைக் கூத்தாடியதாகவும் சிலப்பதிகாரம் கூறுகிறது.

"சிறுகுடியீரே! சிறுகுடியீரே!
தெய்வம் கொள்ளுமின்—சிறுகுடியீரே!
தொண்டகம் தொடுமின்—
சிறுபறை தொடுமின்

குறிஞ்சி பாடுமின்—
நறும்புகை யெடுமின்
ஒரு முலை யிழந்த நங்கைக்குப்
பெருமலை துஞ்சாது வளஞ்சுரக் கெனவே"

என்று 'தொண்டகம்' என்னும் பறையையும், சிறிய பறையையும், கொம்பு ஊதியும் மலைநாட்டு முறைப்படி குரவைக் கூத்தாடியும் பாடியும் சிறப்புச் செய்தார்களாம்.

காட்டு மக்களில் சிலர் நடனமாடும்போது, நெல்லை உரலில் குத்துவதைப் போலவும், காதலனை முந்தானையால் அழைப்பது போலவும், முந்தானையால் காதலனுக்கு விசிறுவதைப் போலவும், ஆண் குழந்தை பிறந்தால் நிமிர்ந்து நடனமாடி முன்னால் போவதும், பெண் குழந்தை பிறந்தால் முகத்தில் வாட்டத்தைக் காட்டி, நடனமாடித் திரும்பி வருவதைப் போல் அபிநயம் பிடித்து ஆடுவதும், ஆணும் பெண்ணும் கலந்து ஆடினால் அதிலே ஒரு இன்பத்தைக் கண்டதைப்போல் ஆடுவதும் உண்டு.

சாதாரணமாக ஆதிவாசிகள் எல்லோருடைய நடனத்திலும் வேட்டை ஆடுவதைப்போல் ஒரு நடனம் இருக்கின்றது. வேட்டையாடுவதைப்போல் கையைக் காட்டி, கழுத்தை வளைத்து, குனிந்து கொடுப்பார்கள். இதன் பொருள் என்னவென்றால் மலைச்சாரலில் வாழும் மக்கள் இயற்கையிலேயே கொடிய மிருகங்களை வேட்டையாட வேண்டிய நிலையில் உள்ளவர்கள். அங்ஙனம் கொடிய மிருகங்களை வேட்டையாடிக் கொண்டுவந்த புலியின் நகம், பற்கள் கரடியின் நகம், பற்கள் முதலியவற்றை ஒன்றாகச் சேர்த்து காதலன் தன் காதலிக்குக் கொடுக்க அவள் அதைத் தன் கழுத்தில் அணியும் பழக்கமே நாளடைவில் தாலி கட்டிக் கொள்ளும் வழக்கமாக மாறிற்று என்று பல சரித்திரச் சான்றுகள் இருக்கின்றன. அப்பழக்கமே இன்றும்

பலருடைய சம்பிரதாயத்தில், கொடிய மிருகங்களின் நகங்களையும், பற்களையும் பொன்னோடும், வெள்ளியோடும் கோத்துத் தாலி கட்டிக் கொள்வதற்குக் காரணமாக அமைந்துள்ளது. அந்தந்த வடிவத்தை இன்றும் பலரின் கழுத்தில் பொன் வடிவத்தில் காணலாம். மேலும் நரியின் பற்களைக் கக்குவான் இருமல் கொண்ட குழந்தைகளின் கழுத்தில் கட்டும் பழக்கம் நம்மில் பலருக்கு இன்றும் உண்டு. காதலனோடு பழகிய பருவமடைந்த காதலி தன் கழுத்தில் இப்புலிப் பல் தாலியை அணிந்திருந்ததை, அவளது செவிலித்தாய் குறிக்கும் செய்யுள் ஒன்று அகநானூற்றில் உள்ளது.

> "நின்னொடு வினவல் கேளாய், பொன்னொடு
> புலிப்பல் கோத்த புலம்பு மணித் தாலி
> ஒலிக் குழைச் செயலை, யுடைமான் அல்குல்
> ஆய்ச்சுனைப் பலவின் மேய்கலை உதிர்த்த
> துய்த்தலை வெண்காழ் பெறூஉம்,
> கற்கெழு சிறுகுடிக் கானவன் மகளே". (அகம் 7).

இப்படிப் பண்டைக் காலத்திலேயே புலிப் பல்லால் தாலி அணியும் பழக்கம் தமிழகத்தில் இருந்தது என்பதற்குப் பல காரணங்களைத் தரலாமன்றோ?

பண்டைக் காலத்தில் நீலகிரியில் வாழும் பூர்வீகக் குடிகளாகிய தொதுவர்களிடமும், கோத்தர்களிடமும் ஒரு பழக்கமிருந்தது. அப்பழக்கம இன்று நீங்கி விட்டது. தன் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள வருகிறவர்களில், பெண் சிறுவயது முதற்கொண்டு வளர்த்துவரும் காளையை எந்த வாலிபன் கொம்பைப் பிடித்து நிறுத்துகிறானோ, அவனுக்கே தன் பெண்ணைக் கொடுப்பது என்ற பழக்கத்தை தந்தை மேற்கொண்டிருந்த விந்தையான பழங்கம்தான் அது! இந்த ஆபத்தான விளையாட்டால் பல வாலிபர்கள் பலியானார்கள். ஆகையால் இதை இன்று நீக்கிவிட்டனர்.

இக் காட்சியைக் கலித்தொகைப் பாடலொன்று படம் பிடித்துக் காட்டுகிறது.

> "தகை வகை மிசைமிசைப் பாயியர் ஆர்த்துடன்
> எதிரெதிர் சென்றார் பலர், கொலை மலி சிலை செறி
> செயிரயர் சினஞ் சிறந்து உருத் தெழுந் தோடின்று மேல் :
>
> எழுந்தது துகள் ஏற்றனர் மார்பு
> கவிழ்ந்தன மருப்புங் கலங்கினர் பலர்"

எனக் கலித்தொகைப் பாடலொன்று, பண்டைக் காலப் பழக்கத்தை நினைவுச் சின்னமாக நினைவூட்டுகிறது.

காட்டில் கண்ட நடனக் கலைகளை எல்லாம் எழுதலாமென்ற எண்ணமிருந்தாலும், பத்திரிகையும், சூழ்நிலையும் இடமளிக்க வேண்டும் அல்லவா? "சுதந்திரம் அடைந்து விட்டோம் என்று கொட்டு முரசே" என்று கூறுகிறோம் நாம். ஆனால், நாம் முரசு கொட்டுவதற்கு முன் பல்லாயிரம் ஆண்டுகளாக எந்த அரசனுக்கும் அடிமைகளாக இல்லாமல் என்றும் சுதந்திரமாகவே காட்டில் வாழ்ந்து வருகிறார்கள் இந்தக் காட்டு மக்கள் என்று கூறுவதற்கு நாம் பின்வாங்கக் கூடாது.

## நீலகிரி இருளர் நடனப் பாட்டு

இறுதியாகக் காட்டுவாசிகளின் இசை நயத்தையும் பார்ப்போம். நீலகிரி இருளர் நடனமாடுகையில் பாடும் பாடல் ஒன்று :

1. காடடவாரை காயோ, அல அல மலிக்கைக்காய்
   சூறைவிடுகோ— அல அல மலிக்கைக்காய்
   நெல்லி திம்பா நலிமே அல அல மலிக்கைக்காய்
   நெல்லிக்காய் சூறை அல அல மலிகை

2. ஆணுபிள்ளை புட்டிஞு—ராமபாவஜோ
பெண்பிள்ளை புட்டிஞு ராமபாவஜோ
கோத்தி மொக்கை ஆணுமக்க கலிசிங்கரா—
நொடிரோ
ஐயாவே கலங்காரனேடிரோ.

## குறும்பரின் நடனப் பாட்டு.

குவே நோடு—ஏன் நோடு
குவே நோடு—என் நோடு
இக்கேல் நோடு—மனமேலே, மனமேலே
லா — லா — லா — லா
லா — லா — லா — லா — லா — லா
லிக்கே நோடு — தும்ப
சுரமயிலே சுரமயிலே
தேவிக்கி — கமேட்டிக்கிகே
தேவிக்கி — கமேட்டிக்கிகே

# 4. காட்டில் தோன்றிய ஓவியம்

மனிதன் முதன் முதலில் விலங்குகளின் சித்திரத்தைத்தான் பாறையில் வரைந்தான். ஆதி மனிதன் ஆடையின்றி மலையிலும், காட்டிலும் வாழ்ந்த காலத்தில் சில கொடிய விலங்குகளால் அவனுக்கு அபாயம் நேர்ந்தது. விலங்குகளால் மனிதனுக்கு உண்டாகும் ஆபத்தை மற்றவர்கள் தெரிந்துகொள்ள அந்த விலங்குகளின் உருவப் படங்களைப் பாறையின் மேல் வரைந்து, அதன்மேல் அம்பு, கல்—ஈட்டி இவற்றின் படத்தையும் வரைந்தான். பேசத் தெரியாத மற்றவன் அந்த விலங்கைத் தான் கண்டவுடன் 'கல்—அம்பு எய்ய' ஆரம்பித்தான். ஆனால் பாறையில் ஆதி மனிதன் குச்சியைக் கொண்டோ மற்ற ஆயுதத்தைக் கொண்டோ அழகான மானிட உருவத்தை வரையவில்லை. ஏனென்றால் குச்சியினால் வர்ணம் தீட்டத் தெரியாத காலம் அது.

மனிதன் முதன் முதலில் தனக்குப் பேசத் தெரிந்திருந்தாலும் அல்லது தன் வாயால் ஓசைகளை உண்டாக்கத் தெரிந்திருந்தாலும் கொடிய மிருகங்கள் வருகின்றனவென்று ஏதாவது ஒரு சைகையைக் காட்டி இருப்பான். ஆனால் ஆதி மனிதன் பல்லாயிரமாண்டுகளுக்கு முன்னால் குரங்கும், கரடியும் நிற்பதைப் பார்த்துத்தான் நிற்கவும், நடக்கவும் கற்றுக் கொண்டான். பிறகு பறவைகளின் ஓசைகளையும், விலங்குகளின் கூச்சல்களையும் கேட்டுக் கேட்டுத் தானும் ஓசையிடத் தெரிந்துகொண்டான். பிறகு ஆதிமனிதன் படிப்படியாகத் தான் விரும்பும் பொருளை

ஓசையின் மூலம் வெளிப்படுத்திஞன். தான் விரும்பும் பொருள்களையும், தான் கண்ட விலங்குகளையும் பிறருக்கு சொல்ல அவன் பாறையில் கல்லால் வரைந்து காட்டிஞன். வரைந்த விலங்கைத் தின்ருல் நன்ருக இருக்கும் என்பதைத் தன் கண்களாலும் கைகளாலும் சைகையாகக் காட்டிஞன்.

படிப்படியாகப் பாறையில் அவன் வரைந்த ஓவியமே நாளடைவில் சொற்களையும், எழுத்துக்களையும் வரைய உதவியாக இருந்தன. பல்லாயிரமாண்டுகளுக்குப் பின் மனிதன் தான் விரும்புவதைப்போலெல்லாம் ஓவியம் வரைவதற்காக கட்டுக் கதைகளை உண்டாக்கிக் கொண்டான்.

பல்லாயிரமாண்டுகளுக்கு முன் ஆதிமனிதன் வரைந்த பல ஓவியங்களின் கோடுகளை இன்றும் பல பாறைகளில் காணலாம். அங்ஙனம் வரைந்த ஓர் ஓவியமே இன்று சாத்பூரா மலைச்சாரலில் இருக்கிறது. அது ஒரு கங்காருவின் ஓவியம். அந்த ஓவியத்தின் காலத்தைக் கண்ட பின்தான் ஆதியில் கங்காரு இந்தியாவில் வாழ்ந்த பிராணி என்றும், எக்காரணத்தை முன்னிட்டோ அது, பிற்காலத்தில் ஆஸ்திரேலியாவின் பிராணியாக கருதப்படுகிறது என்றும் கூறுகிருர்கள். இன்று ஆஸ்திரேலியாவின் தமிழ் பேசும் ஆதிவாசிகள் காட்டில் வாழ்கிருர்கள் என்றும், அதனைத் தமிழ் என்று சொல்லத் தெரியாத ஆங்கிலேயர்கள் அது என்னவோ ஒரு 'காட்டு மொழி' என்று கருதிஞர்கள் என்றும் சிலர் கூறுகிருர்கள்.

அன்று ஆதிமனிதன் வரைந்த பல கொடிய விலங்குகளின் பாறை ஓவியங்கள்தாம் அன்று இருந்த விலங்குகளாம். ஆஞல் அவை பூண்டோடு மறைந்துவிட்டன. 'ஓவியம் என்று தோன்றியது?' என்று கேட்டால் மனிதன் என்று உலகில் தோன்றிஞனே அன்றே ஓவியம் தோன்ற ஆரம்பித்துவிட்டது என்று விடை கூறலாம். ஆஞல்

பல்லாயிரமாண்டுகளுக்குப் பிறகுதான் ஓவியம் தோன்றிய தற்குப் பல கட்டுக் கதைகள் படிப்படியாக உண்டாயினவே தவிர, ஓவியத்திற்கு முன் அந்தக் கட்டுக்கதைகள் தோன்றி யிருக்கவில்லை—என்பது உறுதி.

ஓவியம் தோன்றிய கதைகளில் மேடையும், கிரீடமும் கைகால்களில் ஆபரணங்களும் தோன்றியிரு அல்லவா? கதைக்கும் சான்றுக்குக் கூறும் விஷயத்துக்கும் உள்ள பொருத்தத்தை நாம் சற்று ஆராய்ச்சி செய்து பார்க்க வேண்டும் அல்லவா?

ஓவியம் பின்னர் படிப்படியாக வளர்ந்து இன்று சந்திரன், மரம், மேகங்கள், மங்கையர்களின் அழகு முதலி யவற்றை விளக்கும் நிலையை எட்டியுள்ளது. மங்கை யின் ஒவ்வொரு அங்கத்தையும் கப்பல், இலை, மானின் கண், பாம்பின் வளைவு, சிங்கத்தின் இடுப்பு, மீன், சங்கு முதலியவைகளோடு ஒப்பிட்டு ஓவியமாக வரையும் அள விற்கு அக்கலை உயர்ந்துவிட்டிருந்தாலும் அது, அன்று ஆதிமனிதன் வரைந்த ஓவியத்திலிருந்து பிறந்ததுதான் என்பதில் ஐயமில்லை!

# 5. காட்டு யானையும் வீட்டு நாயும்

ஆதி காலத்தில் மனிதன் பேசத் தொடங்கியதற்கு முன்னமே முதன் முதலில் விலங்குகளிடம்தான் பழகினன். அந்த விலங்குகளைத் தான் வேட்டையாடித் தின்னவும் கற்றுக் கொண்டான். அப்படிப் பழகிய விலங்குகளுள் மானிடருடன் நெருங்கிப் பழகிய முதல் மிருகம் நாய்தான். நாயின் செயல்களையும் அதன் அறிவு நுட்பத்தையும் பற்றி நாம், தொன்றுதொட்டுக் கேட்டும், வாசித்தும், நேரில் கண்டும் வருகிருேம். அதைப் போலவே இன்று யானையும் நமக்கு எல்லா வகையிலும் உதவி செய்கிறது. ஆண்டி முதல் அரசன் வரையில் அனைவரும் யானையின் மேல் சவாரி செய்கின்றனர். கோவில் முதல் போர்முனை வரையில் யானைகள் பணி புரிவதைக் காணலாம்.

தமிழ் நாட்டுக்கும் கேரளாவுக்கும் நடுவே இருக்கும் பகுதிதான் வயல் நாடு பகுதி. இது மைசூரிலிருந்து சுமார் 80 மைல் தூரத்திலிருக்கிறது. இப் பகுதியில் மேற்குத் தொடர்ச்சி மலைக் காடுகள் அதிகம். அதில் யானைகளின் கூட்டமும் அதிகம். இங்கு பலதரப்பட்ட ஆதிவாசிகள் வாழ்கின்றனர். ஒவ்வொரு ஆதிவாசியின் குடும்பத்தினரும் ஒன்று இரண்டு நாய்களை வளர்க்கின்றனர். இந்த ஆதிவாசிகள் அருகிலிருக்கும் கிராமங்களுக்கும், வேலைக்காரத் தேயிலைத் தோட்டத்திற்கும் போகும்

பொழுது தங்கள் நாய்களைத் தங்கள் கூடவே அழைத்துச் செல்வதுண்டு. ஏனென்றால் ஆதிவாசிகள் யானைகள் வாழும் காடுகளைத் தாண்டித்தான் நடந்து செல்ல வேண்டும். சாதாரணமாய் இவர்கள் கறுப்பு அல்லது மற்ற வர்ணமுடைய நாய்களையேதான் வளர்ப்பார்கள். சாதாரணமாய் வெள்ளை நிறம் அமைந்த நாய்களை வளர்ப்பதில்லை. காரணம் இரவில் காட்டில் வெள்ளையாக இருக்கும் எந்தப் பொருளையும், ''பளிச்'' சென்று மற்ற மிருகங்கள் பார்த்துவிடும். எனவேதான் இவர்கள் கிராமத்திலிருந்து காட்டுக்குள் போவதாக இருந்தால், தங்களுடைய நாய்களை அழைத்துக் கொண்டு போவார்கள். இவர்கள் அழைத்துச் செல்லும் நாய்கள் எப்பொழுதும் முன்னால் போகும். யானைகள் இருளில் மறைந்து நின்றாலும் சரி, சில மைல் தூரத்தில் யானைகள் இருந்தாலும் சரி; உடனே நாய்கள் குரைக்க ஆரம்பிக்கும். மேலும் தன்னுடைய எஜமானனை முன்னால் போகவிடாது. எஜமானனை மற்றொரு வழியாகப் போகவோ அல்லது மறைந்து கொள்ளவோ முதலில் அறிவிப்புச் செய்து விடும். பிறகு யானையிருக்குமிடத்திற்குச் சென்று யானையின் பின் பகுதிகளைக் கடிக்க ஆரம்பிக்கும். சில சமயங்களில் யானை திடீரென்று தன் எஜமானனின் எதிரில் வந்தால், உடனே அதன் பின் பக்கமாகச் சென்று கடிக்க ஆரம்பிக்கும்; யானை தன் பின்னால் கடிக்கும் நாயைத் தன் தும்பிக் கையில் பிடிக்க நினைத்தால், யானை தன் உடம்பு முழுவதை யும் வளைத்து ஒரு சுற்றுச் சுற்றிய பின்தான் நாயைப் பிடிக்க முடியும். அப்போது நாயும் யானையைச் சுற்றிச் சுற்றி அதன் பின் கால்களைக் கடித்துக் கடித்து வேதனை செய்யும். ''எஜமானன் வெகுதூரம் போய்விட்டான்'' என்று தெரிந்த தும் உடனே யானையிடமிருந்து தப்பி, தன் எஜமானன் போகும் திசைக்கு எதிர் திசையில் யானைக்குத் தெரியும்படி நாய் ஓடும். யானை நாயின் எஜமானன் அந்தப் பக்கம்தான் போயிருக்கிறான் என்று நினைத்து நாயின் பின்னால் ஓடும்.

றாய் அதை மற்ருெரு திசையில் ஓடச் செய்துவிட்டு, புதர் களில் புகுந்து தன் எஜமானனுடன் வந்து சேர்ந்துவிடும். இதைப்போல் யானைகள் இருக்கும் காட்டில் வாழும் ஆதி வாசிகள் பலரை நாய்கள் காப்பாற்றியிருக்கின்றன. மேலும் இரண்டு மூன்று நாய்கள் ஒன்ருகச் சேர்ந்தால் யானையின் கதி அதோகதிதான். யானைகள் கும்பலாக வந்தால், நம்மை ஒன்றும் செய்யா. தனியாக மேயும் யானைதான் மனிதர் களுக்கு ஆபத்தை உண்டாக்குவது. சில சமயங்களில் காடர்கள் காட்டில் யானையின் தொல்லை அதிகமாக இருந்தால் பல நாய்களை அழைத்துக் கொண்டு பந்தங்களைத் தயார் செய்து கொண்டு செல்வார்கள். இப்படி வரும் ஆதிவாசிகள் யானைக்காட்டில் பரவலாக நாய்களுடன் வருவார்கள். யானையைக் கண்டதும் உடனே இரு பக்கங்களிலும் பந்தங் களைத் தயார் செய்த கொம்புகளை நாயின் வாயில் கொடுத்து, அந்தப் பந்தங்களைக் கொளுத்தி விடுவார்கள். யானைகள் கூட்டங்களை நோக்கி, நாய்கள் பரவலாக ஓடும். தீயைக் கண்டதும் யானைகள் கூட்டம் சிதறி வெகு தூரம் ஓடிவிடும். சாதாரணமாய் தீயைக் கண்டதும் யானை, கரடி, காட்டுப் பன்றி முதலிய கொடிய மிருகங்கள் பயந்து ஓட்டம் பிடிப்பது வழக்கம். யானை என்று தெரிந்ததும் உடனே காட்டில் பிரயா ணம் செய்யும் மக்கள் ஏதாவது ஓரிடத்தில் யானையின் கண் களுக்குத் தெரியாமல் மறைந்து கொள்வதுதான் நல்லது. இதைப்போல் ஆதிவாசிகளும், பொதுமக்களும், பஸ் முதலி யவைகளுக்குக் காட்டு யானைகள் தொல்லை கொடுத்தால், உடனே காட்டிலாக்கா அதிகாரிகளிடம் விஷயத்தைக் கூறி, காட்டில் பெரிய குழி வெட்டி அதைப் பச்சைத் தழைகளால் மூடிவிடுவார்கள். யானைகள் அந்தத் தழைகளைக் கண்ட தும் அருகில் வரும்பொழுது, குழியில் விழுந்து விடும். குழியில் விழுந்த யானையைச் சங்கிலிகளால் கட்டி மற்ற யானைகளின் உதவியால் மேலே தூக்குவார்கள். இப்படி மூர்க்கமுள்ள காட்டு யானைகளைப் பிடிக்கும் தொழிலைச் சாதா ரணமாய் மலையாளிகள்தான் செய்வார்கள். யானைப் பாகன்

பேசும் மொழி: 'தாய்த் மடக் கானே: அடே இர்ந்தானே, பீராட்ணே, எணியனே, நீட் வையானே'' என்பது. இப்படிப் பல மொழிகளில் பழக்குவார்கள். (பொருள்: — காலை மடக்கு; படு; துதிக்கையைத் தூக்கு; நில்; காலை நீட்டு)

இப்படி இவர்கள் மைசூர், கோவா, கூடலூரிலிருந்து கேரளாவுக்குக் காட்டு மார்க்கமாக யானையின் கூடவே நடந்து செல்வதுண்டு. அப்படி யானையை அழைத்துக் கொண்டு செல்லும்பொழுது நான்கு, ஐந்து நாட்கள் போவார்கள்.

அப்படி ஒரு காட்டில் தொல்லை கொடுத்த யானையைப் பிடிக்கச் சில ஆதிவாசிகளும், மலையாளிகளும் சமீபத்தில் போகிறார்கள் என்று, நான் கூடலூரில் (மைசூர்) வாழும் ஆதிவாசிகளின் குடிசையில் தங்கியிருந்தபொழுது கேள்விப் பட்டதும், உடனே நானும், பிச்சனும் (சோதிதர்) அந்த யானை பிடிக்கும் கோஷ்டிகளுடன் கலந்து கொண்டோம். அப்படிப் பிடித்த யானைகளை ஊரின் மார்க்கமாக அழைத்து வரும் பொழுது, இரவில் சங்கிலிகளைக் கொண்டு, யானையின் பின் கால்கள் இரண்டையும் பெரிய மரத்தில் கட்டி விடுவார்கள்.

# 6. காட்டில் கண்ணி கொண்டு வேட்டை

தற்காலத்தில் காட்டில் வேட்டையாடும் சிக்காரிகள், வேட்டைக்காரர், ஆதிவாசிகள் முதலியவர்கள் துப்பாக்கி, ஈட்டி, அம்பு முதலியவைகளின் உதவியால் விலங்குகளை வேட்டையாடுகின்றனர். ஆனால் பல்லாயிரமாண்டுகளுக்கு முன்னால் மனிதனுக்கு வேட்டையாட வேண்டும் என்ற உணர்ச்சி எப்படி உதயமானது? என்று சிந்தனை செய்யும் பொழுது அறியவரும் செய்தி நமக்கு மிகவும் வியப்பைத் தரும்.

ஆதிகாலத்தில் ஆதிவாசிகளும், மிருகங்களும் ஒன்றாகக் கூடி யாதொரு வித்தியாசமுமின்றி கானகத்தில் கலந்தே வாழ்ந்தார்கள். அப்பொழுது மனித இனம் கிழங்குகளையும், பழங்களையும் உண்டது காரணம், மனிதனுக்கு வேட்டையாடத் தெரியவில்லை. மேலும் அவனைவிட அவனை எதிர்க்கும் விலங்குகளின் பலம் அதிகமாக இருந்தது.

விலங்குகளை எதிர்த்து மனிதர்கள் கூட்டுச் சேர்ந்து தான் சண்டைபோட வேண்டியதாக இருந்தது. இக்காரணங்களால் அன்றே மனித இனம் கூடி வாழத் தொடங்கியது. இரண்டு, மூன்று பேராகச் சேர்ந்துதான் வேட்டைக்கோ விலங்குகளுடன் சண்டை செய்யவோ சென்றனர். ஆதி மனிதன், ஒரு மிருகம், மற்றொன்றை

எப்படி வேட்டையாடுகின்றது என்பதைக் கவனித்தான்! பதுங்கவும், மரம் ஏறவும் ஆதிமனிதன், மிருகங்களிட மிருந்துதான் கற்றுக் கொண்டான். ஒரு மிருகம் ஆகாரம் உண்ணும்போது, மற்றொரு மிருகம் அத்துடன் சண்டை செய்து அந்த ஆகாரத்தைப் பிடுங்கி உண்பதைக் கண்ட மனிதர்கள் தாமும் ஆகாரம் உண்ணும் விலங்குகளிட மிருந்து, இரண்டு மூன்று பேராகச் சென்று, அந்த மிருகத்துடன் சண்டை செய்து, அதைப் பிடுங்கித் தின்ன ஆரம்பித்தனர்.

சில விலங்குகள் தங்கள் விரோதிகளைக் கொம்புகளால் முட்டியும், தங்கள் ஆகாரத்தை இடித்தும், குத்தியும் உண்பதைக் கண்ட ஆதிமனிதன், தனக்குக் கொம்பு இல்லாததால், அதற்கு பதிலாக, உறுதியான மரக்கிளைகளை உடைத்துத் தன் கையில் பிடித்துக்கொண்டு அதன் உதவி யால் சில விலங்குகளை ஓரே அடியில் அடித்துக் கொலை செய்து, பச்சை இறைச்சியாகவே உண்டான். தனக்கு அதிகம் என்று நினைத்த மீதி இறைச்சிகளைப் பக்கத்திலி ருக்கும் பாறைகளின் மேல், தற்செயலாக வீசிஎறிந்தான். அப்படி வீசி எறிந்த இறைச்சிகள், சூரிய வெப்பத்தால் உலர்ந்து, மறுநாள் உணவு கிடைக்காத காரணத்தால் அவைகளையே எடுத்து உண்டான். பச்சை இறைச்சி களைக் காட்டிலும், உலர்ந்த இறைச்சிகள், ருசியாகவும் மணமாகவுமிருப்பதைக் கண்ட ஆதிவாசிகள், அன்று முதல் மீதியான இறைச்சிகளைப் பதம் செய்து சூரிய வெப்பத்தில் காயவைக்கத் தொடங்கினார்கள். இப்படி இறைச்சிகளைக் காயவைத்து உண்ணும் பழக்கம், ஆதிமனிதன் காலம் முதல் இன்று காடுகளில் வாழும் ஆதிவாசிகள் வரையில் தொடர்ந்து இருந்து வருவதைக் கண்டேன்.

இந்த இறைச்சிகளையே இன்று நாகரீகமடைந்தவர் கள் உப்புடன் சேர்த்து "உப்புக் கண்டம்" என்று வெயிலில் காயவைத்து டின்களில் அடைத்து வைத்துக்

கொள்ளுகின்றனர். பாறைகள் நிறைந்த இடங்களுக்கு வந்து வாழ்ந்த ஆதிவாசிகள், விலங்குகளைப் பாறைகளைக் கொண்டு அடித்துக் கொலை செய்து உண்டு வந்தார்கள்.

சில இடங்களில் வாழ்ந்த ஆதி மனிதர் புதர்களில் பதுங்கிப் படுத்திருக்கும் மிருகத்தை, "ஓசைப்படாமல் அதன் அருகில் சென்று, திடீரென்று அதன் மேல் பாய்ந்து பிடித்துக் கொண்டு, தம் கையிலிருக்கும் கல்லாயுதத்தால் அதைக் குத்திக் கொலை செய்து உண்டு வந்தனர். பாலைவனப் பகுதிகளில் வாழும் சில ஆதிவாசிகள் முயல், முள்ளம் பன்றி, சிறு சிறு காட்டுப் பன்றிகள், முதலியவை கள் வாழும் துவாரங்களுக்கு அருகில் சப்தம் செய்யாமல் மணிக்கணக்கில் பதுங்கி உட்கார்ந்திருப்பார்கள். பொந்து களிலும், வளைகளிலும் வாழும் பிராணிகள் ஆகாரம் தேடு வதற்கு வெளியில் வந்ததும் உடனே அவற்றின் மேல், பெரிய பாறைகளைப் போட்டு அழுத்திப் பிடித்துக் கொண்டு, கொன்று சாப்பிடுவார்கள். சில இடங்களில் வாழும் ஆதிமக்கள் கல்லினால் செய்த கூர்மையான ஆயுதங் களைக் கொம்புகளுடன் கட்டி, ஈட்டிபோல் செய்து அதன் உபயோகத்தால் விலங்குகளைக் குத்திக் கொன்று விடுவார் கள். சிலர் மிருகங்களின் விலா எலும்புகள், மீனின் விலா எலும்புகள் முதலியவைகளை ஈட்டிபோல் செய்து வேட்டை யாடியும் வாழ்ந்தார்கள். மேலும், சில மலைப்பிராந்தியத் தில் உச்சியில் வாழும் ஆதி மக்கள் காட்டு விலங்குகளை மலையின் உச்சியில் மடக்கி ஓட்டிக் கொண்டு வருவார்கள். பிறகு அந்த விலங்குகள், மலையின் உச்சியில் போக இட மில்லாமல் மலையின் உச்சியிலிருந்து அப்படியே கீழே குதிக்கும். அப்பொழுது ஆதி மக்களில் சிலர், அந்த மலை களின் கணவாய்களில் வந்து காத்திருப்பார்கள். கீழே விழுந்த விலங்குகள் கால்கள் முறிந்து, நடக்க முடியாமல் தவிக்கும்பொழுது ஓடிச்சென்று பிடித்துக் கொள்வார்கள். சிலர் வளையில் வாழும் பிராணிகளை அந்தந்த வளையில் கைவிட்டோ அல்லது புகை போட்டு அவைகளை வெளியில்

ஓடச்செய்தோ வேட்டையாடுவதுண்டு. இன்னும் சிலர் பலகை போலிருக்கும் பாறைகளைச் சாய்த்து நிற்கவைத்து அப்பாறைகளைத் தாங்கி நிற்கக் குச்சிகளைப் பொருத்தி வைப்பார்கள். பாறையின் கீழ்ப்பகுதியில் ஆகாரம் ஏதாவது போடுவார்கள். பறவைகள் அந்த ஆகாரத்தைச் சாப்பிட வரும்பொழுது, பறவைகளின் கால்கள், குச்சியில் பட்டதும் உடனே பாறை கீழே விழுந்துவிடும். ஆகாரம் பொறுக்க வந்த பறவை பாறையின் அடியில் சிக்கிக் கொள்ளும். வலை வைத்தும், கண்ணி கட்டியும் வேட்டையாட மனிதன் எப்படி கற்றுக்கொண்டான்? என்பதே ஒரு தனிக்கலை. காடுகளில் சஞ்சரித்த மனிதன், மிருகம், பறவைகள் முதலியவைகளின் கால்கள், மரத்தின் வேர்களிலோ, விழுதுகளிலோ கொடிகளிலோ சிக்குண்ண அவைகள் சிக்குண்ட பாகத்தை, அதனிடமிருந்து எடுக்கப் பாடுபடுவதைக் கண்டு தானும் தனக்கு வேண்டும்போது, வேண்டிய இடத்தில், வேர்களைப் போல் மற்ற வேர்களைப் பின்னி வேண்டிய இடங்களில் அவைகளை வைத்து பிராணிகளைப் பிடிக்கக் கற்றுக் கொண்டான். பிறகு ஓலைகள், குதிரையின் வால் மயிர் முதலியவைகளாலும், இறந்த விலங்குகளின் நரம்புகளைக் கொண்டும் வலை பின்னி விலங்குகள் வரும் வழியில் வைத்தான். நாகரீகம் வளர்ந்தபின் இன்று கம்பிகளால் கண்ணி கட்டுகின்றான். கம்பிகளை வரிசை வரிசையாகச் சுருக்கு விழும்படி செய்து அதை நீளமான கம்பியில் கட்டி முயல், காட்டுப் பன்றி, காட்டாடு, காட்டுக் கோழி, முதலியவைகள் வருமிடத்தில் இரண்டு முனைகளையும் எதிலாவது கட்டி விடுவார்கள். தரையிலிருந்து சுமார் ஓரடி உயரத்தில் கண்ணி கட்டுவார்கள். இதை இரவில் கட்டிவிட்டு வீட்டுக்கு வந்துவிடுவார்கள். அடிக்கடி இரவில் விளக்குகளுடனோ அல்லது தீப்பந்தங்களுடனோ போய் பார்க்க வேண்டும். காரணம் கண்ணியில் சிக்கிய மிருகத்தை மற்ற மிருகங்கள் வந்து சாப்பிட்டு விட்டுப் போய் விடும் அல்லவா? பிறகு சிக்கிய விலங்குகளைத் தனியாக எடுத்துக் கொள்வார்கள். இப்படிக் காட்டில் கண்ணி வைத்து

வேட்டையாடுவதைப் பற்றி ஒரு நாடோடிப் பாடலே இருக்கிறது.

''காட்டிலே கண்ணி குத்தி'' முயல், பன்றி, பறவைகள் முதலியவைகளை வேட்டையாடிப் பிடிக்கும் பழக்கம் உலகில் வாழும் பல வேடர்களிடம் நீண்ட காலமாக இருக்கிறது. ஒரு வேடன் தன் காதலியை அடைந்த விதத்தை கண்ணி வேட்டைக்கு ஒப்பிட்டுக் கூறுகிருன் பாருங்கள்.

''காடைக்குத் தான் கண்ணிக் குத்தி
கரையோரம் போயிருந்தேன்.
காடை படும் கண்ணியிலே—ஒரு
சிறுத்த குட்டி மாட்டிக் கிட்டா!
சிட்டுக்குந்தான் கண்ணி குத்திச்
செடியோரம் போயிருந்தேன்,
சிட்டுபடும் கண்ணியிலே—ஓர்
சிவத்த குட்டி மாட்டிக்கிட்டா''

இப் பாடலை சாதாரணமாய் கிராமங்களிலும், மலைப் பிராந்தியத்திலும் பலர் பாடுவதை இன்றும் நாம் கேட்கலாம்.

அப்படி அன்று வைத்த கண்ணியில் அன்று கிடைத்தது முயல்தான்.

முயல் சாதாரண மிருகமாக இருந்தாலும் சிறிய ஓசை கூடக் கேட்கும் படியான கூர்மையான காதுகளை உடையது. முயல் மேட்டிலிருந்து, கீழ் நோக்கி ஓடினுல் சாதாரணமாய்ப் பிடித்துவிடலாம். முயல் இறைச்சி உடம்புக்கு நல்லது. முயலின் குருதியைப் பாரிசவாயு உள்ளவர்கள் கால்களுக்கும், கைகளுக்கும் தடவிக் கொண்டால் அது குணமகும். ஒரு முயல் மூன்று ரூபாய் முதல் ஐந்து ரூபாய்வரை விலை போகும். சிலர் முயல்களை வீடுகளில் வளர்க்கின்றனர்.

# 7. மலைக்குகையில் வாழும் சந்நியாசி

கடந்த பல்லாண்டுகளாக நான் மலைகளிலும் காடு களிலும் அலைந்து ஆதிவாசிகளைக் காணச் சென்றபொழுது சில சந்நியாசிகளைச் சந்தித்ததுண்டு. அப்படி மலையில் சந்தித்த பலரில், சிலரை நான் நகரங்களில் சந்தித்த துண்டு. அப்படி சந்தித்தவர்களில் ஒருவரை நான் அடிக் கடி பல நகரங்களில் சந்தித்துப் பேசுவேன்.

நான் அவரைச் சந்திக்கும்பொழுதெல்லாம் அவர், "இந்த ஊரிலிருக்கும் கோவிலைக் கண்டு ஆண்டவனைக் காண வந்தேன்" என்று கூறுவார். அவருடைய தெய்வ பக்தியைக் கண்டு, அவர் குழந்தை முதல் பிரம்மச்சாரி யாக இருந்து, ஐம்புலன்களையும் அடக்கியுள்ளதுபோல் ஒரு சக்தி நமக்கு வரவில்லையே என்று நான் நினைத்த துண்டு. ஆனால் அவர் நகரங்களில் சிலரிடம் மட்டும் தமக்கு வேண்டிய பண உதவியைக் கேட்பதுண்டு. சில சமயங்களில் நான் அவரிடம் "உங்கள் மலைக்கு நான் எப் பொழுதாவது வருவேன்'' என்று சொல்லும்பொழுது, "கட்டாயம் வாங்கோ'' என்று அவர் கூறுவார். "இந்தியா வில் பிச்சைக்காரர்கள் அதிகம். அவர்களை ஒழிப்பது எப்படி?'' என்று பல அதிகாரிகள் சிந்தனை செய்கின்றனர். "ஆனால் உண்மையில் பிச்சைக்காரர்களையும், லஞ்சத்தையும் உலகிலிருந்தே ஒழிக்க முடியாது" என்பது என் கருத்து.

அதிலும் இதைப்போல் பக்தியுள்ள பிச்சைக்கார சந்நியாசி களை விட்டு விட வேண்டும் என்பது என் எண்ணம். பிச்சைக் காரர்களில் பலவகை உண்டு. எப்படி? எங்கே? எந்த நாட்களில் பிச்சை எடுக்கவேண்டும் என்று கற்றுக் கொள் வதும் ஒரு தனிக் கலை.

கடலில் வாழும் மச்சங்களில் எப்படிப் பல வகைகள் இருக்கின்றனவோ அப்படியே பிச்சைக்காரர்களிலும் பல வகையினர் இருக்கின்றனர். உண்மையில் பண்டைக் காலத்தில் பெரியவர்கள், ''பாத்திர மறிந்து பிச்சை போடு'' என்று கூறினர்களே அது எவ்வளவுக்கு உண்மை என்பதை என் வாழ்க்கையில் அனுபவ வாயிலாகத் தெரிந்து கொண் டேன். ஆனல் இந்தச் சந்நியாசி மட்டும்; ''உண்மை பக்தன் வேறு வழியின்றி பிச்சை எடுக்கிருர்'' என்று பலரிடம் கூறுவதுண்டு. இந்தச் சந்நியாசி நகரங்களில் சும்மா பிச்சை எடுப்பதில்லை. எல்லா மதத்தினர்களுக்கும் சந்தோஷமுண்டாகும்படி எல்லா மொழிகளிலும் எல்லா ஆண்டவரையும் பற்றிச் சேர்த்துப் பாடுவது வழக்கம். இதனுல் பலரின் அன்பை அவர் பெற்றிருந்தார்.

இப்படிப் பல நாட்கள் அவரை எனக்குத் தெரிந்த தால், அவருடைய உருவமும், அவர் வாழும் மலையின் வழியும் எனக்கு நன்கு நினைவிலிருந்தன.

சில மாதங்களுக்கு முன் அவர் தங்கியிருந்த மலைக்குச் சென்றேன். சந்நியாசி கூறிய வழிகளின் அடையாளத்தை வைத்துக் கொண்டு மேற்குமலைத் தொடரில் வயநாட்டுப் பகுதியில் பிரயாணமானேன்.

ஒற்றையடிப் பாதையின் வழியாக மலையின் உச்சிக்குச் சென்றேன். அங்கே குடிசை ஒன்றுமில்லை. ஆதிவாசிகளு மில்லை. மலைவாசிகளுமில்லை. ஆனுல் வாழை மரங்கள் மட்டும்

சில இடங்களில் சிதறுண்டு வளர்ந்திருப்பதைக் கண்டேன். மனிதர்கள் இல்லாவிட்டால் காட்டில் வாழை மரங்கள் வளர்வதற்குக் காரணம் என்ன, என்று நினைத்துக்கொண்டே வாழைகள் இருக்குமிடத்திற்குச் சென்றேன். வாழையின் அருகில் சென்றதும் ஒரு பெரிய பாறையைக் கண்டேன். பாறையின் ஒரு பகுதிக்குள் குகையையும் கண்டேன். சில துணிகள் வேலியில் காய்ந்து கொண்டிருந்தன.

''யார் ஐயா வீட்டில்?'' என்று குரல் கொடுத்தேன்.

''உடனே உள்ளே இருந்து எனக்கும் பழக்கமான சந்நியாசி வெளியில் வந்தார். என்னைக் கண்டதும் ஆச்சரியமடைந்து ''வாங்கோ!'' என்று அழைத்தார்.

நானும் குகைக்குள் நுழைந்தேன். குகையிலிருக்கும் அந்தச் சந்நியாசியின் பொருள்களை எல்லாம் பார்த்துக் கொண்டே இருந்தேன். திடீரென்று நடுவயதுடைய இரு மங்கையர்கள் தண்ணீர்ப் பானையுடன் குகைக்குள் நுழைந்தார்கள்.

அங்கே என்னைக் கண்டதும், ஆச்சரியமடைந்தார்கள். உடனே சந்நியாசி, ''அவர்கள் இருவரும் என்னுடைய தங்கைகள்'' என்று கூறினர். நான் உடனே போகிறேன்! எழுந்தேன். சந்நியாசி, ''வேண்டாம் இன்றிரவு இங்கே தங்கிவிட்டுப் போகவேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார். அன்றிரவு மாலை ஐந்து மணிக்கெல்லாம் குகையின் வாசற்படி அடைக்கப்பட்டது. மாலை சுமார் ஐந்து மணி முதல் மறுநாள் காலை சுமார் 7 மணி வரையில் வெளியில் வரமுடியாதாம். இரவில் மலஜலம் கழிக்க வேண்டியதாக இருந்தால் அதற்குத் தனி இடம் குகைக்குள் இருக்கிறது.

இவைகளை எல்லாம் கண்டதும், 'இந்த இடத்தை எப்படித் தேர்ந்தெடுத்தார் என்றும், இவர் ஏன் இங்கே வாழ்கிறார், என்றும் இந்த இரு மங்கையர்களும் ஏன் இவருடன் வாழ்கிறார்கள் என்றும், நாம் ஏன் இங்கே வந்தோம்?' என்றும் பலவாறு சிந்தித்தேன். சரி வந்து விட்டோம், மேற்கொண்டு நடப்பதைக் கவனிப்போம். என்று அமைதியுடன் இருந்தேன்.

அன்றிரவு சாப்பிட்ட பின் எனக்குப் படுக்கை போடப்பட்டது. அவர்கள் மூவரும் குகையின் மற்றொரு பக்கத்தில் படுத்துக் கொண்டார்கள். ''இரவில் நான் சிறு நீர் கழிக்க ஓரிருமுறை எழுந்து போவது வழக்கம்'' என்று கூறினேன். ''தாராளமாகப் போகலாமென்று!'' கூறினார், சந்நியாசி.

அன்றிரவு எப்படிக் கழியுமோ என்று நினைத்துக் கொண்டேன். அன்றிரவு எனக்கு மட்டும் ஆகாரம் தனியாக வைத்தார்கள். வெகு நேரம் தூக்கம் வரவில்லை. பல சிந்தனைகள் என் உள்ளத்தில் உதயமாயின.

''என்மேல் இந்தச் சந்நியாசி சந்தேகப்பட்டு இந்த இடத்திலேயே தீர்த்துக் கட்டி விட்டால் என்ன செய்வது'' என்று என் உள்ளம் நினைத்ததும், எனக்குத் தூக்கம் வருமா? சுமார் இரவு பத்து மணி இருக்கும், சந்நியாசியும் மற்ற இரு மங்கையர்களும் குறட்டை விட்டுக் கொண்டு தூங்கும் ஓசை கேட்டது. மெதுவாக எழுந்து, அவர்கள் காட்டிய இடத்திற்குச் சிறு நீர் கழிக்கச் சென்றேன். அப்படிப் போகவேண்டுமானால் அவர்கள் படுத்திருக்கும் இடத்தைக் கடந்துதான் போக வேண்டும். அப்படி போகும் பொழுது என்னுடைய டார்சு லைட்டின் வெளிச்சத்தில் சந்நியாசி தூங்கும் காட்சியைக் கண்டதும் என் உடல் சிலிர்த்தது. நான் இவரைத் தேடிக் கொண்டு வந்ததே ஒரு பெரிய முட்டாள்தனம் என்று நினைத்துக் கொண்டேன்.

"ஒரு மங்கையின் வயிற்றின்மேல் சந்நியாசியின் தலையும், மற்றொரு மங்கையின் மேல் சந்நியாசியின் கால்களும் இருந்தன. இக் காட்சியைக் கண்டதும், அந்த இரு மங்கையர்களும் சந்நியாசியின் மனைவிமார் என்று தெரிந்து கொண்டேன். மேலும், மதுவின் வாடையும் அடித்துக் கொண்டிருந்தது. இரவு முழுவதும் தூங்காததால், காலையில் அவர்கள் எழுந்த பிறகுதான் எழுந்தேன். அப்படி எழுந்ததும் நன்மைக்கே என்று நினைத்துக் கொண்டேன். எழுந்ததும் கை கால்களைச் சுத்தம் செய்து கொண்டேன். காலையில் எனக்கும் சந்நியாசிக்கும் அரிசிக் கஞ்சி கொடுத்தார்கள். இருவரும் சாப்பிட்டோம். சந்நியாசியின் உதவியால் காட்டைக் கடந்து வந்து விட்டேன். "மறுபடியும் இரண்டு நாட்களில் வருகிறேன்" என்று சந்நியாசியிடம் சொல்லி விட்டுச் சென்னை வந்து சேர்ந்தேன்.

"நான் சந்நியாசியின் குகையில் இருந்த பொழுது ஏன் பயந்தேன்" என்று தெரியுமா? நான் காடுகளில் பல சந்நியாசிகளைக் கண்டதுண்டு. அவர்களில் எல்லோருமே பக்தர்கள் அல்லர். நகரங்களில் கொலை செய்து விட்டுச் சென்று காடுகளில் சந்நியாசி போல் இருப்பவரும் உண்டு. அப்படிப்பட்ட பலரைச் சமீபத்தில் போலீசார் பிடித்துமிருக்கின்றனர் அல்லவா? அப்படி அந்தச் சந்நியாசிகள் என்னைப் 'போலீசார்' என்று நினைத்துவிட்டால், தனிமையாக இருக்கும் எனக்கு ஆபத்து உண்டாகும் அல்லவா? இதைப்போல் சில இடங்களில் நான் சிக்கிக் கொண்டால் மிகுந்த பொறுமையுடன் இருந்து, நல்ல யோசனை செய்து அவர்கள் சந்தேகப் படாதபடி நடந்து கொண்டு அங்கிருந்து நாம் வெளியேற வேண்டும். அந்தச் சமயங்களில் சில காடுகளில் குடிப்பதற்கு மது கொடுப்பார்கள். அதை நாம் சாப்பிடாமல் இருப்பது தான் நல்லது. நாமும் குடித்தால், நம்முடைய குடிபோதையில் எதையாவது உளறி விட்டால் நம் உயிருக்கே ஆபத்தாக முடியும். மேலும், சில காடுகளில் கள்ளத் தனமாகச் சாராயம் கடத்துவார்கள். அந்த நிலையில் எல்லாம் நாம்

மிகுந்த ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கடத்தல் விஷயங்களில் அவர்கள் நம் மேல் சந்தேகப்பட்டாலும் ஆபத்து உண்டாகும் என்பது திண்ணம்.

இதைப்போல் போலி சந்நியாசிகள் காடுகளில் மட்டு மல்ல, பல நகரங்களிலும் ஏராளமாக வாழ்ந்து கொண்டிருக் கின்றனர் என்பதை உணர்ந்தேன்.

# 8. தேனைக் கண்ட முதல் மனிதன்

தற்காலத்தில் பல அரசாங்கம் குழுக்கள் அமைத்துத் தேனைச் சேகரிக்கும் விதத்தை விரிவாக்கத் திட்டமிடுகின்றன. பல அறிஞர்கள் தேனின் உபயோகத்தைப் பற்றி பல நூல்கள் இயற்றி இருக்கின்றனர்.

ருஷ்யா நாடு தேனைப் பற்றிச் சுமார் ஆயிரம் பக்கங்கள் கொண்ட ஒரு நூலே வெளியிட்டிருக்கிறது. "தேன் பெட்டி"—இன்று சாதாரணமாய் ஒவ்வொரு வீட்டிலுமிருக்கின்றது. மேலும், தேன் மனித உடலுக்கு என்னென்ன நன்மை செய்கின்றதென்று எல்லா வைத்திய நூல்களிலும் இன்று வாசிக்கலாம். மேடையிலும் கேட்கலாம். இன்று எந்த நாட்டில் கிடைக்கும் தேன் உயர்ந்த ரகத் தேன் என்றும், எந்த நாட்டின் தேனீக்கள் உயர்ந்த ரகத் தேனீக்கள் என்றும் ஆராய்ச்சி செய்து பல நூற்றுக்கணக்கான நூல்கள் வெளி வந்துள்ளன. ஆனால் முதன் முதலில் மனிதன் எப்பொழுது தேனைக் கண்டுபிடித்தான்? மரத்திலோ பாறையிலோ இருக்கும் தேன்கூட்டில்தான் தேன் இருக்கிறது என்றும், அதைச் சாப்பிடலாம் என்றும், அதை எப்படி எடுப்பது? எப்பொழுது எடுக்க வேண்டும்? என்றும் பல்லாயிரமாண்டுகளுக்கு முன் மானிடன் எங்ஙனம் அறிந்து கொண்டான்? என்ற செய்தியை இதுவரையில் ஒருவராவது தம் நூலில் எழுதியதில்லை. இந்தச் சிந்தனை என் மனத்தில் பல்லாண்டுகளாகக் குடி கொண்டிருந்தது. அதைப் பற்றிப் பல நூல்களில் துருவித் துருவிப் பார்த்

தேன். எனக்குச் சரியான விடை கிடைக்கவில்லை. பிறகு காடுகளில் காடர்களிடம் கேட்ட பின்தான் மனிதன் பல்லாயிரமாண்டுகளுக்கு முன் எங்ஙனம் தேனைக் கண்டிருப்பான் என்பதற்கு ஒரு முடிவு கண்டேன். தேனுக்காகப் பல விலங்குகளின் ஆகாரங்களை ஆராய்ச்சி செய்ய வேண்டிய நிலையை நான் அடைந்தேன்.

சுமார் பத்தாயிரம் இருபதாயிரம் ஆண்டுகளுக்கு முன் மக்கள் அலைந்து வேட்டையாடவும், தங்களிடமிருக்கும் ஆடு மாடுகளுக்கு வேண்டிய புல்பூண்டுகளுக்காக கூட்டங் கூட்டமாக நாடோடிகளாக அலைந்த காலத்தில் அவர்களுக்கு மிகவும் உதவியாக இருந்த மிருகம் நாய்தான். நாய் தேனை நக்காது. சுத்தமான தேனைக் கண்டால் நாய் ஓடி விடும். காட்டில் மரம் ஏறும் மிருகங்கள் குரங்கு, கரடி முதலியன. கரடி மரம் ஏறித் தேன்கூட்டை உடைத்துத் தேன் குடிக்கும் பழக்கம் உடையது. தேனீக்கள் கரடியைக் கொட்ட முடியாத அளவுக்கு அதன் தேகம் ரோமத்தால் மூடியிருக்கின்றது. மேலும், கரடி தேனைக் குடித்தபின் போதை உண்டாகி, மரத்தின் மேலிருந்து அப்படியே பந்துபோல் சுருண்டு கீழே, "தொப்" என்று விழும். தேன் குடித்த போதையிலிருக்கும் கரடியை அடித்துக் கொல்வது மிகவும் சுலபம். இன்றும் இவ்விதமாகப் பல கரடிகளைக் காட்டில் அடித்துக் கொன்றுவிடுகின்றனர்; பல்லாயிரமாண்டுகளுக்கு முன் மனிதன் தேனுண்ட கரடியைக் கண்டான். பிறகு தானும் தேன் குடிக்கவும், எடுக்கவும் பழகினான், மனிதன் நாகரிகம் அடைய அடையச் சுமார் கி.மு. 6000 ஆண்டுகளுக்கு முன்னே கரடி தேன் குடிப்பதைக் கண்டதாகக் குறிப்பு எழுதினான். மேலும் காட்டில் கரடிகள்தான் தேன் குடிக்கின்றனவென்று கூறுவதற்கில்லை. கரடியைப் போல் குரங்குகளும் தேனைக் குடிக்கின்றன. ஆனால் பல்லாயிரமாண்டுகளுக்குப் பின் யானையைப் பற்றிச் சில குறிப்புகளைக் கம்பன் எழுதியுள்ளான்.

காரணம் யானையைப் பற்றி மனிதன் தெரிந்து கொண்டது பிற்காலத்தில்தான். யானையிடம் மனிதன் நெருங்கிப் பழகுவது அவ்வளவு லேசான காரியமில்லையல்லவா?

ஒரு மலையடிவாரத்திலே மரங்கள் அடர்ந்த சோலைகளும், காடுகளும் இயற்கையின் எழிலை அள்ளி அள்ளி வீசிக் கொண்டிருந்தன. அந்த மரங்களின் கிளைகளில் தேன் கூடுகள் பெரிய வௌவால்கள்போல் தொங்கிக் கொண்டிருந்தன. அவைகளைச் சுற்றிச் சுற்றித் தேனீக்கள் நடனமாடும் காட்சி அழகாக இருந்தது. நல்ல தேன் "கம—கம" வென்றும் மணம் வீசியது. அந்தச் சோலைக்கு ஒரு பெண் யானையும் ஓர் ஆண் யானையும் வருகின்றனவாம். கருவுற்றிருந்த தன் அருமைக் காதலிக்குத் தேன் கொடுப்பது நலம் என்று விரும்பிற்று ஆண் யானை. பெண் யானைக்குத் தேன் கொடுத்து தேனுண்ட மயக்கத்தில் உள்ள பிடியுடன் களிறு கொஞ்சுவதுண்டு. அந்த நினைவு களிற்றுக்கு வந்தது. ஒரு சிறு தினையைப் பறித்தது. அதன் உதவியால் தேன் கூட்டைக் கலைத்தது. தேனீக்கள் பறந்து கொண்டு வெளியில் சென்றன. தூய தேனைத் துதிக் கையால் எடுத்தெடுத்துக் காதலியான பிடியின் வாயில் ஊட்டியது. தேனுண்ட இன்ப மயக்கத்தில் பிடி, களிற்றினை அணைத்து நின்றது. அக்காட்சியைத் தமிழ்க் கம்பன் கண்டான். வடித்தான். காவியமாய்ப் பல ஆண்டுகளுக்கு முன்னால்.

"உருகு காதலில் தழை கொண்டு
மழலை வண்டு ஓச்சி
முருகு நாறு செந் தேனினை
முழை நின்றும் வாங்கிப்
பெருகு சூல் இளம் பிடிக் கொரு
பிறை மருப்பு யானை
பருக வாயினில் கையின் நின்று
அளிப்பது பாராய்"

என்றான் கம்பன்.

கம்பன் இக் காட்சியைக் காண்பதற்குப் பல்லாயிர மாண்டுகளுக்கு முன்னே காட்டில் அலைந்து திரியும் ஆதி வாசிகளும், மலைவாசிகளும் காணுமலா இருப்பார்கள். அப்படிக் கண்டவர்கள் பல கோடி மக்கள் அல்லரோ! பல்லாயிரமாண்டுகளுக்கு முன் உலகின் முதன் முதலில் நாகரிகத்தின் உச்சிக் கட்டத்தில் எகிப்து நாடு இருந்தது என்று சரித்திர அறிஞர்கள் முடிவு கூறியுள்ளனர்.

உலகில் ஓராயிரம் ஆண்டிற்கு எந்த உணவுப் பொருளையாவது கெடாமல் வைத்திருக்க முடியுமா? ஓரே யொரு உணவுப் பொருளை மாத்திரம் இவ்வாறு சேமித்து வைக்க முடியும். அதுதான் தேன். 1923-ல் எகிப்திய, "பரோவாடுட்டன் கமோனின்" பிரமிடில் ஆராய்ச்சி நடத்திய விஞ்ஞானிகள், 3300 ஆண்டுகளுக்குமுன் அங்கு வைக்கப்பட்டிருந்த தேன் கட்டியைக் கண்டெடுத்தனர். இதற்குக் காரணம் தேனில் அடங்கியுள்ள அற்புத பாக்டீரி யாக்களின் தன்மையேயாகும். மேலும், புரையோடிப் (குழிப்புண் அல்லது உள்ளோடும் புண்) போன காயங் களையும், தீக் கொப்புளங்களையும் சுத்தமான தேன் மூலம் குணப்படுத்தலாமென்பது நிலை நாட்டப்பட்டுள்ளது. எந்தக் காயங்கள் மீதும், புண்கள் மீதும் தேனை வைத்துக் கட்டினுல் அவை துரிதமாக ஆறி விடுகின்றன என்பது நான் இன்று பல காடுகளில் காடர்களிடம் கண்ட உண்மை. காயங்களைக் குணப்படுத்துவதைப் போலவே, "டைபாய்ட் காய்ச்சலை எட்டுமணி நேரத்திலும், வயிற்றுப் போக்கை (டிசண்ட்ரீ) பத்துமணி நேரத்திலும் மற்றும் பல விஷக் கிருமிகளை அதற்கும் குறைவான நேரத்திலும் நீக்கிக் குணப்படுத்தும் தன்மையுடையது தேன் என்று தற்காலத் தில் பல துறையில் பணியாற்றும் வைத்திய நிபுணர்கள் கூறுகின்றனர். மேலும், பண்டைக் காலத்தில் பாபிலோனி யர்கள் இறந்தவர் உடலைத் தேனிலிட்டுப் பல்லாண்டு கள்கெட்டுப் போகாமல் பாதுகாத்தார்கள். இன்றும் இமய மலைச் சாரலிருக்கும் சில மலைவாசிகள் தங்கள் இனத்தில்

இறந்தவர்களின் வயிற்றிலிருக்கும் குடல் முதலியவைகளை நீக்கிவிட்டு வயிறு நிறைய உப்பும், தேனும் கலந்து கொட்டித் தைத்து விடுகின்றனர். பிறகு உடல் முழுதும் தேனைத் தடவி சுமார் இரண்டு, மூன்று ஆண்டுகள் பிணத்தை வைத்திருக்கின்றனர். இது நான் நேரில் கண்ட உண்மை. மேலும், ஆதி மக்கள் பேசத் தெரியாமல் இருந்த பல்லாயிரமாண்டுகளுக்கு முன் மொழியை ஓவிய முறையில் எழுதினார்கள் என்பது அறியப்படுகிறது. வீரம், கோபம், தந்திரம், அறிவு முதலிய போன்ற மனத் தோற்றத்தளவிலுள்ள குணங்களை விளக்க ஆதிமனிதன் படாத பாடுபட்டான். இவ்விதமான செய்தியை எப்படி விளக்குவது?

ஆகவே ஆதிமனிதன் ஆராயும் தன்மைக்கும், புத்தி கூர்மைக்கும், "ஈயின் உருவமும்" விடாமுயற்சிக்குத் "தேனீயின் உருவமும் வெற்றிக்குக், கருடனுடைய உருவமும் அறிகுறியாகக் கொண்டு ஓவியம் வரைந்து விளக்கினான். தேனீக்களின் சுறுசுறுப்பையும் தேன் ஒரு சாப்பிடும் திரவ உணவு என்பதையும், ஆதிமனிதன் பேசத் தெரியாதவனாய் இருந்தபொழுதே கண்டறிந்தான் என்று நினைக்கும்பொழுது தேனை மனித இனம் எப்பொழுது கண்டறிந்தது என்று காலத்தை எப்படி வரையறுத்துக் கூறமுடியும்!

ஆனால் ஒன்று, தேனீக்கள் சேர்ந்து கொட்டினால், உடனே நாம் இறந்து விடுவோம் என்பது திண்ணம். இவ்வளவு அருமையானது தேன் என்று தெரிந்துதான் திரும்ணமானதும் தம்பதிகளைத் "தேன்நிலவு" போய்த் தேனை உண்டு இன்புற்று வாருங்கள் என்று அனுப்புகிறார்கள் போலும்.

சரி நாமும் இனிமேல் தேனைச் சாப்பிட்டு உடம்புக்கு ஆரோக்கியத்தைத் தேடுவோம்!

# 9. மனிதனை இழுக்கும் குகை

'தமிழ்—மலையாளி'களைக் காணவேண்டும் என்று திருப்பத்தூரிலிருந்து, பஸ்ஸில் சென்றேன். 'கூட் ரோடு' என்னும் இடத்தில் பஸ்ஸை விட்டு இறங்கியதும், "அந்த வழியாக நேராகப் போங்கள்" என்று சர்வ சாதாரண மாகக் கூறினார் டிரைவர். 'நன்றி' என்று அவருக்குக் கூறிய பின் செம்மண் பாதையில் தனிமையில் நடந்தேன். என் மூட்டைகளையும், பைகளையும் நானே தோளிலும், கையிலும் தூக்கிக் கொண்டு போகும் காட்சியைக் கண்ட ஒருவர், "நீங்கள் கிறிஸ்துவ வேதம் போதிக்க மலை மலை யாகப் போகிறீர்களா?" என்று கேட்டார்.

"இல்லை! நான் ஓர் எழுத்தாளன். நான் காட்டு மக்களைப் பற்றிய பழக்கவழக்கங்களைப் பற்றிய செய்தி களை, சுமார் முப்பதாண்டுகளாகக் காடு, மலை, வனந்தரங் களையெல்லாம் கடந்து பிரயாணம் செய்து, விஷயங்களைச் சேகரித்து எழுதுகிறேன்" என்று கூறிக் கொண்டே நடந்தேன். வெகு தூரத்திலிருந்த மாட்டுக்காரப் பிள்ளை களை வழி கேட்டுக் கொண்டே மலையடிவாரம் போய்ச் சேர்ந்தேன். இனி காட்டின் எல்லையில் கால் வைக்க வேண்டும். ஆகையால் ஆண்டவனை நினைத்து ஜபம் செய்தேன். பிறகு மெதுவாக நடந்தேன்.

'ஒற்றையடிப் பாதையில்தான் நடக்கவேண்டும், ஒரே வழிதான்' என்று கூறியதால் அந்த வழியில் நடந்து போக ஆரம்பித்தேன். சுமார் நான்கு மணி நேரம்

நடந்தபின் எனக்குப் பின்னால் யாரோ ஆள் நடந்துவரும் அரவம் கேட்டது. என் உடல் நடுங்கி விட்டது. நிர்மானுஷ்யமான வனப் பிரதேசத்தில் இப்படி ஆளரவம் கேட்டால் என்ன நினைக்கத் தோன்றும்? உடனே அது என்ன ஓசை என்று கவனிக்க ஒரு மரத்தின் பின்னால் நின்றேன். நல்ல காலம்! நான் போகும் அந்த ஜவ்வாது மலையிலிருக்கும் ஓர் ஆதிவாசிதான் எனக்குப் பின்னால் நடந்து வந்தார். அவருடன் நானும் ஜவ்வாது மலைக்குப் போக ஆரம்பித்தேன். என் வருகையைக் கண்ட தமிழ்—மலையாளிகள் மிக்க சந்தோஷம் அடைந்தார்கள். அவர்களோடு சில நாட்கள் தங்கினேன்.

ஒரு நாள் காலையில் திடீரென்று "ஓஹா—ஓஹா!" என்று எல்லோரும் கத்தினார்கள். உடனே ஒவ்வொருவரும் தடியும் உலக்கையும் எடுத்துக் கொண்டு ஓட ஆரம்பித்தார்கள். என்ன சங்கதி என்றே தெரியவில்லை. எதுவாயிருந்தாலும் போய்ப் பார்த்துவிடுவது என்ற தீர்மானத்தில் அவர்களுக்குப் பின்னால் நானும் என் காமிராவுடன் ஓடினேன். எல்லோரும் என்னைக் கவனிப்பதைப் பார்த்ததும் எனக்கு என்னவோபோல் ஆகிவிட்டது. ஆயினும் நான் ஓடுவதை நிறுத்தவில்லை. 'ஏதாவது கொடிய வன விலங்கு தென்பட்டு விட்டதா? அல்லது பக்கத்துக் கிராமத்துக்கும் இவர்களுக்கும் சண்டையா?' என்றெல்லாம் நினைத்து மனம் குழம்பினேன்.

எதுவாயிருந்தாலும் புகைப் படம் எடுக்கும் வாய்ப்பும், எழுதுவதற்கு ஏற்ற விஷயமும் கிடைக்காதா என்ற ஆர்வத்தில் மூச்சு இரைக்க ஓடினேன். ஓடும் கூட்டத்துக்கு முன்னால் ஒரு நாய் வழிகாட்டிக்கொண்டு போயிற்று. அதைப் பார்த்த பிறகுதான் 'இது சண்டை இல்லை, நாய் ஏதோ ஒரு காட்டு விலங்கை காட்டப்போகிறது' என்று தெரிந்தது. நாய் ஓடையின் ஓரமாகச் சென்று ஒரு குகையைப் பார்த்துக் குரைத்தது, எல்லோரும் குகையின்

அருகில் ஓடிச் சென்று பார்த்தார்கள். ஒரு மலையாளியை ஏதோ ஒன்று அவனுடைய காலைக் கவ்விக் கொண்டு உள்ளே இழுக்கிறது. ஆனால் இவனோ அதனுடன் சண்டை செய்து களைத்துப் போய்த் தன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டிருக்கிறான். ஆனால் மலையாளி யின் கையில் நல்ல பலமான ஒரு நீண்ட கொம்பு இருந்த தால் அந்தக் குகைக்குக் குறுக்கே அதைக் கொடுத்துத் தன் பாதி உடலை அதில் மாட்டிக் கொண்டான். இதனால் உள்ளே இருக்கும் விலங்கு அவனை உள்ளே இழுக்க முடியாமல் தவித்தது. அந்தக் கொம்பு மட்டும் குறுக்கே சிக்கியில்லாவிட்டால், அந்த மலையாளி இந்நேரம் குகைக் குள் யார் கண்ணுக்கும் தெரியாமல் மாண்டு போயிருப்பான். தாமதம் செய்யாமல் எல்லோரும் சேர்ந்து சர்வ ஜாக்கிரதை யாகச் சிறிது சிறிதாக இழுத்தார்கள். அப்போது குகைக்குள் இருக்கும் மிருகத்தின் ஒருவிதமான ஓசை கேட்டது.

சிக்கியவனின் கால் குகைக்குள் துண்டிக்காதவாறு மிகவும் மெதுவாக வெளியில் இழுக்கத் தொடங்கினார்கள். ஆனால் குகைக்குள் கவ்விக் கொண்டிருக்கும் பிராணி அவனுடைய காலை விடுவதாகக் காணோம். கடைசியில் வீட்டுக்குச் சிலர் ஓட்டமாக ஓடி மிளகாய்ப் பொடியையும், மூக்குப் பொடியையும், புகை இலைகளின் கட்டுக்களையும் கொண்டு வந்தார்கள். அப்பொருள்களை ஒரு வாளித் தண்ணீரில் கரைத்துக் குகை வாயிலில் சிக்கியிருப்பவனின் உடலிலும் துடையின் மேலும் ஊற்றினார்கள். அவன்மேல் ஊற்றிய அந்தக் காரமான தண்ணீர் அவனுடைய காலின்மூலம் வழிந்து உள்ளே ஓடியது. இப்படியே அந்தக் காரமான தண்ணீரை மாற்றி மாற்றி ஊற்றினார்கள். ஏனென்றால், நெருப்பின் புகையால் உள்ளே இருக்கும் விலங்கை வெளியில் வரவழைக்கலாம் என்றால், குகையில் அந்த மலையாளி சிக்கிக் கொண்டிருப்பது ஒரு தடையாக இருந்தது. கடைசியில் காரமான தண்ணீரை மேலும்

மேலும் ஊற்றினார்கள். கடைசியில் கொஞ்சம் கொஞ்சமாக அது காலை விட்டு விட்டது. பிறகு மலையாளியை வெளியில் இழுத்து விட்டார்கள். அவனுடைய காலின் காயத்தைக் கொண்டு, அவனைக் கவ்வியது என்ன மிருகம் என்று சொல்ல முடியவில்லை. அந்தக் குகையில் சிக்கியவன் நடுங்கிக் கொண்டிருந்தான். அவனுக்குக் கொஞ்சம் காப்பி கொடுத்தார்கள். கொஞ்ச நேரம் கழித்து அவனுக்குத் தெம்பு வந்தது. அவன் மெல்லிய குரலில் பேசினான்.

''காலையில் எழுந்து நான் என் வயலுக்குச் சென்றேன். செல்வதற்கு முன் நான் குடி போதையில் இருந்தேன். ஆகையால் நான் சற்று நிதானமாக ஓடையின் பக்கம் போன பொழுது என்னுடன் நாயும் வந்தது. நாய் எனக்கு முன்னால் போய் எதையோ கண்டதைப் போல் குரைத்தது.

''ஓடையின் பக்கத்திலிருக்கும் குகைப் பாறையின் மேல் வேறொரு பாறை இருந்தது போல் தெரிந்தது. அந்தப் பாறையில் அருகில் போகும் பொழுது ஏதோ அந்தப் பாறையின் மேலிருந்து என் அருகில் விழுவதைப் போல் தோன்றியது. ஆனால் நான் திரும்பிப் பார்ப்பதற்குள் என் காலை ஏதோ ஒன்று கவ்விக் கொண்டிருப்பது தெரிந்தது. உடனே அது என் உடலை அடித்தது. ஆனால் என் நாய் அதற்கு மட்டும் இடம் கொடுக்கவில்லை. நாய் அதைச் சுற்றிச் சுற்றிக் கடிக்க ஆரம்பித்தது. ஆகையால் அது என் உடலை அடிக்கும் முயற்சியைக் கைவிட்டு விட்டுத் தன்னைக் கடிக்கும் நாயை அடிக்க ஆரம்பித்தது. அதே நேரத்தில் என்னையும் குகைக்குள் இழுத்துச் செல்ல ஆரம்பித்தது. நான் குடிபோதையில் இருந்ததால் என் கண்கள் காணும் பொருள்கள் எல்லாம் சுழல்வதைப் போல் தெரிந்தன. இனி நமக்கு ஆபத்து என்று தெரிந்ததும், உடனே என் சட்டையைக் கழற்றி நாயிடம் போட்டு 'ஓடு, போ!' என்று குரல் கொடுத்தேன். நாய் என்

சட்டையைக் கவ்விக் கொண்டு உங்களிடம் ஓடி வந்தது. நாய் ஓடியபின் மிருகம் என்னை வேகமாக இழுக்க ஆரம்பித்தது, என்கையில் இருந்த தடியைக் கெட்டியாகப்பிடித்துக் கொண்டேன். என்னைச் சிறிது சிறிதாகக் குகைக்குள் இழுக்கும்பொழுது என் கையிலிருந்த தடியைக் குகைக்குக் குறுக்கே வைத்துக் கொண்டு, அதன் மேல் என் உடலை கவிழ்த்துக் கொண்டு பிடித்துக் கொண்டேன். தடி குகையின் குறுக்கே மாட்டிக் கொண்டதால் அந்த விலங்கால் என்னை இழுக்க முடியாமல் போய்விட்டது. அதற்குள் நீங்கள் வரும் ஆரவாரம் கேட்டது. எனக்குத் தைரியம் வந்தது. அப்புறம் நடந்தது உங்களுக்குத் தெரியுமே?" என்ருன்.

கடைசியில் குகையில் இருக்கும் மிருகம் என்ன என்று கண்டுபிடித்து விடுவதென்று சில வாலிபர்கள் துணிந்தார்கள். வைக்கோலையும், கட்டைகளையும் குகைக்குச் சற்றுத் தூரத்தில் போட்டுத் தீயையும், புகையையும் உண்டாக்கினுர்கள். சில மணி நேரங்களுக்குப் பிறகு குகையிலிருந்து ஒரு பெரிய மிருகம் வெளியில் வந்தது. குகையை விட்டுச் சிறிது தூரம் வந்ததும் அதைத் தடியால் அடித்தவாறே ஒரு திறந்த புல்தரைக்குக் கொண்டு வந்தார்கள். உடனே அந்த மிருகத்தை நான் புகைப்படம் பிடிப்பதற்காக அருகில் சென்றேன். ஆனுல் என் உருவத்தைக் கண்டதும் உடனே என்னை நோக்கி, "விறு விறு" என்று அது வந்தது. அதற்குள் எல்லாரும் "ஐயா! — ஐயா!" என்று கத்தினுர்கள். ஆனுல் நான் 'கிளிக்' என்று புகைப்படம் பிடித்துக் கொண்டு தூரத்தில் ஓடினேன். எவ்வளவோ அந்த மிருகத்தை அடித்தும் அது கடைசிவரையில் சாகவில்லை. கட்டை வண்டியையும் மேலே ஏற்றினுர்கள்—அப்பொழுதும் அது சாகவில்லை. கடைசியில் வைக்கோல் போர்களையும், காட்டு விறகுகளையும் போட்டுத் தீ வைத்துப் பொசுக்கினர். பிறகுதான் அதைக் கொல்ல முடிந்தது.

"சில மாதங்களுக்கு முன் ஒரு மாட்டுக்காரப் பையன் காணமல் போனதற்கும், அடிக்கடி கன்றுக்குட்டிகள் மறைந்து போனதற்கும் இந்த மிருகம்தான் காரணமாக இருக்கவேண்டும். ஏனென்றால், இது நீண்ட நாட்களாக இந்தக் குகையில் வாழ்ந்து கொண்டு வருகிறது. குகைக்குப் பக்கத்தில் நீரோடையும், தன் உடலை வெய்யிலில் காய வைப்பதற்கு பாறையும், மறைந்து கொள்வதற்குக் குகையும் இருப்பதால், இவ்வளவு நாட்களாக அது நம் கண்களில் சிக்காமல் இருந்திருக்கிறது" என்றனர். குகையிலிருந்தது என்ன?

மலைப்பாம்புதான் !

# 10. முதலையான்

கீழ்க் கோத்தகிரி என்பது நீலகிரியைச் சேர்ந்ததோர் இடம். இது உதகையிலிருந்து சுமார் முப்பத்தைந்து மைல் தூரத்தில் இருக்கிறது. கீழ்க் கோத்தகிரியின் தென்கிழக்குக் கோடியில்தான் இருளர்களும், குறும்பர்களும் வாழ்ந்து வருகின்றனர். இவர்களுடைய 'பாடி'யில் சில நாட்கள் தங்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இம்மாதிரி மக்களுடன் கலந்து பழகுவதிலும் அவர்கள் கூறும் ரசமான கதைகளைக் கேட்பதிலும் எனக்கு எப்போதுமே அலாதியான ஆனந்தம்.

குறும்பர்களின் பாடியிலிருந்து மூன்று நான்கு மைல்கள் சென்ருல் பவானி ஆற்றின் ஒரு பகுதியை அடையலாம்.

ஒரு நாள் ஒரு குறும்பனைச் சந்தித்தேன். அவன் பெயர் என்ன என்று கேட்டபோது "என் பெயர் 'மசிணிபே'. ஆனுல் என்னை எல்லோரும் 'முதலையான்' என்றுதான் கூப்பிடுவார்கள்" என்ருன். எனக்கு இந்தப் பெயர் விநோதமாக இருந்தது. இப்படிப் பெயர் வரக் காரணம் என்ன என்று விசாரித்த போது அவன் சொன்ன கதை ரொம்பவும் சுவாரசியமாக இருந்தது.

சில ஆண்டுகளுக்கு முன் பவானி ஆற்றில் ஒரு பெரிய முதலை வாழ்ந்து வந்ததாம். இது ஆடுமாடுகளையும் ஏமாந்து நீரில் இறங்கும் மனிதர்களையும் தின்று ஏப்பமிட்டு வந்ததாம். இதைக் கொல்வதற்குச் செய்த முயற்சி

கள் பலன் தரவில்லையாம். யாரிடமும் இந்த முதலை சிக்காமல் அத்தனை சாமர்த்தியமாக வாழ்ந்து வந்திருக்கிறது.

இந்த முதலையைக் கண்டுபிடித்துக் கொல்லுபவருக்கு தக்க வெகுமதி கொடுக்கப்படும் என்று கூட அறிவிக்கப்பட்டதாம். ஆனால் வெகுமதியைப் பெறும் தகுதி யாருக்குமே வாய்க்கவில்லை. முதலையின் அட்டகாசம் நாளுக்குநாள் அதிகமாகிக் கொண்டு வந்தது. முதலைக்குப் பலியாகும் மனிதர்களில் இருளர்கள், குறும்பர்களின் எண்ணிக்கையே அதிகம். ஆகவே இந்த ஜாதி மக்கள் பஞ்சாயத்துக் கூடி ஆலோசித்தனர். ஒவ்வொருவரும் ஒவ்வொரு யோசனை சொன்னார்கள். அத்தனையும் செயல்படுத்தப்பட்டது. ஆனால் பலன் இல்லை. முதலையைப் பிடிக்க முடியும் என்ற நம்பிக்கையை இழந்து விட்டனர் அந்தப் பிராந்திய மக்கள்.

இந்தச் சமயத்தில்தான் மசிணிபே என்ற இந்தக் குறும்பன் ஒரு யுக்தி செய்தானும். ஓர் ஆட்டைப் பிடித்து அதைக் கொன்று அதன் தோலை உரித்தானும். ஆட்டின் தலையை அப்படியே வைத்துக் கொண்டான். இறைச்சியைப் பொடிப் பொடியாகக் கொத்தினானும். பிறகு விஷவேர்களைப் பொடியாக இடித்துக்கொண்டானும். பன்றி இறைச்சியையும் இதேபோல பொடியாக கொத்திக்கொண்டு எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து, சிறு சிறு சுண்ணாம்புக் கற்களையும் சேர்த்து ஆட்டுத் தோலுக்குள் வைத்துத் தலையையும் இணைத்து நிஜ ஆடுபோலத் தைத்து விட்டானும். பிறகு பன்றியின் இரத்தத்தை அந்தப் போலி ஆட்டின் மீது நன்றாகத் தடவினானும். இந்த ஆட்டைப் பவானி நதிக் கரையின் ஓரமாக ஒரு முளையில் இழுத்தால் வந்து விடும்படி கட்டி விட்டானும். தூர இருந்து பார்ப்பதற்கு ஆடு புல் மேய்ந்தபடி நிற்பது போல் இருக்குமாம். இவன் சற்றுத் தொலைவில் ஒரு புதர் மறைவில் ஓர் உயிருள்ள ஆட்டுடன் மறைந்து கொண்டு காத்திருந்தானும்.

மாலைச் சூரியன் மறையும் தருவாயில் ஆற்றில் ஏதோ கட்டை மிதந்து வருவது போல இருந்ததாம். காத்திருந்த தற்குப் பலன் கிட்டிவிட்டது. கட்டையாக இருந்தால் நீரின் ஓட்டத்தோடல்லவா போகும்? ஆனல் இது நீரை எதிர்த்து வரவே அது முதலைதான் என்பது நிச்சயமாயிற்றும் மசிணிபேவுக்கு. உடனே இவன் தன் அருகிலுள்ள ஆட்டைக் குத்திக் கத்த வைத்தாலும். ஆட்டின் ஓலமும் போலி ஆட்டின் மீது தடவப்பட்ட பன்றி ரத்தத்தின் வாசனையும் முதலையை இவன் நினைத்தபடி கரைக்கு இழுத்திருக்கின்றன. மெல்ல நீரை விட்டுக் கரையில் ஏறி ஆடு கட்டப்பட்டிருக்கும் இடத்தை நோக்கிச் சென்றதாம் முதலை. மசிணிபே தன்னிடமுள்ள ஆட்டைக் குத்தி மேலும் மேலும் கத்தச் செய்யவே கட்டப்பட்டுள்ள ஆடுதான் கத்துவதாக நினைத்து முதலை அதன் காலைக் கௌவிக் கொண்டு இழுத்தபடி நீரில் மறைந்துவிட்டதாம்.

விஷ இறைச்சி கலந்து வைத்துத் தைக்கப்பட்ட ஆட்டை இழுத்துக் கொண்டு முதலை நீருக்குள் போனதைத் தன் பாடியில் உள்ளவர்களிடமெல்லாம் சொல்லித் தன் சூழ்ச்சி பலித்துவிட்டதென்றும் இனி முதலை உயிரோடு இருக்காது என்றும் சொல்லி இருக்கிருன் மசிணிபே. ஆனல் இவன் கூறியதை முதலில் யாரும் நம்பவில்லையாம். மறுநாள் எல்லோருமாகச் சேர்ந்து ஆற்றேரமாகச் சென்று முதலையின் உடலைத் தேடி இருக்கிருர்கள். வெகு தூரத்தில் ஒரு பெரிய முதலையின் இறந்த உடல் கரையில் ஒதுக்கப் பட்டிருப்பதைக் கண்டுபிடித்தார்களாம். அப்போது கூட மசிணிபேயின் வேலைத்தனத்தினல்தான் அது இறந்திருக் கிறது என்பதை அவர்களில் சிலர் நம்ப மறுத்தார்களாம். இந்த முதலை, வேறு முதலையாக இருக்கலாம் என்றும் அல்லது அதே முதலையானலும் அது இயற்கையாகவே இறந்து போயிருக்கலாம் என்றும் வம்பு பேசினர்களாம். ஆகவே அதன் வயிற்றைக் கிழித்துப் பார்த்திருக்கிருர்கள்.

அதன் வயிற்றில் ஆடு, பன்றியின் இறைச்சித் துண்டு களோடு சுண்ணும்புக்கல், வேர்ப்பொடி முதலியவை இருப் பதைக் கண்டபிறகுதான் அந்த முதலையைக் கொன்றது மசிணிபேதான் என்று எல்லோரும் ஏகமனதாக ஒப்புக் கொண்டு, இனி முதலையின் பயமின்றி வாழலாம் என்ற மகிழ்ச்சியோடு நிம்மதியாகப் பாடி திரும்பினர்களாம். அன்று முதல் 'மசிணிபேவுக்கு' முதலையைக் கொன்றதனல் 'முதலையான்' என்றே பெயர் வைத்து விட்டார்களாம்.

நானும் முதலையானின் சாமர்த்தியத்தைப் பாராட்டி விட்டு வந்து சேர்ந்தேன்.

# 11. காட்டுப்பன்றி வேட்டை

சாதாரணமாய்த் தேயிலைத் தோட்டத்திலும், மலைப் பகுதியிலும், மலையடிவாரத்திலும் வாழும் மக்கள் நூற்றுக்கு 25% சதவீதம் வேட்டையாடுவதில் கைதேர்ந்தவர்களாக இருக்கின்றனர். இப்படி வேட்டையாடும் மக்களிடம் வேட்டை நாய்கள் இருப்பதுண்டு. வேட்டை நாய்கள் என்றால் அவைகள் எல்லாம் எப்படி இருக்குமோ? என்று சிலர் நினைப்பர். அவைகள் நம் வீடுகளில் வளர்க்கும் சாதாரண நாய்கள் போல்தான் இருக்கும். ஆனால் அந்தச் சாதாரண நாய்களை சிக்காரிகள், வேட்டைக்குப் பழக்குவது தான் கெட்டிக்காரத்தனம். முதலில் ஒரு நாயை வேட்டையில் பழக்கியதும், அது நல்ல வேட்டையாடினால் போதும், அந்த ஒரு வேட்டை நாயை வைத்துக்கொண்டு, ஒன்றின் பின் ஒன்றாக மற்ற நாய்களைப் பழக்கிவிடுகின்றனர்.

இப்படி மலைப்பகுதியிலும், தேயிலைத் தோட்டத்திலும் வாழும் சிக்காரி மக்கள் நான்கு ஐந்து பேர் ஒன்றாகச் சேர்ந்துகொண்டு சனிக்கிழமைகளிலும், மற்ற விடுமுறை நாட்களுக்கு முன் இரவும் வேட்டைக்குப் போவார்கள். ஒவ்வொருவரும், தாம் வளர்க்கும் இரண்டு மூன்று நாய்களை அழைத்துக்கொண்டு செல்வார்கள். அந்த நாய்கள் ஒன்றுக்கொன்று சண்டைபோட்டுக் கொள்ளாதா? என்று கேட்கலாம் — அதுதான் இந்த நாய்களுக்குள் இல்லை. காரணம், எல்லா நாய்களும் வேட்டையாடுவதில்தான் தங்கள் கவனத்தைச் செலுத்தும். எனவே சண்டை போடு

வதில் அந்த நாய்களின் நாட்டம் செல்லாது. சாதாரண மாய் ஒரு வேட்டை நாய் வேட்டையாடுவதில் வல்லமை யுள்ளதாக இருந்து வேட்டையாடும்பொழுது திடீரென்று பதுங்கினால் அதைப் பார்த்து மற்ற நாய்களும் தாமாகவே பதுங்கி வேட்டையாடப் பழகும். பதுங்குவதற்கேயன்றி தங்களைக் கொல்லக்கூடிய எதிரி மிருகத்தையும் ஒரு வேட்டை நாயிடமிருந்துதான், மற்ற நாய்கள் தெரிந்து கொள்ளும். மேலும், தங்கள் எஜமானராகிய சிக்காரிகள் பதுங்கும்பொழுது, நாய்கள் அவர்களைவிட அழகாகப் பதுங்கும் காட்சியைக் கண்டால் நமக்கே வியப்பாக இருக்கும்.

காட்டுப்பன்றி வேட்டைக்கு வீட்டைவிட்டு வெளியில் புறப்படும்பொழுது சிக்காரிகள் தங்கள், காட்டுச் சிக்காரி உடையணிந்துகொண்டு கையில் நான்கு ஐந்து ஈட்டிகளுடன் கிளம்புவார்கள். இந்த நான்கு ஐந்து சிக்காரிகளுடன் மொத்தமாகச் சுமார் பத்து நாய்கள் ஒன்றாகக் கூடிவிடும். முதலில் நாய்கள் கூட்டமாகப் போகும். காட்டு எல்லைக்குள் நுழைந்ததும் உடனே பரவ லாகப் போகும். உடனே சிக்காரிகளும் மிகவும் ஜாக்கிர தையாகப் போகிறார்கள். ஏனென்றால் ஏதாவது மிருகத்தை நாய்கள் மோப்பம் பிடித்தால்தான் அப்படிப் பரவலாகப் போக ஆரம்பிக்கும் என்பது சிக்காரிகளுக்குத் தெரியும். ஆகையால் சிக்காரிகள் தங்களிடமிருக்கும் ஈட்டியையும், கத்தியையும் கையில் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, நாயின் பின்னால் வேகமாகப் போவார்கள். ஏனென்றால் நாய்கள் ஓடிவரும் ஓசையை அவற்றின் மோப்ப சக்தியை யும் காட்டுப்பன்றிகள் தெரிந்து கொண்டதும், உடனே புதரிலிருந்து வெளியில் கிளம்பத் தயாராக இருக்கும்; அல்லது முதலில் ஓடிவரும் நாயைத் தன் கோரைப்பற்களால் குத்திக் கிழித்துவிடும்.

இவைகளுடன் "காட்டு முயல், காட்டாடு, முதலிய மற்ற மிருகங்கள் எல்லாம் புதரிலிருந்து நான்கு பக்கங்களிலும்

சிதறுண்டு, கோபமாகவும், யார் எதிரில் கிடைத்தாலும் ''குத்தவோ கடிக்கவோ ஆவேசத்துடன் வெளியில் ஓடி வரும். அப்படி ஓடி வரும்பொழுது, சிக்காரிகள் ஜாக்கிரதை யாக இருக்கவேண்டும். காரணம் எந்த புதரில் எந்த மிருகமிருக்கும் என்பது தெரியாது அல்லவா? காட்டுப் பன்றிகள் ஓடி வரும்பொழுது, நாம் ஏமாந்து எதிரில் சிக்கி விடக்கூடாது. அப்படிச் சிக்கிக் கொண்டால், நம் உயிருக்கே ஆபத்தாக முடியும். காட்டுப்பன்றிகள், நாய்களையும் சிக்காரிகளையும் கண்டதும் ஆவேசமாகவும், கோபமாகவும் வெளியில் வரும் அல்லவா? புதரைவிட்டு வெளியில் வந்த காட்டுப்பன்றிகள் சில சமயங்களில், பெரிய பெரிய பாறை யின் இடுக்குகளிலும், சுரங்கங்களின் உள்ளேயும் ஓடிச் சென்று பதுங்கிக் கொள்ளும். அப்படிப் பதுங்கிக் கொண் டதும், உடனே நாய்கள் சுரங்கங்களைச் சுற்றிச் சுற்றி வந்து குரைக்கும். ''சுரங்கங்களுக்குள் போய் வரமுடியாது'' என்று நாய்கள் தெரிந்துகொண்டால், அவைகள் உள்ளே நுழையா. அவ்விதமான சந்தர்ப்பத்தில் உடனே, காட்டில் கிடைக்கும் கட்டைகள், குச்சிகள், காய்ந்த இலைகள் முதலிய வைகளைக் குப்பையாகச் சுரங்கத்தின் வாயிலில் போட்டுத் தீ மூட்டிப் புகையுண்டாக்குவார்கள். அப்படிப் புகை போடும் பொழுது சில சிக்காரிகள் காட்டுப்பன்றி பதுங்கியிருக்கும் பாறையின்மேல் உட்கார்ந்து, சுரங்கத்தின் வாயில் முகப்பில் தங்கள் ஈட்டியைப் பிடித்துக் கொண்டிருப்பார்கள்.

சிலர் அந்தச் சுரங்கத்தின் உள்செல்லும் புகை வேறு வழியாக தூரத்தில் எங்கேயாவது வெளி வருகிறதா, என்று பார்ப்பார்கள். அப்படி வரும்பொழுது அந்த வழியாகக் காட்டுப்பன்றி வெளி வந்துவிடும் என்று அந்த இடங்களில் ஒன்று இரண்டுபேர் போய்க் கையில் ஈட்டியுடன் பதுங்கிக் கொண்டிருப்பார்கள். அப்படிச் சிக்காரிகள் போகும்பொழுது தங்கள் தங்கள் நாய்களையும் அந்தந்த இடங்களுக்கு அழைத்துக்கொண்டு போவார்கள். புகை போடும் சுரங்கத்தின் வாயிலுக்கு நேர் எதிரில் யாருமிருக்கக்

கூடாது. திடீரென்று காட்டுப்பன்றி வெளியில் வந்து ஓடும் பொழுது, சிக்காரி "சதக்" என்று குத்தி ஈட்டியை அப்படியே பன்றியின் உடம்பில் பாய்ச்சி விடுவார்கள், அல்லது குத்தி இழுப்பதும் உண்டு. அது அந்தச் சமயத்திலிருக்கும் சூழ்நிலையையும் அனுபவத்தையும் பொருத்து இருக்கிறது. உடனே அங்கேயிருக்கும் நாய், காட்டுப் பன்றியின் பின்னால் சற்று தூரத்தில் குரைத்துக்கொண்டே ஓடும். காரணம் மற்ற பகுதியிலிருக்கும் நாய்களுக்குப் பன்றி ஓடும் பாதை தெரிய வேண்டும் அல்லவா? எனவே, எல்லா நாய்களும் கும்பலாக வந்து சேர்ந்ததும், ஒன்றாகச் சேர்ந்து நான்கு பக்கங்களிலும் நின்று பன்றியை மடக்கிக் கடிக்க ஆரம்பிக்கும். அதற்குள் சிக்காரிகளும் ஈட்டிகளுடன் வந்துவிடுவார்கள். இப்படி நாய்களாலும், சிக்காரிகளாலும் காயமடைந்த பன்றி கடைசியில் தரையில் படுத்துவிடும்.

இப்படிப் படுத்தவுடன் நாய்களோ, சிக்காரிகளோ உடனே அருகில் போகமாட்டார்கள். ஏனென்றால் சில சமயங்களில் மிருகங்கள் பாசாங்கு செய்து படுத்திருக்கும் பழக்கமுடையவை. இப்படிக் காட்டில் நாய்களும் சிக்காரி களும் ஓடும் ஓசைகேட்டு அவர்கள் துரத்தும் காட்டுப்பன்றி தவிர மற்ற மிருகங்களும் புதரிலிருந்து வெளிக்கிளம்பி, மற்றோரிடத்தில் ஓடி ஒளிந்து கொள்வதும் உண்டு. அப்படி ஓடும்பொழுது சிக்காரிகளின் கூட்டத்திலிருக்கும் ஏதாவது ஒரு நாய் பார்த்துவிட்டால் அந்த நாய் மட்டும் அதன் பின்னால் ஓடும். கடைசியில் அப்படி ஓடிய மிருகம் எங்கே பதுங்கி இருக்கிறதோ, அங்கே அந்த ஒரு நாய் மட்டும் "குர்—குர்" என்று குரைத்தவாறே காவல் காக்கும்.

முதலில் வேட்டையாடிய மிருகம் சிக்கியபின் அதை நன்றாக ஈட்டியால் குத்தி, அது இறந்துவிட்டது என்று தெரிந்த பிறகுதான், அதன் அருகில் சென்று கயிற்றால் அதன் கால்களைக் கட்டி, கட்டிய அக்கால்களுக்கு இடையில்

கொம்பு கொடுத்து தூக்கிக்கொண்டு "ஓவ்—ஓவ்" என்று சந்தோஷத்தால் கத்திக்கொண்டு வருவார்கள். இந்த "ஓவ் — ஓவ்" என்ற ஓசையைத் தனியாகச் சென்று மற்ெருரு மிருகத்தைத் துரத்திக்கொண்டுபோய்க் காத்துக் கொண்டிருக்கும் நாய் கேட்டதும், "சரி! எல்லோரும் வீட்டுக்குத் திரும்புகிறுர்கள்!" என்று நினைத்து ஒரு மாதிரி யாகக் குரல் கொடுத்துக் குரைக்கும். அக்குரலைக் கேட்டதும் சிக்காரிகள் எல்லோரும் தங்கள் நாய்களை எண்ணிப் பார்ப் பார்கள். பார்த்த பிறகு ஒரு நாய் ஏதோ மிருகத்தைக் காவல் காக்கிறது என்று நினைத்துக் கொண்டிருக்கும் பொழுதே, அக்குரலைக் கேட்ட மற்ற நாய்கள் காற்ருய் அத்திசையை நோக்கிக் குரைத்துக்கொண்டே ஓடிவிடும். அதன் பின்னுல் சிக்காரிகளில் 75% (சதவீதம்) பேர் புதிய வேட்டைக்கு ஓடுவார்கள்.

முதலில் குரல் கொடுத்த தனி நாயின் குரைப்பு ஓசை தம் கூட்டத்தைச் சேர்ந்த நாயின் குரல் அல்ல என்று இந்த நாய்களுக்குத் தெரிந்துவிட்டால், இந்த நாய்கள் ஓடாமல் சிக்காரிகளிடமே நின்றுவிடும். இக்காட்சியைக் கண்டதும், இந்தச் சிக்காரிகள், குரல் கொடுக்கும் நாய் நம்முடையது அன்று என்றும், வேருெரு சிக்காரி கூட்டம் வந்து வேட்டையாடுகிறது என்றும் தெரிந்துகொண்டு சீக்கிரமாக வீட்டுக்கு வந்து, காட்டுப் பன்றியை வெட்டிக் கூறுபோட்டுக் கட்டி விற்பனை செய்து விடுவார்கள். விற்பனையில் வந்த பணத்தை அன்று வேட்டைக்குப் போன நண்பர்கள் பங்கு போட்டுக்கொள்வார்கள். இறைச்சியில் ஒரு கூறும் வேட்டைக்குப் போனவர்களுக்குக் கொடுக்கப் படும். அன்று வேட்டைக்குப் போன சிக்காரிகள் எல்லோரும் மீசையின் மேல் கை வைத்து முருக்கிக் கொண்டே குதூகல மாக இருக்கும் காட்சியை நேரில் காண வேண்டுமே!

# 12. ஆதிவாசிகளும் பாஸ்கா பண்டிகையும்

ஆதிவாசிகளிடம் நான் 35 ஆண்டுகள் பழகியிருப்ப தால் மேன்மேலும் பல அந்தரங்க, சரித்திரத் தொடர் புள்ள இரகசியங்களும் கருத்துக்களும் அவர்களிடம் மறைந்து இருப்பதை என் அனுபவத்தில் கண்டறிந் துள்ளேன்.

நீலகிரி கோத்தர்களிடத்திலும் தோதுவர்களிடத்திலும் எத்தனை ஆண்டுகள் பழகினாலும் அவர்களிடமிருக்கும் பழக்கவழக்கங்களையும் மதச் சடங்குகளில் மறைந்திருக் கும் பல உண்மைகளையும் இன்று வரையில் யாருமே முழுவதும் தெரிந்துகொண்டு எழுதினதில்லை.

நீலகிரியில் வாழும் ஆதிவாசிகள் பலரில் கோத்தர் களும் ஓரினத்தவர். இவர்கள் நீலகிரியில் ஏழு ஊர்களில் சிதறுண்டு வாழ்கின்றனர். இவர்களுடைய தெய்வத்திற்குக் "கம்பட்டீஸ்வரன்" (கோவில்) என்று பெயர் கூறுகின்றனர். ஆனால் நீலகிரி—உதகையின் அருகிலிருக்கும் கொல்லிமலை யில் வாழும் கோவ் மக்கள் (கோவ்—கோத்தர்), மாத்திரம் கம்பட்டீஸ்வரன் கோவிலை 'பசால் தேர்வ்' என்று கூறு கின்றனர். எப்படியென்றால் கோத்தகிரியிலிருக்கும் மாதா கோவிலை "கல் கோவில்" என்று அழைப்பதைப்போல் அழைக்கின்றனர். (கல்லால் கட்டப்பட்ட மாதா கோவில்).

பசால் தேர்வ் பண்டிகை கோத்தர்களின் குல தெய்வத்தின் பண்டிகை. "பசால்" என்ருல் பசுமையான புல்வெளி என்றும் கோத்தர் மொழியில் பொருள்படுமாம். பசுமையான புல்வெளிக்கு மத்தியில் இருப்பதால் "பசால் தேவ் குடி" என்று அழைக்கின்றனர். ஆனால் ஏழு ஊர் மக்களும் அம்மனோர், ஐயனோர் (அம்மை; அப்பன்) குடி என்று கோவ் மொழியில் அழைக்கின்றனர்.

இந்தப் பண்டிகையை கோவ் மக்கள்தான் சிறப்பாகக் கொண்டாடுவார்கள். குறும்பர்களும், தோதுவர்களும் கொண்டாடுவதில்லை. ஆனல் அவர்களுக்கும் இது தெய்வம்தான். தோதுவர்கள் இக்கோவிலைக் கண்டால் மரியாதையாக தலை வணங்குவார்கள். ஆனல் தோதுவர்கள், கோத்தர்களின் ஊருக்குள்ளும், கோத்தர்கள் தோதுவர்களின் ஊருக்குள்ளும் போவதில்லை. இது பண்டைக் காலத்தில் ஏற்பட்ட உடன்படிக்கையாம்.

இந்தப் பண்டிகையை கொண்டாடும்போது, ஊருக்குள் யாரும் தற்காலத்தில் இருக்கும் நாகரிக உடைகள் அணியக்கூடாது. காலில் செருப்பு அணியக்கூடாது. கோத்தப் பெண்கள் புடவையும் சட்டையும் அணியாமல் கோத்தர்களின் சம்பிரதாயத்தின்படியேதான் உடை அணிய வேண்டும்.

கம்பட்டீஸ்வரன் திருவிழா நாட்களில் கோத்தர்களின் ஊருக்குள் அன்னியர்கள் யாரும் செல்லக்கூடாது. இந்த கம்பட்டீஸ்வரன் (பசால்) பண்டிகை முடியும் வரையில் கோத்தர்கள் வாழும் ஊரில் (அக்கால்) எந்தக் குடும்பத்தினர்களும் புலால் சமைத்தல் கூடாது. இதே பழக்கங்களைத்தான் தலைமுறை தலைமுறையாக அனுஷ்டித்து வருகின்றனர். அந்தப் பண்டிகை நாட்களில் பூசாரி தன் ஊர் எல்லையைத் தாண்டி வெளியில் போகக்கூடாது. அந்த பண்டிகையில் ஊரில் இருக்கும் குழந்தைகள் முதல்

தள்ளாதவர்கள் வரையில் எல்லா கோத்தர் இன மக்களும் கலந்து கொள்வார்கள். அப்பண்டிகையை ஏழு ஊரிலும் கொண்டாடுவார்கள். அப்பண்டிகை டிசம்பர் மாதம் கடைசி வாரத்தில் தொடங்கி ஜனவரி மாதம் முதல் வாரத்தில் முடியும். டிசம்பர் மாதம் அமாவாசை அன்று பெண்கள் தங்கள் வீடுகளை எல்லாம் சுத்தம் செய்வார்கள். அன்று மாலை ஊர்ப் பூசாரியும், மற்ற ஆண்களும் ஆற்றுக்குப்போய் குளித்து விட்டு, புதிய மண்பானையில் தண்ணீர் கொண்டு வந்து மாட்டு சாணத்தைக் கரைத்து தங்கள் ஊரைச் சுற்றிலும் தெளிப்பார்கள். பிறகு பூசாரி தீக்கடைக் கோலினால் நெருப்பு உண்டாக்கி (கடைந்து) முதலில் பூசாரி தன் வீட்டின் அடுப்பிலும், பிறகு எல்லா வீட்டு அடுப்புகளிலும் தீ மூட்டுவார். அன்று முதல் பண்டிகை தொடங்கி விடுகிறது. பண்டிகை முடியும் வரையில் ஊர்மக்கள் சுத்தமாகவும், பயபக்தியுடனும் இருக்கவேண்டும்.

அந்தப் பண்டிகையைப் போலவே புதிய நெருப்பு, புதிய தண்ணீர் என்று கூறி, முதலில் பூசாரியின் வீட்டு அடுப்பிலும், பிறகு மற்றவர்கள் வீட்டு அடுப்புகளிலும் நெருப்பு மூட்டும் பழக்கம், கிறிஸ்தவர்களிடமும் உண்டு. கிறிஸ்தவர்களுக்குப் "பாஸ்கா" பண்டிகையின்போது, அதாவது இயேசுநாதர் மரணம் அடைந்த மறுநாள் ஈஸ்டருக்கு முன்னால், கிறிஸ்தவக் கோயில்களில் புதிய நெருப்பையும், தண்ணீரையும் குருவானவர் மந்திரித்துக் கொடுப்பார். அதைக் கொண்டுவந்து அன்று கிறிஸ்தவர்கள் புதிதாக நெருப்பு மூட்டுவதைப்போல் ஓர் ஐதீகம் இன்றும் உண்டு.

ஆப்கானியர்கள், காஷ்மீரியர்கள், பம்பாயில் உள்ள "பனி—இஸ்ரவேலர்கள்" ஆகியோர் இஸ்ரவேலரின் சந்ததியார்கள் என்பது தற்காலத்திய ஆராய்ச்சியாளர்களின் முடிவு. மேலும், "ஆப்கானியர்கள் இன்றும் "பாஸ்கா பண்டிகை"யைக் கொண்டாடுகிறார்கள்" என்று சிவில்

அண்ட் மிலிடரி கெஜட் 23-11-1898-ல் வெளி வந்துள்ளது.

கோத்தர்களிடையே இத்திருவிழா நடைபெறும்போது கோத்தர்களின் ஊரில் யாராவது மரணம் அடைந்தால் அதுதான் தீட்டு. ஆகையால் அந்த மரணமடைந்த வீட்டுக்கு மற்றவர்கள் போகமட்டார்கள். ஆனால் சாவுக்குச் சம்பந்தப்பட்டவர்கள், நான்கு பேர் ஒதுக்கமாகச் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து, பிணத்தை தகனம் செய்துவிடுவார்கள். சாவுக்குச் சம்பந்தப்பட்டவர்கள் திருவிழா முடியும் வரையில் ஊருக்குள் வரமாட்டார்கள். சாவு வீட்டில் யாரும் சத்தம்போட்டு அழமாட்டார்கள். கடவுளே ஊருக்குள் தங்கியிருப்பதால் எல்லோரும் சந்தோஷமாக இருக்கவேண்டும் என்பதாம். விருந்தாளியாக வந்திருக்கும் ஆண்டவனை ஆனந்தமாக வைத்திருந்து அனுப்பவேண்டும் என்பது கருத்தாம். அமாவாசையில் தொடங்கிய இத்திருவிழா, மூன்றும் பிறை கண்டபிறகு வரும் முதல் திங்கட்கிழமையன்று — பெரிய கேரியில் (வீடுகள் லைனில்) மேளதாள வாத்தியங்களுடன் நெருப்பு போடுவார்கள். நெருப்பைச் சுற்றிச் சுற்றி ஆண் களும் பெண்களும் ஆடுவார்கள். நெருப்பைச் சுற்றிச் சுற்றி முதல் மூன்று இரவுகளில் ஆடும் மருளாடி, மருள் ஏறப்பெற்றுப் பெரிய பள்ளத்தில் கணகணவென்று இருக்கும் நெருப்பை மிதித்துக்கொண்டு ஆடுவார். அப்பொழுது முக்கியமான செய்திகள் தங்கள் ஊர்களைப்பற்றி இருந்தால் ஊர் மக்களுக்கு எடுத்துக் கூறுவார்.

இப்படித் தீ மிதிக்கும் பழக்கம் நீலகிரியில் வாழும் ஆதிவாசிகளாகிய கோத்தர்களிடம் இருப்பதோடு—இந்தியா வில் தமிழகத்தில் பல பாகங்களில் வாழும் பலதர மக்களிடம் இப்பழக்கம் இருப்பதைக் காணலாம். மாரியம்மனுக்குப் பூசையிட்டு வழிபடும் மக்கள் இந்தியா வில் பலர் உண்டு. தாம் எண்ணிய காரியம் நிறை

வேறுவதற்காக அம்பிகையை மனத்தில் தியானித்து, விரத மிருந்து குறிப்பிட்ட திருநாள் ஒன்றில் அனலாகக் காயும் நெருப்பின்மீது நடந்து தம் வழிபாட்டைச் செலுத்தும் பழக்கம் ஆண்டவன்மேல் நம்பிக்கை இல்லை என்று கூறும் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் நடைபெற்று வருகின்றது. இது போன்ற தீ மிதிக்கும் பழக்கம் இந்தியா வில் வாழும் பாடகர் சமுதாயத்தாரிடத்திலும், கீழ் கோத்த கிரியில் தேனாடு கிராமத்தினரிடத்திலும் இன்றும் இருந்து வருகிறது. நாகரீகத்தில் வீறுநடைபோடும் மேல் நாடுகளில் சில பகுதிகளில் கொடிய வியாதிகள் கண்டாலும் சரி, தொத்து நோய் வந்தாலும் சரி, அங்கு வாழும் மக்கள் தேவதைகளுக்கு தீ மிதிக்கும் சடங்கைச் செய்கின்றனர்.

இதைப்போன்று தீ மிதித்து வழிபடும் வழக்கத்தை கிரேக்க நாட்டின் வடபாகத்தில் உள்ள "சலோனிகா" நகருக்கு அருகில் உள்ள 'லங்கடா' என்ற கிராமத்தில் வசிக்கும் "கிரியோக்கா" வகுப்பினர் இன்றும் கொண்டாடு கின்றனர். இவர்கள் இத் தீ மிதிக்கும் திருநாளை நீலகிரி யில் வாழும் ஆதிவாசிகளாகிய கோத்தர்களைப்போல் ஒவ்வொரு ஆண்டிலும் மே மாதத்தில் கொண்டாடி வரு கின்றனர். இப்பழக்கம் இவர்களிடம் கிரேக்க நாட்டில் கிறிஸ்தவ மதம் தோன்றுவதற்கு முன்பிருந்தே நடை பெற்று வருகிறதெனத் தெரிகிறது. இச்சடங்கு முடிந்ததும் எல்லோரும் மாதா கோவிலுக்குச் செல்வர்.

"அனுஸ்னரைட்" வகுப்பார் மூன்று வயதுள்ள கறுப்பு நிறமுடைய காயடிக்கப்படாத காளைகளின் தலையில் சிலுவை அடையாளத்தை வரைந்து, பிரத்தியேகமாக வைக்கப்பட்டிருக்கும் கோடாரியால் காளைகளைப் பலி கொடுக்கின்றனர். பின்னர் அதன் இறைச்சியைப் பிரசாத மாகக் கிராமத்து மக்கள் எல்லோருக்கும் விநியோகம்

செய்கின்றனர். மேலும், மேலை நாடுகளிலும், கீழை நாடுகளிலும், தீ மிதிக்கும் பழக்கம் பல இடங்களிலும் காணப்படுகிறது என்பதற்குச் சரித்திரச் சான்று உண்டு. நிற்க, மறுநாள் செவ்வாய்க் கிழமையன்று கோத்தர் பெண்கள் எல்லோரும் ஒன்ருகக் கூடிப் புதுமண் கொண்டுவந்து ஆண்களைப்போல் சக்கரம் சுற்றி புதிய பானை செய்வார்கள். இதற்குப் பிறகு அந்த வாரத்தில் வரும் சனிக்கிழமைக்குள் ஆண்கள், மூங்கில், பிரம்பு, புல் கொண்டுவந்து புதிய கோவில் கட்டுவார்கள்.

பிறகு கோத்தர்களில் 7 அல்லது 9 பேர் சேர்ந்து கோவிலுக்குப் பக்கத்திலிருக்கும் பெரிய உருண்டைக் கல்லைத் தங்களது ஒரே ஒரு வில்லால் ஆள் உயரம் தூக்குவார்கள். ஊரில் தவறு செய்திருந்தால், கல் தூக்க முடியாமல் கஷ்டப்படுவார்கள். உடனே அதைத் தூக்கும் நபர்கள் பிரார்த்தனை செய்துகொண்டு பிறகு தூக்கி விடுவார்கள். கல் தூக்கிய அன்று மாலை கோவிலுக்குப் பக்கத்தில் பச்சைப் பந்தல்போட்டு எல்லா ஆண்களும், படுத்துக் கொள்வார்கள். மூன்று இரவு வீட்டில் ஆண்கள் படுக்காமல், பந்தலில்தான் படுக்கவேண்டும்.

மறுநாள் ஞாயிற்றுக்கிழமை காலை எல்லோரும், ஆற்றில் குளித்துவிட்டுப் பூசாரிக்கு சிவபெருமான் (மும்முடி) தலைமுடியைப்போல் கட்டுவார்கள். அதன் பிறகு பூசாரி தன் மனைவி உள்பட எந்தப் பெண்ணையும் பார்க்கக் கூடாது. அதன்பிறகு கோவிலுக்கு வந்து, புதுப் பானையில் சாணம் கரைத்துக் கோவிலைச் சுற்றியும் பூசாரி—"ஓம்—ஓம்" என்று சொல்லிக்கொண்டே தெளிப்பார். மற்ற ஆண்கள் அவர்களுடன் "ஓம்—ஓம்" என்று சொல்லிக்கொண்டே சுற்றுவார்கள். பிறகு பூசாரி முதலில் கோவிலுக்குள் விளக்கேற்றி வணங்கியதும், மற்றவர்கள் வணங்குவார்கள். பூசாரி மட்டும் மாதம் ஒரு முறை

கோவிலுக்குள் சென்று வணங்கிவிட்டு வருவார். மற்ற ஆண்கள் இத்திருவிழா நாளன்று மட்டும்தான் கோவிலுக்குள் போகலாம்.

பெண்கள் இஸ்லாமியர்களைப்போல் கோவிலுக்குள் போகக்கூடாது. மறுநாள் திங்கட்கிழமை பொங்கல்— இடுவார்கள். அன்று யாரும் வீட்டில் சமைக்கமாட்டார்கள். சாமைச்சோறும், ஏதாவது ஒரு கடலையை வேக வைத்து உப்பும், நெய்யும் ஊற்றி எல்லோரும் சேர்ந்து உண்பார்கள். அதில் காரமே போடமாட்டார்கள். சமைத்த பொங்கலை முதலில் பூசாரி கம்பட்டீஸ்வரனுக்குப் படைப் பார். பிறகு பிரார்த்தனை செய்து கொண்டவர்கள் காணிக்கைகள் செலுத்துவார்கள். (நெய், உப்பு, பணம் ஏதாவது) பிறகு எல்லோரும் சேர்ந்து ஒன்ருகக் கோவிலை யும், பொங்கலையும் வணங்குவார்கள். இதற்குப் பிறகு எல்லோரும் சேர்ந்து சாப்பிடுவார்கள். அன்று முழுவதும் கோவில் பக்கமாக இருக்கும் மைதானத்தில் நடன உடை யில் நடனம், கூத்து, வேடிக்கைகள் முதலியவைகளெல் லாம் விடிய விடிய நடைபெறும். மறுநாளும் நடனமாடு வார்கள். அன்றுமாலை வேண்டியவர்களுக்குப் புகையிலை கொடுப்பார்கள். ஆண்களுக்கு அத்துடன் விரதம் முடிந்து விட்டது.

அடுத்த பிறையைக் கண்டதும் இப்பண்டிகையின் தொடர்ச்சியாகக் கில்லி ஆட்டம் (பண்டிகை என்பர்) விளையாடுகின்றனர். அன்று வீட்டை வெள்ளை அடிப்பார் கள். ஆண்கள் கில்லி ஆட, பெண்கள் பலகாரம் செய் வார்கள். அன்று பெண்கள் வீட்டுக் கதவுகளுக்கெல்லாம் சந்தனம் பூசி மாவிலை தோரணம் கட்டுவார்கள். அன்று மாலை அவரவர்களின் இல்லங்களில் பொங்கலிட்டுப் பலகாரம் செய்து, ஆண்டவனுக்கு நடுவீட்டில் படைத்து வணங்குவார்கள். பிறகு எல்லா ஆண்களும் ஒவ்வொரு

வீடாக வாத்தியத்துடன் போய் கொஞ்சம் கொஞ்சம் சாப்பிடுவார்கள். விரோதியாக இருந்தாலும் அன்று சமாதானம் கண்டிப்பாக கொள்ளத்தான் வேண்டும். விரோதிகள் வீட்டிலும் போய்ச் சாப்பிடுவார்கள். இது ஒரு நல்ல சட்டம் எனலாம்.

மாறுநாள் பெண்கள் கூட்டமாக வீடு வீடாகப் போய்ச் சாப்பிடுவார்கள். குதூகலமாகப் போவார்கள். அன்று பகல் தனித்தும், ஆண்கள் தனித்தும் நடனமாடுவார்கள். அன்று மாலை நடனத்துடன் அந்த ஆண்டுப் பண்டிகை முடிந்துவிட்டது. ஆதிவாசிகளிடம் பலமுறை நன்ருகப் பழகினுல்தான் அவர்களிடமிருக்கும் எல்லாச் செய்திகளையும் நாம் தெரிந்துகொள்ள முடியும்.

# 13. வலையர்கள்

அன்று வலையர்கள் பிரான்மலையின் சுற்றுப்புறங்களி லும், இராமநாதபுரம் மாவட்டத்திலும், அந்நாட்டு அரச னுக்குக் கீழ் பணியாளராக இருந்தார்களாம். அடுத்தடுத்துப் பிரான்மலையை விரோதி அரசர்கள் கைப்பற்றியதை முன்னிட்டு இந்த வலையர்கள் பல இடங்களில் சிதறுண்டு தமிழ் நாட்டில் மட்டுமின்றி, ஆந்திரா, கேரளம், மைசூர் முதலிய நாடுகளிலும் பரவலாகப் பழகி அவ்வவ்விடத்து மொழியில் பேசியும் வாழ்ந்தும் வருகின்றனர்.

மேலும் சில ஊர்களில் ஒரே தெருவிலோ அல்லது ஊருக்கு வெளியிலோ பள்ளர், பறையறையர்கள், வலையர் கள் எல்லோரும் ஒன்றுகவே வாழ்கின்றனர். சில இடங்களில் இவர்களை ஜனத்தொகைப் பட்டியலில் 'மோன தின்னி', 'பாசிக்கட்டி', 'சாரகு', 'வன்னியப்பள்ளி', 'வெல்லம்புட்டி' என்று கிளைப் பிரிவுப் பெயரை வைத்து அழைக்கின்றனர்.

சிவனுடைய கணையாழி கங்கையில் விழுந்தபோது அதை ஒரு மீன் விழுங்கிவிட்டதாம். அப்பொழுதுதான் அவர்களுடைய முன்னேர்களுக்கு வலை பின்னச் சிவன் கற்றுக்கொடுத்தாராம். வலையில் மீன் பிடிக்கக் கற்றதும், கங்கையில் இருக்கும் மீனைப் பிடித்து மீனின் வயிற்றிலிருக்கும் கணையாழியை எடுத்துச் சிவபிரானிடம் கொடுத்தார்கள் என்பது ஓர் ஐதீகக் கதை.

வலையர்களில் சிலர் நாகரிகமடைந்தும், கல்வி கற்றும் நல்ல பணியில் பணியாற்றி வந்தாலும் 95 சதவீதம் பேர் ஏழைகளாக இருக்கின்றனர்.

வலையப் பெண்கள் செவ்வாய்க் கிழமைகளில் தலைக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பார்கள். பெண்கள் சாராயம் குடிப்பதில்லை. பெண்கள் காதுகளில் ஈயத்தாலான வளையங்களை அணிந்துகொண்டிருக்கின்றனர். எண்ணிக்கையில் அதிகமான வளையங்கள் அணிந்து கொண்டிருக்கும் பெண் வீட்டுக்கு நல்லவளாம். எனவே வளையத்தின் எண்ணிக்கையில் இருக்கிறது அவளுக்கு மாப்பிள்ளை கிராக்கி. திருமணமானதும் எல்லாவற்றையும் உடனே நீக்கிவிடுகின்றனர். பெண்களின் காதுகளில் வளையங்களைக் கண்டதும் அவர்கள் திருமணமாகாதவர்கள் என்றும், வளையம் காதில் இல்லையென்றால் அவர்கள் திருமணமானவர்கள் என்றும் சுலபமாகத் தெரிந்துகொள்ளலாம்.

இவர்கள் வலை வைத்து மிருகங்களைப் பிடிப்பதிலும், பறக்கும் பறவைகளை வில் எய்து வீழ்த்துவதிலும் கெட்டிக்காரர்கள்.

பெண்கள் ருதுவானால் பதினைந்து நாட்கள் தனிக் குடிசையில் இருக்கச் செய்கின்றனர். பிறகு அந்தக் குடிசையைக் கொளுத்தி விடுகிறார்கள். பெண் குடிசையில் இருக்கும்பொழுது சிறுமிகள் கூடிக் குடிசைக்கு வெளியில் பாட்டுப்பாடி நடனமாடுவார்கள். குடிசையில் இருப்பவள் துன்பம் நீங்கி, அப்பெண்கள் ஆடும் நடனத்தைப் பார்த்து ரசிப்பாள். வயதுக்கு வந்தபிறகு தன் தாய்மாமனைத்தான் திருமணம் செய்துகொள்ள வேண்டும். அவ்வாறின்றி வலையர்கள் இனத்தில் யாராவது மற்ற இன மக்களுடன் காதல் திருமணம் செய்துகொண்டால் அவர்கள் இனமே ஒரு புதிய இனமாக வகுக்கப்படுகிறது. எனவே மதுரையிலும், தஞ்சையிலும், திருச்சியிலும் இவ்விதமான பல பிரிவுகள் வலையர்களுக்குள் இருக்கின்றன.

இவ்விதமான கிளைப் பிரிவினர், தங்கள் திருமணத்தில் பெண்ணுக்குக் "கீரைமணித் தாலி"க்குப் பதில் "பாசிக் கட்டி"யைக் கட்டுகின்றனர். விதவைகளும், விவாகரத்துச் செய்தவர்களும் மறுமணம் செய்து கொள்ளலாம்.

திருமணத்தில் மாப்பிள்ளையின் சகோதரி மாங்கல்யத்தை எடுத்து எல்லோருக்கும் காண்பித்து ஆசிபெற்று, பிறகு மணமகளின் கழுத்தில் கட்டுவாள். தாலியின் கயிறுகூடப் பெண்ணின் கழுத்தைப் பிடித்தாற்போல் கட்டப்பட வேண்டும். கட்டுகிறவள் தாலியைத் தொங்கலாகக் கட்டக் கூடாது. அப்படிக் கட்டினால் தாலியின் மாங்கல்யக் கயிறு பெண்ணின் கழுத்து எலும்பில் படும். அது அபசகுனமாம். ஆகையால் கட்டுகிறவளுக்குத் தலைவன் அபராதம் விதிப்பான். தாலி கட்டும் சடங்கு சாதாரணமாய் இரவில் தான் நடைபெறும். சில சமயங்களில் மணமகனே தாலி கட்டுவதும் உண்டு.

வலையர்கள் இனத்தில் திருமணம் சாதாரணமாய் ஜனவரி மாதம் முதல் மே மாதம் வரையில் நடைபெறும். ஆடி முடிந்த பிறகுதான் பெண்ணைத் தன் மாமியார் இல்லம் போகவிடுவார்கள். காரணம் குழந்தைகள் சித்திரை மாதத்தில் பிறக்கக் கூடாதாம்.

திருமணத்துக்குமுன் ஆணுக்கும் பெண்ணுக்கும் காதல் உண்டாகி, கர்ப்பம் உண்டானால் அந்த நேரத்தில் மூப்பன் இருவருக்கும் அபராதம் விதிப்பார். பிறகு அதே மேடையில் அவர்களுக்குத் திருமணமும் நடைபெறும். பிறந்த குழந்தைகளையும் யாதொரு தடையுமின்றித் தங்கள் குடும்பத்தாருடன் சேர்த்துக் கொள்வார்கள்.

திருச்சியின் சுற்று வட்டாரத்தில் வாழும் வலையர்கள் தங்கள் பணவிழாவை மூன்று விதமாகச் செய்கின்றனர். "மாப்பிள்ளை வீட்டார் ஒரு மரக்கால் அரிசியையும் அதற்கு

வேண்டிய சமையல் பொருள்களையும் மணமகளின் வீட்டில் கொண்டுபோய்ச் சமைக்க, இரு சம்பந்தி வீட்டாரும் கலந்து விருந்துண்ணுவார்கள். விருந்து நடைபெற்ற பிறகு மணமகனின் சகோதரி சென்று மணமகளின் கழுத்தில் தாலி கட்டிவிட்டு வருவதும் உண்டு. திருமண மில்லாமல் பல குழந்தைகள் பிறந்த பிறகும், பண வசதி உண்டான பின் திருமணம் செய்து கொள்வதும் உண்டு.

ஒரு மங்கை துர்நடத்தையுடையவள் என்று நிரூபிக்கப் பட்டால், அவள் கழுத்தில் எருக்கம் பூவை மாலையாகத் தொடுத்து அணிந்து, ஒரு கூடை நிறைய களிமண்ணைத் தலையில் சுமக்கச்செய்து தாங்கள் வாழ்கின்ற கிராமத்தின் எல்லையைச் சுற்றி வரும்படி செய்வார்கள். ஆண்கள்கூட இந்தக் குற்றத்தைச் செய்தால் தண்டிக்கப்படுகின்றனர். ஆனால் ஆண்கள் மூன்று திருமணம் செய்து கொள்ளலாம் என்று பழக்கம் இருக்கிறது.

விவாகரத்து செய்யும் தம்பதிகளின் குழந்தைகளில் ஆண் குழந்தைகள் தகப்பனிடமும், பெண் குழந்தைகள் தாயிடமும் இருக்க வேண்டுமென்று பஞ்சாயத்தின் மூலம் முடிவு செய்யப்படும். திருமணமானதும் இவர்களுடைய குடும்பப் பழக்கத்தின்படி பெண்கள் ஜாக்கெட் அணிவதை நீக்கி விடுகின்றனர். சேலை மட்டும் நெஞ்சை மறைக்கும். இது அவர்களுடைய பண்டையப் பழக்கம். ஆனால் இன்று சிலர் படித்துக் கொஞ்சம் கொஞ்சமாக நாகரிகமடைந்து பல துறைகளில் முன்னேற்றமடைந்து வருகின்றனர். எனவே பழைய பழக்கங்கள் கொஞ்சம் கொஞ்சமாக இவர்களிடம் மறைந்து வருகின்றன.

வாலிபர்கள் பாம்பைக் கண்டால் விடுவதில்லை. பிரான் மலையில் நான் தங்கியிருந்த சமயம் வைரவன் என்ற வலையன் இரு கைகளிலும் இரு நாகங்களைப் பிடித்துவந்து

எல்லோரிடமும் காட்டினன். "இரண்டு நாகங்களும் சண்டை போட்டுக்கொண்டிருந்தன. பக்கத்தில் போனேன். அப்பொழுதுகூட அவை எனக்கு மரியாதை செய்யவில்லை. 'டக்'கென்று பாய்ந்தேன். 'லபக்'கென்று பிடித்துக் கொண்டேன்" என்று சர்வசாதாரணமாய்க் கூறினன்.

மயானத் திருவிழா என்று கூறப்படுகிற நாளில் வலையர் மக்கள் எல்லோரும் கூடி (குழந்தை முதல் கிழவர் வரை) நன்ருக உடை அணிந்துகொண்டு கையில் சிறுசிறு தடியுடன் அருகிலிருக்கும் மயானத்துக்குச் செல்வார்கள். அங்கே கிழக்கு நோக்கி நிற்பார்கள். கையிலிருக்கும் குச்சியைக் கீழே எறிவார்கள். பிறகு அக்குச்சிக்கு வணக்கம் செலுத்துவார்கள். மறுபடியும் எல்லோரும் அக்குச்சியை எடுத்துக் கொண்டு நிற்பார்கள். அவர்களில் சிலர் ஊதுகுழலை ஊதுவார்கள். பெண்களில் சிலர் அப்பொழுது பூமாலைகளைக் கொண்டுவந்து அங்கிருக்கும் நான்கு ஆண்களுக்கு மாலை போடும்பொழுது அவர்கள் கையிலிருக்கும் அந்தக் குச்சியைப் பூமியில் ஊன்றிக் குத்துவார்கள். அந்த மாலை போட்ட நான்கு ஆண்களும் தெய்வமிறல் வந்து ஆடுவார்கள். உடனே அவர்கள் தங்களைச் சுற்றியிருக்கும் பொருள்களை உதைத்துத் தள்ளுவார்கள். தெய்வசக்தியால் மிறல் வந்து ஆடுபவர்களை யாரும் பிடித்து நிறுத்த முடியாது. எவ்வளவு பேர் பிடித்தாலும் தள்ளி விடுவார்கள். பிறகு மிறல் வந்தவர்கள் அந்த ஊரில் உள்ள பல பெரியவர்களின் பெயரைச் சொல்லி அழைத்துப் பல தெய்வங்களுக்குப் பூசை செய்யவும், பொங்கல் இடவும் சொல்லுவார்கள். சில தெய்வங்களுக்கு உயிர்ப் பலியும் கொடுக்கச் சொல்லுவார்கள். சில பெண்கள் அச்சமயத்தில் தங்கள் குழந்தைகளைத் தூக்கிக்கொண்டு பெயர் வைக்கும்படி மிறல் வந்தவரிடம் வேண்டுவார்கள்.

வலையர்களில் இறந்து போனவர்களை எரிப்பார்கள். பதினருவது நாள் கருமாதி செய்வார்கள். கருமாதி செய்ய

வேண்டிய நாளுக்கு முன்தினம் உயிர்விட்ட இடத்தில் ஒரு பானையில் தண்ணீரும் இரண்டு தேங்காய்களை நடுவீட்டிலும் வைத்திருப்பார்கள். அதில் இரண்டு கண்களைப்போல் குங்குமம் வைத்திருப்பார்கள்.

மறுநாள் எல்லோரும் குளத்துக்கோ, மயானத்துக்கோ போவார்கள். அங்கே தீ மூட்டி மரணமடைந்தவருடைய ஆத்மா சாந்தி அடைய பூஜை செய்வார்கள். பூஜை முடிந்தபின் ஏழைகளுக்கு அரிசியும் மற்ற ஆகாரங்களும் கொடுப்பார்கள். கருமாதி அன்று மூத்த மகன் தலைப்பாகை கட்டி, பந்தலில் வைத்திருக்கும் அரிசியை மூன்றுமுறை சுற்றவேண்டும். கணவனை இழந்தவள் அன்றைக்கு ஒரு பானையில் தண்ணீரைத் தன் தோளின்மேல் வைத்துக் கொண்டு தான் வாழும் எல்லையை மூன்றுமுறை சுற்றி வர வேண்டும். அவள் இரண்டுமுறை சுற்றியதும் ஊர் நாவிதர் அப்பானையில் இரண்டு துவாரங்கள் செய்வார். மூன்றும் முறை சுற்றி வரும்பொழுது அவள் (விதவை) அப்பானையைத் தரையில் வைத்துவிட்டு, ஆவேசம் வந்தவள்போல் கத்து வாள், "என்னையும் என் குழந்தைகளையும் விட்டுப் போ" என்று. இதன் கருத்து என்ன?

'இறந்த தன் கணவன் உயிருடன் வரப்போவதில்லை. ஆகையால், தன் கணவன் தன்னையும், தன் குழந்தை களையும் ஒன்றும் செய்யக்கூடாது. எங்களைச் சமாதானமாக வாழவிடு' என்று கத்துவாளாம். இரண்டாம் நாள் மரண மடைந்தவருடைய வீட்டில் உரல் வைத்து, அதனுள் விளக்கு வைப்பார்கள். மரணமடைந்தவருடைய ஆத்மா வந்தால் உரலில் இருக்கும் விளக்கை வணங்கிவிட்டு அப்படியே திரும்பிப்போகுமாம். அது அவர்களிடையே ஒரு நம்பிக்கையாகும்.

இவர்கள் இனத்தில் சிலர் தங்களை 'மூப்பன்மார்' என்று அழைத்துக் கொள்ளுகின்றனர். மேலும் இவர்களில் பல

கிளை ஜாதியார்கள் இருக்கின்றனர். கிளை ஜாதியைத் தீர்மானிப்பவர், 'கம்பளியன்' என்ற குலத்தின் தலைவன் தான். இவர் அருப்புக்கோட்டையில் வாழ்கிறார். இவருடைய உதவி வேண்டுமானாலும், இவரைத் தம் கிராமத்துக்கு அழைக்க வேண்டியதாக இருந்தாலும் பணியாளர்கள் புடைசூழ அவரைக் குதிரையின்மேல் உட்கார வைத்து, அவருக்குக் குடைபிடித்துக்கொண்டும், விசிறிக் கொண்டும் மக்கள் சூழ அவரைக் குறிப்பிட்ட கிராமத்துக்கு அழைத்துக்கொண்டு வருவார்கள். சில குடும்ப விவகாரங்களுக்குப் போடும் அபராதங்கள் எல்லாம் தலைவருக்குப் போய்ச்சேரும். திருமணமானவர்கள் தவறி நடந்தால் இந்தக் 'கம்பளியர்' என்ற தலைவர்தான் அபராதம் விதிக்க வேண்டும்.

இவர்கள் காட்டில் வலை பின்னிப் பறவைகள், விலங்குகளைப் பிடிப்பதில் நேரத்தைச் செலவு செய்வார்கள். தஞ்சையில் வாழும் சிலர் கண்ணி வைத்துப் பறவை, முயல் முதலியவைகளைப் பிடிக்கின்றனர். வலையர்கள் இயற்கையிலேயே மிகவும் தைரியசாலிகள். வீரம் நிறைந்தவர்கள்.

சிலர் ஆற்றில் கூடையை, ''டக்—டக்'' என்று கவிழ்த்து மீன் பிடிக்கின்றனர். மதுரை, தஞ்சை முதலிய இடங்களில் வாழும் வலையர்களில் சிலர் சைவ உணவு உண்பர் என்றும், விதவைகளை மொட்டை அடித்துக் கொள்ளும்படி செய்வார்கள் என்றும் கூறுகின்றனர்.

வலையர்களுடைய கடவுள் ஐயனார் என்றும், சிங்கப் பிடாரி என்றும் கூறுகின்றனர். ''பாடிநெட்டக் கருப்பன்'' என்ற தெய்வத்தையும் வழிபடுகின்றனர். ஆண்டுக்கு ஒரு முறை அமாவாசைக்குப் பிறகு மாசி மாதத்தில் வலையர்கள் எல்லோரும் ஒன்றாகக் கூடித் தங்கள் குலதெய்வத்துக்கு பூஜை செய்வார்கள். திடீரென்று எல்லோரும் ஒன்றாகக் கூடி

ஐயனார் கோயிலுக்குச் சென்று அங்கே பூஜைசெய்து வணங்கிவிட்டு, அப்படியே காட்டுக்குச் சென்று முயல் முதலியவைகளை வேட்டையாடிவிட்டு வருவார்கள். வேட்டையிலிருந்து திரும்பி வரும்பொழுது வலையர்களுடைய மூதாட்டிக்குப் பாக்கு, வெற்றிலை வாங்கி வருவார்கள்.

ஊரில் நடக்கும் ஐயனார் திருவிழாவில், தங்கள் குழந்தைகளுக்குப் பெயர் வைக்கத் தவறியவர்கள் பல வண்ணப் பூக்களை எடுத்துச் சிலையின்மேல் எறிவார்கள். அவைகளை எடுத்துச் சிறு பையனோ அல்லது பூசாரியோ, குழந்தையின் கையில் கொடுப்பான். அப்பூவின் சம்பந்தப் பட்ட பெயரையே நாமகரணம் செய்வார்கள். தஞ்சையில், "ஒரட்ட நாடு" என்ற கிராமத்தில் வாழும் வலையர்கள் தங்கள் வீட்டின் கொல்லைப்புறத்தில் ஒலிவ மரத்தை வளர்ப்பார்களாம். அதில் பேய் வந்து தங்குவதாக நம்புகின்றனர். அதற்கு மாதத்தில் ஒரு நாளைக்குப் பூஜை செய்வார்கள். கண்ணப்பநாயனார் நாளன்றும், பிரான்மலையில் நடக்கும் விசேஷங்களிலும் பெண்கள் கூடி நடனமாடுவதுண்டு. திருவிழா நாட்களில் சைவ உணவு மட்டுமே உண்பார்கள். சிவனையும் வணங்குவதுண்டு.

"சேர்வைக்காரர்" குடும்பத்தைச் சேர்ந்த, "பெரிய மருது", "சின்ன மருது" என்ற இரு சகோதரர்கள் முன்பு இராமநாதபுரம் மாவட்டத்தில் இருந்தார்கள். இவர்கள் அரசர்கள். சிறந்த வீரர்கள். வேட்டையிலும் திறமைசாலிகள். எவருக்கும் தலை வணங்காத மருது சகோதரர்கள் வீரர்களுக்கு வணங்குவர். இவர்கள் நண்பனாக, "வலையன்" என்ற ஒரு சிறந்த வீரன் இருந்தான்.

ஒரு சமயம் மருதுவுடன் வலையனும் காட்டுக்குச் சென்றான். காட்டில் ஒரு விலங்கைத் திடீரென்று வலையன் துரத்திச் சென்றான். நீண்ட நேரமானதால், எல்லோருக்கும் வலையன் என்ன ஆனானோ என்று சந்தேகம் உண்டானது.

ஆனால் அவ்வலையன் ஒரு பெரிய கரடியைக் கொன்று தூக்கிக்கொண்டு வந்து மருதுவின் முன்னிலையில் போட்டு, மண்டியிட்டு வணங்கினான். அவ்வீரனுக்கு மருது சிலை எழுப்பினான். அச்சிலையை இன்றும் காளையார் கோயில் வாசற்படியில் காணலாம். ஒரு வலையனின் பண்டைய உருவத்தையும், கம்பீரமான தோற்றத்தையும், அவன் காட்டிய வீரத்தையும் அரசனின் மரியாதைகளையும் கற் சிற்பி அன்று சிலையாக்கியது, இன்று அதை நாம் கண்டு களிக்கவே அன்றோ?

# 14. சோறு உண்ட பெட்டு

நம் நாடு மிகப் பழங்காலத்திலிருந்தே புண்ணிய பூமி என்று குறிப்பிடப்பட்டு வருகிறது. உலகிலுள்ள எல்லா வகுப்பாரையும்விட நம் நாட்டு மக்கள் மதவுணர்ச்சியால் மிகவும் கட்டுப்பட்டவர்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்த செய்தியே. அத்தகைய மதப்பற்றுள்ள நாட்டில் வட இந்தியாவை விட தென்னிந்தியாவில் கோவில்கள் அதிகம். வட இந்தியாவிலும் கோவில்கள் கட்டப்பட்டிருகின்றன. ஆனால் பலருடைய படையெடுப்பால் கோவில்கள் தாக்கப் பட்டு மறைந்தன. தென்னிந்தியாவிலிருக்கும் கோவில்கள் எல்லாம் அத்தகைய ஆபத்துக்குள்ளாகாமல் தப்பிவிட்டன. நம் நாட்டின் சரித்திரங்களையும் அரசர்களின் செய்திகளையும், போர்வீரனின் செய்திகளையும், கற்புள்ள மங்கையர்களின் வீரச் செய்திகளையும் பண்டைக் காலத்தில் கோவிலின் சுவர், தூண் முதலியவைகளில் செதுக்கி வைத்தார்கள். அவை களைக்கொண்டு நம் நாட்டின் சரித்திரங்களைத் தெரிந்து கொள்ளுகிறோம்.

ஆனால் கல்வெட்டுகளும், செப்பேடுகளும் ஓலைச்சுவடி களும் உண்டாகிப் பல்லாண்டுகள் ஆயின. சுமார் 4000 ஆண்டுகளுக்கு முன் (கி.மு. 2100) கல்வெட்டைப் பற்றி விவிலிய சரித்திரத்தில், ‘‘நான் சொல்லுகிற வார்த்தைகள் ஈயத் தகட்டில் எழுத்தாணியைக்கொண்டு பதித்தாலும் சரி அல்லது கருங்கல்லிலே உளிவெட்டாய் எழுதினாலும் சரியே’’ என்று யோபு என்னும் மகான் தான் கூறும் சொற்களைக் கல்லில் எழுதும்படி புகன்றார் என்று கூறப்பட்டிருக்கிறது.

ஆனால் கல்வெட்டும், செப்பேடுகளும் உண்டாவதற்குமுன் மக்கள் மூத்து நடக்க முடியாமலும், பேச முடியாமலும் இருப்பின் அவர்களைப் பெரிய பானையில் உட்கார வைத்து அவர்களுக்கு வேண்டிய தண்ணீர், ஆகாரம் முதலியவைகளையும் அதில் வைத்துப் பானையின் வாயை மூடி புதைத்து விடுவார்கள். அப்படிப் புதைத்த, "முதுமக்கள் தாழி"கள் பல தென்னாட்டில் கிடைக்கின்றன. அப்படிப் புதைத்த பானைகளின்மேல் பலகையைப்போல் இருக்கும் பெரிய பெரிய பாறைகளை அடையாளமாக வைப்பதுண்டு.

இன்றும் சில இடங்களில் அவ்விதமான சமாதிகளைச் சுற்றிலும் பெரிய பெரிய பாறைகளைக்கொண்டு வட்டமாகக் கிணறுபோல் கட்டிவிடுவார்கள். அப்படிப்பட்ட கிணறுகளில் பண்டைக்காலத்தில் பூஜை செய்வதற்கு வேண்டிய சாமான்களையும், இரண்டு மூன்று கற்களையும் வைப்பதுண்டு. இப்படிப்பட்ட செய்திகளை அறிவதற்குக் கல்வெட்டு சாசனங்கள் மட்டுமே ஆதாரமாக நிற்கவில்லை. கர்ண பரம்பரைச் செய்திகள், இலக்கியம், பழைய நாணயங்கள், சிற்பம், சித்திரம் என்பன போன்ற வேறு பலவகை ஆதாரங்களையும் ஆராய்ச்சி செய்யவேண்டியது அவசியம். ஆயினும் அவைகளை முறைப்படுத்தி முடிவு செய்தல் மிகவும் முக்கியமானதொன்று. அப்படி உண்டான சமாதிக் கிணறுகளை இன்றும் மலைகளின் உச்சியிலும், காடுகளிலும் காணலாம். அப்படிக் கட்டப்பட்டவைகளில் ஒன்றுதான் இந்த "சோறு உண்ட பெட்டு" என்பதாம்.

இந்த மலை நீலகிரி—கோத்தகிரியிலிருந்து, குன்னூருக்கும் உதகைக்கும் போகும் பஸ் மார்க்கத்தில் நான்காவது மைலில் இருக்கிறது. பஸ் பாதையிலிருந்து, "ப்பிராம்" எஸ்டேட்டின் வழியாக முக்கால் மைல் தூரம் மலையடிவாரத்தில் நடந்துசென்று, பிறகு மலையின் உச்சியை நோக்கி நடக்கவேண்டும். அன்று எங்களுடன் கோத்தகிரி டாக்டர் எம். எஸ். ராவ் அவர்களும் காரோட்டு நிபுணர்

கோத்தகிரி திரு. டட்லி துரை அவர்களும் மேலும் சில நண்பர்களும் வந்தார்கள். அன்று நாங்கள் மலை உச்சியை நோக்கி ஏறும்பொழுது, புதர்களையும், செடிகளையும் நீக்கிக் கொண்டே நடந்தோம். ஒரு பக்கத்தில் சில்லென்ற காற்று அடித்துக்கொண்டே இருந்தது. மற்றொரு பக்கத்தில் முயல்கள் ஓடும் ஓசையும், எங்கள் கால்களின் நடை ஓசை, எங்கள் கால்களால் தாக்கப்பட்ட கற்கள் மலையிலிருந்து உருண்டோடும் ஓசையும் எங்கள் காதுகளில் இசையோசையைப்போல் கேட்டன. கையிலிருந்த மிட்டாய்ப் பொட்டலம் காலியாகிவிட்டது. துரை அவர்கள் மற்றொரு பொட்டலத்தைப் பிரிக்கும் ஓசைகேட்டு, முன்னாலே போனவர்கள் பின்னாலே திரும்பி நின்றார்கள். அதுவும் காலியாக்கப்பட்டது. அப்படி மலைஉச்சியை நாங்கள் அடையும்பொழுது தண்ணீர் தாகம் எங்கள் நாக்கை வறட்டியது.

"இந்த மாதிரி சமயத்தில் இயற்கை இந்த மலைவாசிகளுக்குக் கொடுத்த பானம் இது" என்று துரை அவர்கள் கூறிக்கொண்டே, "காட்டுக் காக்கா கரும்பு" என்ற தண்ணீர் நிறைந்த ஒரு செடியை உடைத்து உடைத்துக் கொடுத்தார். அந்தக் "காட்டுக் காக்கா கரும்பு" சுமார் இரண்டு மூன்று அடி நீளம், நம் நாட்டுக் கரும்புபோல், புதராக வளர்ந்திருக்கிறது. அதன் மேலிருக்கும் பட்டையை நீக்கியபின் அதனுள் ஒரு குழாயைப் போலிருக்கும் பகுதியை மென்று சாப்பிட்டுக் கொண்டே மலை உச்சியை அடைந்தோம். எங்கள் தாகமும் ஒருவகையாகத் தணிந்தது. ஆனால் சாதாரணமாய் அடிக்கடி மயக்கம் வரும் மக்கள் இந்த "காட்டுக் காக்கா கரும்பை" சாப்பிட்டுக் கொண்டே வந்தால் அவர்களுக்கு உண்டாகும் "மயக்கம்" கொஞ்சம் கொஞ்சமாகக் குணமாகுமாம். இந்த மலைக்கு ஏன் இப்பெயர் உண்டானது? என்றால், "பண்டைக் காலத்தில் ஏதோ சில வேலையாக இரண்டு மூன்று நாட்கள் இம்மலையில் தங்கும் மலைவாசிகள் இந்த மலையில் ஏராளமாக

வாழும் முயல்களை வேட்டையாடி உண்டு தங்கள் பசியை போக்கிக் கொள்ளுவார்களாம். இக்காரணத்தால் இந் மலைக்குச் "சோறூட்டும் பெட்டு" (பெட்டு = மலை) என் காரணப் பெயர் வழங்கப்படுகிறதாம். இந்த மலையின் உச்சியில் சுமார் இருபதடி சுற்றளவில் கருங்கற்களை ஒன்றின் மேல் ஒன்ருக வைத்துக் கிணறுபோல் அடுக்கிக் கட் இருக்கிருர்கள். அதன் மத்தியில் சுமார் நான்கு ஐந் பேர் நிற்பதற்கு இடவசதியும் இருக்கிறது. அதனுள் அன் மூன்று கற்களையும், ஒரு பித்தளைத் தட்டையும், விளக்கு ஏற் ஒரு மண் அகலையும் கண்டோம்.

இதைப்போன்ற கேணிகள், நீலகிரி மலையில் அநேக இடங்களில் இருப்பதைக் கண்டேன். இவைகள் நீலகிரியில் தோதுவர்கள் வருவதற்கு சுமார் இரண்டாயிரமாண்டு களுக்கு முன், "பூபாலர்கள்" வாழ்ந்த காலத்தில் கட்டப் பட்டனவென்று தோதுவர்கள் கூறுகின்றனர். மேலும், அவர்களைத் தங்கள் மூதாதையர்கள் என்றும் கூறிக்கொள்ளு கின்றனர். ஆனால், நீலகிரியில் வாழும் படகர்களோ இந்தக் கேணி (Cairn) களைப் பாண்டவர்கள் காடுகளில் வாழ்ந்த காலத்தில் கட்டினுர்கள் என்றும், இந்தச் "சோறு உண்ட பெட்டு" மலையை, "பாண்டவர் சாலை" என்றும் கூறு கின்றனர். நீலகிரி மலையில் இருக்கும் கேணிகளில் சில சமயங்களில் ஒரு பெரிய பானையில் சாம்பலும் மனிதர் களுடைய மண்டை ஓடுகளும் இருக்கின்றனவாம். அந்தப் பானையின் மேல் அழகாகச் சித்திர வேலைகளும் செய்திருப் பது உண்டாம்.

சில பானைகளில் போர் செய்வதற்கும், வேட்டையாடு வதற்கும் உபயோகப்படும் வாள், கோடரி, அம்பு, சுத்தி, கத்தி முதலியவைகளையும் காணலாம். ஆனுல், வீட்டுச் சாமான்கள் அதில் இல்லை. சில சமயங்களில் சில கேணி களில் (Cairn) பொன் வளையல்களையும், நகைகளையும் கண்டதாகத் தோதுவர்கள் கூறுகின்றனர்.

இன்று நீலகிரியில் வாழும் படகர்கள் தத்தம் அட்டி களுக்கு அருகிலிருக்கும் (அட்டி=ஊர்) மலையில் இதைப் போலுள்ள கேணிகளுக்கு ஆண்டுதோறும் பாலைக் காய்ச்சி தேங்காய் உடைத்துப் பூசை செய்கின்றனர். இதற்குக் காரணம் கேட்டதற்கு, "நீலகிரிப் பிராந்தியங்களில் வெள்ளாமைக்கு நல்ல மழை உண்டாவதற்கு இந்தக் கேணி பூசை மிகவும் முக்கியம்" என்று கூறுகின்றனர்.

இத்தகைய முதுமக்கள் தாழிப் பழக்கத்திற்குப் பதிலாக இந்த மலைப்பிராந்தியத்தில் வாழும் சிலர், வயதில் பெரிய வர்கள் படுக்கையில் படுத்துக் கொண்டிருந்தால் அவர்களுக்கு ஏதோ ஓர் ஆசை உலகிலிருக்கிறது என்று உணர்ந்து அவர்களுக்கு ஏழு எண்ணெய் தேய்த்து வெந்நீரில் குளிக்கச்செய்து ஏழுவித நல்ல பதார்த்தங் களைச் சமைத்துக் கொடுப்பார்கள். அவர்கள் அதை உண்டபின் சிலர் பிழைப்பதும் உண்டு. சிலர் மரண மடைவதும் உண்டு. இது முதுமக்கள் தாழிகளைப்போல் தற்காலத்தில் செய்யும் ஒரு பழக்கம் போலும்.

# 15. பாடும் குட் கல்

நீலகிரியில் பூர்வீகக்குடிகளான கோத்தர்கள் வாழும் ஊராகிய கொல்லிமலைக்குப் போகவேண்டும் என்ற எண்ணம் உள்ளத்தில் உதயமானதே ஒழிய அந்த இலட்சியம் கைகூடப் பல மாதங்கள் ஆயின.

சமயம் கிட்டியது. நண்பர் கிட்டியுடனும், திரு. கம் பட்டன் அவர்களுடனும் உதகைக்குச் சென்றேன்.

'கொல்லிமலைக்குச் செல்ல, இவர் உதகைக்கு ஏன் போகவேண்டும்? இவர் கெட்டிக்காரத்தனத்தை வெளியில் வேறு சொல்லிக் கொள்கிறார்' என்று சிலர் நினைக்கலாம். சரித்திரம் கற்றவர்களும் நினைக்கலாம். அகநானூறு, நற்றிணை, புறநானூறு, குறுந்தொகை, பதிற்றுப்பத்தில் எட்டாம் பத்து, முதலிய சங்ககால நூல்களைக் கற்றவர்களும் என்னைப் "பித்தன்" என்றே கூறுவர்.

ஆம்! சேலத்தில் இருக்கும் கொல்லிமலைக்குச் செல்ல விரும்பும் நான் உதகைக்குச் சென்றால், என்னை என்ன வென்று கூறுவது?

சேலத்தில் இருக்கும் கொல்லிமலையைப் பற்றித்தான் நானும் கற்றேன். அதைக் காணவும் ஆவல் கொண்டேன். ஆனால் நீலகிரி ஜில்லாவில் உதகையிலிருந்து சுமார் பத்து மைல்கள் சென்றால், மற்றொரு "கொல்லிமலையைக்" காணலாம்.

ஆனால் இவ்வளவு நாட்கள் எனக்கும் மற்றவர்களுக்கும் தெரிந்த 'கொல்லிமலை' சேலம் ஜில்லாவில் இருக்கிறது. இதன் அரசன் வல்வில் ஓரி என்பவன். வில் விடுவதில் இராமரை ஒத்தவன். இவனுடைய சந்ததியார்கள் இன்னும் அந்தக் கொல்லிமலையில் மட்டும் இல்லாமல், பயங்கரமான செந்நாய்களும், புலிகளும், கரடிகளும், மலைப்பாம்புகளும் வாழும் காடுகளிலும் காட்டு மக்களாக அவற்றுடன் கலந்து வாழ்கிறார்கள். சில மலைகளில், "வலையர்கள்" என்றும், சில மலைகளில், "மலையாளிகள்" என்றும், சில மலைகளில் "மலைவெல்லாளர்" என்றும் தம்மைக் கூறிக்கொள்ளுகின்றனர்.

இவ்வளவு திறமை வாய்ந்த வல்வில் ஓரி வாழ்ந்த நாட்டில் ஒரு கொல்லிமலை இருந்தது. அதில் பண்டைக் காலத்தில், 'கொல்லிப்பாவை' என்ற ஒரு மங்கை இருந்தாளாம். அவளைக் காதலித்த அரசன் வருவார் என்று இன்றும் அவள் நிற்கும் நிழல் தெரிகிறதாம்.

தற்காலத்தில் யாருமே காணாத இவளைக் காண வேண்டும் என்பது எனது நீண்ட நாளையத் திட்டங்களில் ஒன்று.

அன்று உதகையிலிருந்து—கொல்லிமலைக்குப் போகும் பாதையில் இறங்கி, அம்மலைக்கு நடந்தே போனோம். நடக்கக் குறைந்தது இரண்டு மணி நேரம் பிடிக்கிறது. கொல்லிமலைக் கோத்தர்களின் இல்லத்தில் அன்று தங்கினேன். மறுநாள் காலையில் என்னுடன் கோத்த நண்பர்களாகிய திரு. ராஜன், மோட்டன், கம்பட்டன், மல்லன், சந்திரன், அரங்கநாதன் ஆகியவர் அடங்கிய ஒரு பெரிய பட்டாளமே புறப்பட்டது.

நாங்கள் கையில் வத்தியும், கர்ப்பூரமும், தீப்பெட்டியும், தடிகளும், பழைக்கோட்டுகளும், பீடிகளும் எடுத்துக்

கொண்டு சென்ற காட்சியைக் கண்டால் கோவிலுக்குத் தான் போகிறோம் என்பர் சிலர். ஆனால் அங்கு கோவிலும் இல்லை குளமும் இல்லை.

நாங்கள் இப்படிப் போய்க்கொண்டிருந்த வழியிலே நன்றாகக் கேட்குமாறு எங்களை யாரோ கைதட்டி அழைக்கவே எல்லோரும் திகைப்போடு திரும்பினோம்.

அப்பொழுது ஒரு பெரியவர், "எங்கே?" என்று என் நண்பர் திரு. இராஜன் அவர்களைக் கேட்டார். அவர் கோத்த மொழியில், "குட் கல்" என்றார்.

"குட் கல்" என்பதை மொழி பெயர்த்து, "பாடும் மணிக் கல்" கொல்லி மலையில் இல்லை. அதை இருந்த இடம் தெரியாமல் எங்கேயோ பகைவர் மறைத்துவிட்டார்கள். நீங்கள் சென்றாலும் சும்மாதான் திரும்பி வரவேண்டும்," என்று உறுதியாகக் கூறினார் கோத்தப் பெரியார்.

சுமார் முப்பது மைல் பஸ்ஸில் பிரயாணம் செய்த எனக்கு "இல்லை" என்றால் எப்படி இருக்கும்?

"கொல்லிமலை" என்பது பிரசித்தி பெற்ற இடம். அங்கு யாரோ ஒரு பெண் மலையிலிருந்து வாலிபர்களைப் பார்த்துக்கொண்டே இருக்கிறாளாம் என்று சொல்லி டக் கென்று நிறுத்தினேன்.

"ஓ" பெண்ணைப் பார்க்கும் ஜோர்தான், ரொம்ப தடபுடலா இருக்கு. அங்கே பெண்ணுமில்லை, பேயுமில்லை. பண்டைக்காலத்தில் "பாடும் குட் கல்" என்று ஏழு கற்கள் இருந்தன. இன்று அவற்றைக்கூடக் காணோம். நீங்கள் போனாலும் வீணாகத்தான் திரும்பி வரவேண்டும் என்று மிகவும் கண்டிப்பாகக் கூறினார்.

எங்களுடன் அன்று பத்துப் பன்னிரண்டு வயதுச் சிறுவன் ஒருவனும் வந்தான். என்னைக் கண்டது முதல் சாப்பிடக்கூடப் போகாமல், நான் எங்கே சென்றாலும் அவன் நிழலைப்போல் ஒட்டிக்கொண்டே இருந்தான்.

பெரியவர் கூறியதும் சிறிது நேரம் நின்றோம். என் உள்ளத்தில் 'மலையின் மேல் ஏதாவது ஒரு சரித்திரம் கிடைக்கும்' என்று ஏதோ ஒன்று கூறுவதைப்போல் இருந்தது. நான் இதை நினைத்தபோது, வயதில் சிறியவன், "வாங்கோ போவோம் "குட்கல்" கிடைக்கும் என்று என் உள்ளம் கூறுகிறது" என்றான் (சிறுவன்) அரங்கநாதன்.

"சரி! வாருங்கள் போவோம். தெய்வம் சிறுவன் மூலமாகவும் கூறலாம்" என்று கூறிக் கொண்டே புறப்பட்டோம். கொல்லிமலையின் மேலே ஏற ஏற எங்களுக்குப் பெருமூச்சு வாங்க ஆரம்பித்தது. பாதையில் பல நதிகளும் காட்டு ஓடைகளும், அருவிகளும் குறுக்கிட்டன. என்ன சோதனை? சில இடங்களில், ஒதுங்கியும் தடுமாறியும் நடந்தோம். சில இடங்களில் பாறைகள் நாங்கள் போகவேண்டிய பாதையையே அடைத்திருந்தன. இந்த மலைப்பிரதேசங்களில் தெய்வ நம்பிக்கைதான் பெரிய துணை. நம்முடைய புத்திசாலித்தனத்தினாலும், சாமர்த்தியத்தினாலும் எதுவும் நடந்ததில்லை. நடந்துவிடும் என்று கர்வப்படுவதற்கும் இடமில்லை. ஆபத்து ஏதாவது நடக்குமோ என்ற அவநம்பிக்கைப்படுவதற்கும் அங்கு இடமில்லை. வழி தெரியவில்லை. இனி மேலே என்ன செய்வதென்று தோன்றாமல் திகைத்து நின்றோம். சுற்றுமுற்றும் பார்த்தபோது கீழே மலைச்சாரலில் வயலில் சிலர் ஏதோ வேலைசெய்து கொண்டிருந்தது தெரிந்தது. அவர்களுக்கு நன்றாகக் கேட்கும்படி நாங்கள் கை தட்டி அழைத்து, "நாங்கள் "குட் கல்லைக்" காணவேண்டும். அது எங்கே இருக்கிறது? உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டோம்.

"இதுவரையில் நீங்கள் வந்த வழி, சரிதான்! இனிமேல் நீங்கள், வலப்பக்கமாக, மலைஉச்சிக்குப் போகவேண்டும். அந்தக் "குட்கல்" ஓர நள்ளிக்கும், குளிசோலைக்கும் இடையில் நேர் மேல் உச்சியில் இருக்கின்றன. நாங்கள் பார்த்துச் சுமார் இருபது ஆண்டுகளுக்கு மேல் ஆயின" என்று தைரியமும், அதைரியமும் சேர்த்துக் கூறினார்கள்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் என் உள்ளம் வேதனை அடைந்தது. ஏனென்றால், நாங்கள் இருப்பதே மலை உச்சி: கடல் மட்டத்திற்கு மேல் 7,700 அடி உயரத்திலிருந்தோம். இன்னும் நடக்கவேண்டும் என்றால், எப்பொழுது திரும்பிப் போவது? இருள் சூழ்ந்து கொண்டால்—எங்கள் கதியைச் சற்றுச் சிந்தனை செய்தோம்.

உடனே என் தலையில் அணிந்திருக்கும் தொப்பியை எடுத்தேன். ஆண்டவனையும், என் குல தெய்வத்தையும் நினைத்துக் கண்ணை மூடினேன். நான் இங்ஙனம் செய்ததும் எல்லோருமே அப்படித்தான் செய்தார்கள் போலும். எங்களிடம் சிறிது நேரம் மௌனம் குடிகொண்டது.

நான் கண்ணைத் திறந்ததும், என் பக்கத்தில் ஒருவரும் இல்லாததைக் கண்டு கலங்கினேன். சுற்றுமுற்றும் பார்த்தேன். ஒருவரையும் காணோம். என் உள்ளம், "டக்—டக்—பக்—பக்" என்று தந்தி அடித்தது.

திடீரென்று நான் நிற்கும் இடத்திற்குச் சற்றுத் தூரத்தில் ஒரு பெரிய புதரிலிருந்து, "சல—சல" வென்ற ஓசை கேட்டது. உதகையின் குளிரில்கூட, அந்தச் "சல—சலப்" பைக் கேட்டதும் வியர்வை—வியர்வையாகக் கொட்டியது. சும்மா இருந்தால் ஆபத்து என்று நினைத்து "ஓ—ஹா!" என்று அந்த மலைப்பிராந்தியமே இடிந்து விழும்படியாக கத்தினேன். உடனே, அந்தப் புதரிலிருந்து "ஓ—ஹா!"

''வெற்றி வெற்றி'' என்று எல்லோரும் வெளியில் வந்தார்கள்.

''கண்ணைத் திறந்து பார்த்துப் பயந்தே போனேன். ஒருவரும் இல்லையே?'' என்று கேட்டேன்.

''நீங்கள் ஆண்டவனை வேண்ட இந்தக் ''குட்கல்'லும் குதித்துக்கொண்டு வெளியில் வந்தது'' என்று கூறினார் என் நண்பர் திரு. ராஜன் அவர்கள்.

நாங்கள் கண்ட காட்சியை என்னவென்று கூறுவேன்? என் நெஞ்சில் இருந்த ஏக்கம் மறைந்து, ஊக்கம் நிறைந்தவனாய்ச் சிந்தனையோடு நின்றேன். சுமார் மூன்று அல்லது நான்கு அடி உயரமும் சுமார் ஒன்றரையடி அகலமும் கொண்ட ஏழு பாறைக் கற்களைத் தரையில் புதைந்திருந்தார்கள். நாங்கள், அந்தக் கற்கள் ஒவ்வொன்றையும் தனித் தனியாகத் தட்டிப் பார்த்தோம். ''ஆனந்தம்! ஆனந்தம்'' என்று கூவிக்கொண்டே கூத்தாடினேன். ஒவ்வொரு பாறையும் தனித்தனியாகப் பாட்டுப்பாட ஆரம்பித்தது. ஒவ்வொன்றுக்கும் தனித்தனி இராகம். ''ஜலதரங்கம்'' அடித்தால் எப்படி இருக்குமோ அங்ஙனமிருந்தது அந்தப் பாட்டு.

ஏழு கல்லையும் எடுத்துத் தரையை மட்டப்படுத்தி, நான்கு கற்களைத் தரையின்மேல் ஒவ்வொரு பாறையையும் தனித்தனியாகத் தரையில் படாமல் படுக்க வைத்தோம். பிறகு மற்றொரு பெரிய கல்லை எடுத்துத் தட்டினோம். ''கணீர்—கணீர்'' என்ற ஓசையைக் கேட்டோம். என்னுடன் வந்த அந்த ஏழு கொல்லிமலைக் கோத்தர்களையும் ஏழு கற்களுக்குப் பின்னால் உட்கார வைத்தேன்.

''பாவையைப் பிடிக்க வந்தவர்கள், பாறையில் பாட்டைப் பிடித்தோம்'' என்று கூறி ''கிளிக்'' என்று புகைப்படம் எடுத்துக்கொண்டு, ''வெற்றி—வெற்றி'' என்று கூவிக்கொண்டே ஊர் வந்து சேர்ந்தோம்.

# 16. பேசிய வேட்டில் மரம்!

இறந்தவர்களுக்கு வீரக்கல் நடுவது பண்டைத் தமிழ் மரபு. அக்காலத் தமிழர்கள் கற்புடைய மகளிருக்கு மகா சதிக் கல்லை நட்டு வணங்கினார்கள். அக்கல்லில் அவர் களுடைய பெயர்களையும் வீரச்செயலையும் குறித்து வைத்தார் கள். பிறகு இறந்தவர்களின் உருவத்தையே அமைத்து வைத்து வணங்கும் வீர வணக்க வழக்கமும் படிப் படியாக உண்டாயிற்று. கற்பரசியாகிய கண்ணகிக்குச் செங்குட்டுவன் கல்லால் சிலையைச் செய்து பிரதிஷ்டை செய்தது அனைவரும் அறிந்ததே. நீலகிரியிலுள்ள கோத்தர் களிடையே இன்றும் இத்தகைய மரபொன்று உண்டு என்பதைப் பலர் அறியார். அது சம்பந்தமாக அவர்கள் சொன்ன பல கதைகளில் ஒன்றைத்தான் இங்கே தருகிறேன்.

கோத்தகிரியில் ஒருசமயம் அந்தக் கோத்தர்கள் சில ரிடம் நான் பேசிக்கொண்டு இருந்தபொழுது, 'இவரும் கோத்தர்தான். ஆனால் இவர் அக்காலவாசி அல்ல. இவர், கொல்லிமலையைச் சேர்ந்த கோத்தர்' என்று ஒருவரைச் சுட்டிக்காட்டினார் என் நண்பர். 'கொல்லிமலை' என்று கூறியதும், 'இவர் சேலத்திலிருந்து வந்திருக்கிறாரா?' என்று கேட்டேன். நண்பர் சிரித்தார். 'உதகையிலிருந்து சுமார் பத்து மைல் பஸ்ஸில் சென்றபின் இரண்டு மைல் நடந்து சென்றால் கொல்லிமலைக்குப் போய்ச் சேரலாம். அம்மலைதான் கோத்தர்களுடைய ஊர்' என்றார்.

நீலகிரியில் கொல்லிமலை என்ற பெயரில் ஒரு மலை இருக்கிறது என்பதைக் கேட்டதும் எனக்கு மிகுந்த

ஆச்சரியம் ஏற்பட்டது. ஏனெனில் அவ்வாறு அதற்குமுன் நான் கேள்விப்பட்டதேயில்லை. எனவே அதைப்போய்ப் பார்க்க வேண்டுமென எனக்கு ஆர்வம் பிறந்தது. அதன் விளைவாக மறுநாள் காலையில் நானும் திரு. கிட்டி, பாலு அவர்களும் கோத்தகிரி பஸ் நிலையத்தை அடைந்தோம். பஸ் நிலையத்தில் எங்களுக்குச் சற்று நேரத்தில் ஏற்பட்ட சோதனை எங்களை ஒரு கணம் மலைப்படையும்படி செய்து விட்டது. ஏனென்றால் எங்களுடன் கொல்லிமலைக்குத் திரு. கம்பட்டனும் வருவதாகக் கூறியிருந்தார். அங்கு அவரைக் காணோம்.

கோத்தகிரி என்பது நீலகிரிப் பகுதியில் கடல்மட்டத் திற்குமேல் சுமார் 6000 அடி உயரத்திலுள்ள சுக வாசஸ்தலம் ஆகும். அன்று கால நிலை நல்ல மழையும் மந்தாரமுமாக இருந்தது. மப்பும் மந்தாரமும் இல்லாத பகல் நேரத்தில் கோத்தகிரி பஸ் நிலையத்திலிருந்து பார்த்தால்தான் மேட்டுப் பாளையமும், கோயம்புத்தூரும் தெளிவாகத் தெரியும். அன்று மழையும் மந்தாரமும், மூடு பனியுமாக இருந்ததால், திரு. கம்பட்டன் அக்காலிலிருந்து வருவதைக் காண முடியவில்லை. (அக்கால கோத்தர்களின் கிராமம்) முதல் பஸ்ஸையும் தவறிவிட்டோம். சிறிது நேரத்திற்கெல்லாம் அவரும் வந்தார்.

கோத்தகிரியிலிருந்து உதகைக்குச் சென்று, அங்கிருந்து கொல்லிமலை வழியாகச் செல்லும் பஸ்ஸில் கொல்லிமலைக்குப் போகும் பாதையில் இறங்கி, ஒற்றையடிப் பாதையில் நடக்க ஆரம்பித்தோம். ஒரே இறக்கம். மழைக் காலமாக இருந்த தால் களிமண் பூமியில் கால் வைப்பதைப்போல் இருந்தது.

'வழுக்கி விழுந்தால், சீக்கிரமாக இந்த மலைச்சாரலைப் போய் அடையலாம்' என்று கூறிச் சிரித்தார் நண்பர்.

இப்பகுதியில் நடந்தபோது ஆடுமாடுகள் கூடக் கால் வழுக்கி உருண்டு கீழே விழுந்து, இறந்து விடுவதும் உண்டாம். காற்ளே உதகையின் காற்று. உடலைக் கடிப்பது போல் இருந்தது. சூரியன் மறைவதற்குள் போகவேண்டும் என்று வேகமாக நடக்கலாமென்றாலும், தரை வழுக்க ஆரம்பித்தது. தட்டுத் தடுமாறி ஒரு வகையாக, முதலில் ஒரு டீக்கடைக்கு நடந்து சென்ளேம்.

அந்த டீக்கடையில் எல்லா இனமக்களும் டீ குடித்துக் கொண்டிருந்தார்கள். அந்த டீக்கடைதான் அந்த இடத்திற்குப் பெரிய ஓட்டல்போல் காட்சி அளித்தது. இருந்தாலும் எல்லா வசதிகளும் டீக்கடையில் இருக்கின்றன. அந்த டீக்கடையைக் கொல்லிமலையில் வாழும் ஆதிவாசிகளாகிய கோத்தரில் ஒருவரே நடத்துகிளுர். அன்றிரவு கொல்லிமலையில் தங்கினேம்.

கொல்லிமலையின் அரசன் வல்வில் ஓரி என்பவன். வில் விடுவதில் மிகவும் தேர்ந்தவன். ஓரியின் சந்ததிகள் இன்றும் கொல்லிமலையில் இருக்கின்றனர். அவர்கள் தங்களைக் 'கொல்லிமலை மலையாளிகள்' என்று கூறிக் கொள்கின்றனர். மலையாளிகள் என்பதற்கு மலையை ஆளக் கூடியவர்கள் என்பது பொருள். (கேரள நாட்டு மலையாளி கள் அல்ல) இன்றும் அவர்கள் வில்விடுவதில் நல்ல தேர்ச்சி உள்ளவர்கள். அந்தக் கொல்லிமலைதான் சங்க கால நூல்களில் வரும் மலை. அது சேலத்தில் உள்ளது'' என்ளுர் என் நண்பர்.

கோத்தர்கள் வாழும் இந்த (நீலகிரி)க் கொல்லிமலை யில் என்ன இருக்கிறது? என்று பார்க்கலாமென்ற எண்ணம் தூண்டியதால், மறுநாள் அவர்களுடைய வீடுகளையும், குடிசைகளையும், மலைகளையும் சுற்றிப்பார்க்கத் தொடங் கினேன். அங்ஙனம் சுற்றிக்கொண்டு வரும்பொழுது பாடி

யிலிருந்த எல்லா வீடுகளுக்கும், நடுவில் சிறிய திண்ணை போல், கட்டி அதற்கு மத்தியில் உலக்கையைப்போல், இரண்டு அடி உயரத்தில் ஒரு மரம் நடப்பட்டிருந்ததைக் கண்டேன். அதைக் கண்டதும், நான் யாருடைய 'வீரக் கல்லோ!' என்று நினைத்துக் கேட்டேன்.

'அது வீரக்கல் அன்று. அது பண்டைக்காலத்தில் எங்களிடம் பேசிய 'வேட்ல் மர்ம்!' அது ஒரு பெரிய கதைங்கோ, என்று கதை சொல்ல ஆரம்பித்தார் ஒரு பெரியவர்.

'வேட்ல் மர்ம்' என்பது கோத்தர் மொழியில் 'களத்தூண்' என்று பொருள்படும். பண்டைக்காலத்தில் கொல்லிமலையில் பயிரான தானிய வகைகளைச் சுற்றிலும் கொட்டி, இந்தக் களத்தூணில் மாடுகளைக் கட்டிக் 'களமடிப்பது' வழக்கம். இந்தக் கொல்லிமலையில் பண்டைக்காலத்தில் தெய்வ பக்தியும், அன்பும், நேர்மையும் கொண்ட இரு கோத்த சகோதரர்கள் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுக்குத் திரண்ட சொத்தாகிய எருமைகளும், நிலங்களும் இருந்தன. ஒரு நாள் இந்தச் சகோதரர்களின் நிலத்தில் விளையும் சாமையைக் களமடித்தார் அண்ணன்.

'களம் அடிக்க அடிக்க அவர் மனைவியானவள் ஒரு பக்கமாகக் கொட்டி வைத்துக்கொண்டே வந்தாள். ஆனால் தம்பியும், தம்பி மனைவியும் வயலுக்குப் போய்விட்டார்கள். மற்றக் கோத்தர்களும் அவரவர்கள் வயல்களுக்கு வேலை செய்யப் போய்விட்டார்கள். களத்தில் சாமை எல்லாம் அடித்து முடிந்தது. ஆனால் தம்பி இல்லாமல் பங்கு போட விருப்பமில்லை அண்ணனுக்கு. ஆகாயத்தில் மேகங்கள் சூழ்ந்து இருண்டுவிட்டது. மழை பெய்வதற்குமுன் சாமை முழுவதையும் பங்குபோட வேண்டும். சகோதரர்கள் இல்லாமல் எதையும் பங்கு போடக் கூடாது என்று கோத்தர்களுக்குள் ஒரு பழக்கம் அன்று இருந்ததாம். அன்று ஊரில்

ஒருவரும் இல்லே. ஆகையால் 'நான் பங்கு போடும் சாமைக்கு யார் சாட்சி? என்று மனக்கலக்கத்துடன் வேதனேப் படும் பொழுது 'நீ பங்கு போடு' நான் சாட்சி இருக்கிறேன்' என்று ஒரு குரல் கேட்டதாம். உடனே திரும்பிப் பார்த் தால் யாருமில்லே. அந்தக் குரல் களத்தூண் கட்டையி லிருந்துதான் வந்தது என்று நன்ருகத் தெரிந்ததாம்.

'உடனே அண்ணன் சாமையைப் பங்கு போடத் தொடங்கினுன். அன்று முதல் இது தெய்வீகக் கட்டை என்று கருதி இதனிடம் எல்லோரும் பக்தியும் மரியாதை யும் கொண்டார்கள். அன்று முதல் கொல்லிமலேயில் கோத்தர்களுக்குள் ஏதாவது தகராறு வந்தால், 'வேட்ல் மர்ம்' சாட்சியாகக் கூறுகிறேன் என்று பலர் கூறுவார்கள். இன்றும் கோத்த மங்கையர் இந்தக் கட்டையைத் தொடக் கூடாது. பூசாரியும் பூஜைக்குப்பின் இந்த 'வேட்ல் மர்ம்'மை வந்து வணங்குகிருர். இந்த 'வேட்ல் மர்ம்' பல்லாயிரம் ஆண்டுகளாக இருக்கிறது. இது என்று நடப் பட்டது' என்பது என் தாத்தாவுக்குத் தாத்தாவுக்குக் கூடத் தெரியாதாம். ஆனுல் ஒன்று: இன்றும் செல்லரிக் காமல் இருக்கிறது. மழை, காற்று பனி எதனுலும் பாதிக் கப்படவில்லே. ஆனுல் நாளுக்கு நாள் வளர்ச்சியில் குறைந்துகொண்டே வருகிறது' என்று வயதில் பெரிய கோத்தர் கதையைக் கூறி முடித்தார்.

காட்டில் கேட்ட கதைகளேயும், கண்ட நிகழ்ச்சிகளேயும் நாடோடிப் பாடல்களில் வரும் கருத்துக்களேயும் வைத்துக் கொண்டு சற்று ஆராய்ந்தால் அவை ரசமான கருத்துக் களே நமக்கு ஊட்டும். இவற்றைப் போல் பல காடுகளில் பல கதைகளேக் கேட்டு இன்பமடைவதும் உண்டு. ஆனுல் அக்கதைகளில் சில, ஆராய்ச்சி முடிவுகளுக்கு இடமளிக்க இன்னும் மறுத்து நிற்கின்றனவே!

நானும் கொல்லிமலை திரு. ராஜன் அவர்களை அந்த 'வேட்டல் மர்ம்' அருகில் உட்கார வைத்து, கிளிக் என்று ஒரு படம் பிடித்துக்கொண்டேன்.

# 17. எங்குமில்லாத கோத்தர்கள் பழக்கம்

நீலகிரியில் ஆதிவாசிகள் பலர் வாழ்ந்தாலும், கோத்தர் களிடம் நான் கண்ட எவ்வளவோ உயர்ந்த பண்புகளில் இவையும் சில.

"உலகம் தோன்றிய நாள் முதல் மக்கள் மரணமடைந்த வர்களுக்காகச் செய்யும் நீத்தார் வழிபாடுகள் படிப்படியாகப் பல இன மக்களிடத்திலும், பல மதத்தினர்களிடத்திலும் பல வகையாக மாறிக்கொண்டு வருவதைக் காணும்போது நீத்தார்களுக்காக ஒவ்வோர் இனத்தாரிடத்திலும், மதத்தின ரிடத்திலும் செய்யும் சடங்குகள் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்தே செய்யப்பட்டு வருகின்றனவென்பது தெரி கின்றது. இவைகளைப் போலவே நீலகிரி—'கோவ்' மக்களும் நீத்தார் வழிபாட்டை ஒரு வகையாகக் கொண்டாடுகின்றனர்.

பண்டைக் காலம் முதற்கொண்டு கோவ் மக்களில் யாராவது மரணமடைந்தால், அவர்களைப் பெரிய மண் பாண்டத்தில் அடக்கம் செய்வார்கள், அல்லது மரணமடைந் தவர்களைத் தீயிலிட்டுச் சாம்பலாக்கியபின், அவர்களின் எலும்புகளை ஒன்ருகச் சேர்த்து, மண்பாண்டமாகிய தாழியில் இட்டுப் புதைத்து வைப்பார்கள். அத்தாழிகள் புதைத் திருக்குமிடங்களுக்கு "நெலாக் கோடு" என்று பெயர் கூறுகின்றனர்.

சில ஆண்டுகள் கழிந்தபின் ஏதாவது ஒரு குறித்த ஆண்டில் தனித்தனியாகப் புதைத்த தாழிகளை எல்லாம் ஒன்று சேர்த்து, தம் தம் நெருங்கிய உறவினர்களாகிய மரித்தோரின் எலும்புக் கூடுகளை எடுத்து, தனித்தனியாகச் சிறிய தோர் கட்டிலில் வைத்து அந்தந்தக் குடும்பங்களின் சக்திக்கு ஏற்றுற்போல், அம்மரித்தோரின் பாவ நிவாரணத் திற்கென்று மாடுகளைப் பலியிடுவார்கள். இந்த பண்டிகை கொண்டாடும் பொழுது ஏழு ஊர் கோவ் மக்களும், வெளி யூரில் வேலை செய்யும் "வேட்கோவர்"களும் ஒன்ருகச் சேர்ந்து கொள்ளுவார்கள். இப் பண்டிகை சடங்கு குறித்த அக்காலில் மிகவும் விசேஷமாகக் கொண்டாடப்படும். இச் சடங்குக்கு "வற சாவு பண்டிகை" என்று பெயர். (அக்கால்—கோவ் மக்கள் வாழும் இடத்திற்குப் பெயர்—கிராமம்).

அன்று அக்காலே ஒரு பெரிய குதூகலமாகவும், ஆடம்பரமாகவும், விழாக்கோலம் பூண்டிருக்கும். சிலர் சக்திக்குத் தகுந்தாற்போலும், இரண்டு மூன்று குடும்பங்கள் ஒன்ருகச் சேர்ந்தும் செய்துவிடுவதும் வழக்கம். அன்று வேலைக்குப் போகாமலிருப்பர். சைவ சாப்பாடு நடை பெறும். வயதில் பெரியவர்கள் இருந்தால் அவர்களுக்கு முதலிடம் கொடுத்து மரியாதை செய்வார்கள். பிராமணர், இஸ்லாமியர், கிறிஸ்தவர், இந்துக்கள் முதலியவர்களுக்குள் இனப்பிரிவுகள் இருப்பதைப்போல் நீலகிரியில் வாழும் கோவ் மக்களுக்குள், (1) தபேர் கோத்திரம், (2) அமிர் கோத்திரம், (3) காகரின் கோத்திரம், (4) மதகுரு கோத்திரம் என்று நான்கு கோத்திரங்கள் இருக்கின்றன. இவர்களுக்குள் நான்கு கோத்திரங்கள் இருந்தாலும், தங்களுக்குள் பெண் கொடுக்கல் வாங்கல் உண்டு. ஏழு கோவ் மக்களின் ஊர்களுக்குள்ளும் பெண் கொடுக்கல் வாங்கல் உண்டு. ஆனல் திருமணம் என்ற சடங்குகள் இந்த கோவ் மக்களின் இனத்தாரிடத்தில் இல்லை.

கோவ் மங்கையர்கள் மாதத்தில் ஏழு நாட்கள் தனி வீட்டில் இருப்பதற்காக, எல்லா வீடுகளுக்கும் சற்று தூரத்தில் ஒரு தனிவீடு கட்டி, அதில் அந்த எல்லேக்குள்ளிருக்கும் மங்கையர்கள் மாதவிலக்கு ஏற்பட்டால், நான்கு ஐந்து என்று மொத்தமாகக் கூடி இருப்பார்கள். சில சமயங்களில் ஒரு பெண் தனியாகக்கூட இருப்பதுண்டு. அதற்குப், "பெண்கள் தூரவீடு" என்று பெயர்.

கோவ் பெண் பிள்ளைகள் பத்து வயதானதும் அவர்களை தூரவீட்டுக்கு அனுப்பி வைப்பார்கள். அந்தப் பத்து வயது சிறுமிக்கு தூரவீட்டிலிருக்கும் மங்கையர்கள் மூன்று நாட்கள் வரையில், ஆண் பெண் உறவு முறைகளையும், இல்லற வாழ்க்கை முறைகளையும் போதிக்கின்றனர். இதைப் போல் அந்த சிறுமி அடிக்கடி சமயம் வரும்பொழுதெல்லாம் தூரவீட்டுக்கு அனுப்பப்படுகிருள். அங்கே, "குடும்பத்தில் சகோதரர்கள் எல்லோருக்கும் கீழ்ப்படிந்தும், ஒற்றுமை கெடாமலும் வாழவும் தன் கணவனுக்கே உரியவளாக வாழவும் குடும்பம் ஒற்றுமையாக வாழ பெண்கள் கையாளக் கூடிய முறைகளையும், சமையல் முறைகளையும் கற்றுக் கொடுக்கின்றனர். பிறகு அவளை நான்காவது நாளில் தனக்கு மணமுறை உள்ளவனுகவும், தன் வயதுக்கு ஒத்தவனுகவும், தனக்குப் பிரியமுள்ளவனுகவும் உள்ள ஒரு சிறுவன் வீட்டுக்கு அனுப்புகின்றனர். அங்கே மாமியார் அந்தச் சிறு பெண்ணை அன்புடன் பராமரித்து, தன் பையனும் அப்பெண்ணும் பழகிய பிறகு மூன்றும் நாள், அந்தச் சிறுமியை அவளுடைய பெற்ருேர் வீட்டுக்கு அனுப்பி விடுவாள். இச்சீர் முறையை கோவ் மக்கள், "முதன் முதல் போதல்" என்று கூறுகின்றனர்.

இந்தச் சிறுமிக்குப் பன்னிரண்டு, பதிமூன்று வயதானதும் "பூமுடிப்பு" சடங்குகள் செய்து, புதிய ஆடைகள் அணிவித்து, தங்கள் சக்திக்கு ஏற்றபடி நகைகள் அணிவித்து, கூந்தலுக்குள் மலர் வைத்து, ஒரு சிறுவன்

இருக்கும் இல்லத்திற்கு அனுப்பி வைப்பார்கள். இவ்வித மாக கோவ் பெண்கள் அனுபவமுள்ளவர்களாக ஆக்கப்படு கின்றனர். பிறகு பருவமடைந்ததும், தன்னைக் காட்டிலும் இரண்டு மடங்கு வயதுடைய ஒரு வாலிபனைத் தானே மணமகனாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறாள். பின்பு அந்த மணமகன், தன் புதிய மாமனாரின் பாதங்களில் வணங்கி, ஒரே ஒரு பணத்தைத் தன் காணிக்கையாக ''பரியப் பணம்'' என்று மாப்பிள்ளை பெண்ணுக்கு ஈடாகக் கொடுத்து விடுகிறான். மற்றபடி எந்தவிதமான சடங்குகளும் இல்லை. இச்சடங்குகள் செய்து முடிந்ததும் மறுநாள் மண மகளை, மணமகன் தன் வீட்டுக்கு அழைத்துச் செல்லுகிறான்.

திருமணமானபின், நம்மவர்போல் முதல் குழந்தை பெண்ணின் தாய் இல்லத்தில், பிரசவமாவதில்லை. தன் கணவன் இல்லத்தில்தான் முதல் குழந்தை பிரசவமாக வேண்டும். பெண்ணின் தாய், மாப்பிள்ளையின் வீட்டில், குறிப்பிட்ட நாள் வரையில் இருந்து, பிரசவம் பார்க்க வேண்டும். இன்றும் இந்தப் பழக்கம் நடைமுறையில் இருந்து வருகிறது.

# 18. கோத்தர்களின் பூசாரி தேர்தல்

தற்காலத்தில் தேர்தலைப் பற்றிய செய்திகள் யாவும் பொதுமக்கள் எல்லோருக்கும் தெரியும். அதைப் பற்றிய செய்திகளை நாம் பல பத்திரிக்கைகளில் வாசித்தால் அவை வேடிக்கையாகவும் இருக்கும். ஆனால் ஒருவகைத் தேர்தல் மட்டும் பணத்தாசைக்கும், முகத் தாட்சண்யத்திற்கும், சண்டை ஊழல்களுக்கும் இடமில்லாமல், அன்று முதல் இன்று வரையில் உலகில் நடைபெறுகிறது என்றால், நம் எல்லோருக்கும் மிகவும் ஆச்சரியமாக இருக்கும் அல்லவா?

அதுதான் நீலகிரியில் வாழும் ஆதிவாசிகளாகிய கோத்தர்களிடையே நடைபெறும் தேர்தல். அது ஆண்டவனால் நடத்தப்படும் தேர்தல்.

நீலகிரி—கோத்தகிரியில் வாழும் கோத்தர்களின் இனத்தாரில் பூசாரி சமீபத்தில் காலமாகிவிட்டார். அவருடைய மகன் திரு. நடராசன் என்பவர் முதலில் ஈரோடு தபால் நிலையத்தில் வேலை பார்த்து வந்தார். அதை இராஜினமா செய்தபின் அவர் ஒரு நூல் நிலையத்தில் வேலை பார்த்து வந்தார். அப்படி நூல் நிலையத்தில் வேலை பார்த்துக்கொண்டிருந்தபொழுது அவருடைய தகப்பனரான பூசாரி காலமானதால் புதிய பூசாரித் தேர்தலுக்கு வெளியூரில் வேலை பார்க்கும் கோத்தர் இனத்தார் எல்லோரும் குறிப்பிட்ட நாளில்

கோத்தகிரி—அக்காலில் வந்து கூடிவிட்டார்கள். கோத்தர் இனத்தாரில் பூசாரித் தேர்தல் நடத்த வேண்டுமானல் அமாவாசைக்குப் பிறகு முதலில் வரும் திங்கட்கிழமை அன்று எல்லா கோத்தர் ஆண்களும் மரணமடைந்த பூசாரியின் குடும்பத்தினரும் சூரிய உதயத்திற்கு முன், குளித்துவிட்டுக் கோத்தர்கள் கோவிலுக்கு வந்து சேர்ந்து விடுவார்கள். கோத்தர் இனத்தாரில் "மிறலாடி" என்பவர் தனியாக இருப்பார். பூசாரித் தேர்தல் அன்று அவரும் குளித்துவிட்டுக் கோவிலுக்குச் செல்லுவார். எல்லோரும் கும்பலாகப் பூசை செய்யும்பொழுது, மிறலாடிக்கு மிறல் ஏறி நடனமாடிக் கொண்டே வந்து கும்பலாக இருக்கும் கோத்தர் ஆண்களில் ஒருவரைப் பிடிப்பார்; அவர் பிடிக்கும் "ஆள்" பூசாரியின் குடும்பத்தினரில் ஒருவராகவும் இருக்கலாம்; அல்லது கம்பட்டீஸ்வரனின் கட்டளை எப்படியோ அப்படியே மிறலாடி மற்றவரையும் பிடிக்கலாம். இந்தத் தேர்தலில் எவ்விதமான ஊழலும் இராது. இது ஆண்டவனின் கருணைக் கட்டளைதான்.

மிறலாடி பிடித்த கோத்தர்தான் அன்றுமுதல் கோத்தர் குலத்துப் பூசாரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதாக ஒரே மனத்துடன் இன்பத்தில் ஆழ்ந்து விடுவார்கள். அப்படி மிறலாடியால் தேர்ந்தெடுக்கப்பட்ட பூசாரி எவ்வளவு பெரிய உத்தியோகம் செய்தாலும் சரி அதை உடனே ராஜினமா செய்துவிட வேண்டும். செய்ய வேண்டுமென்று, தேர்ந்தெடுத்த நபருக்கே தோன்றிவிடுமாம்.

கோத்தர்கள் மிறலாடி மூலம் "பூசாரியைத்" தேர்ந்தெடுத்த பிறகு சரியாக ஒரு மாதம் அவகாசம் கொடுக்கின்றனர். ஏனென்ருல், இவ்வளவு நாட்கள் அவர்கள் குடும்பத்தில் உபயோகப்படுத்திய பொருள்கள், சட்டிப்பானைகள், துணிமணிகள், எல்லாம் தீட்டு என்று கருதிப் புதியனவாக எல்லாச் சாமான்களும் வாங்குகின்றனர். ஆகையால்

பழைய சாமான்களை மற்றவர்கள் வாங்கிக் கொள்ளு கின்றனர். எல்லாப் பொருள்களும் வாங்கிய பிறகு புதிய தாக மாடு பிடித்துப் பால் கறந்து, பூசைசெய்து, புதுப் பானையில் பால் காய்ச்சுகிறார்கள். அன்று முதல் பூசாரியும், அவர் மனைவியும் புலால் உணவு சாப்பிடக் கூடாது. பூசாரியின் மனைவியும் புடைவை கட்டாமல் ஒரு வெள்ளைத் துப்பட்டியைத்தான் கோத்தர் சம்பிரதாயப்படி கட்ட வேண்டும். பூசாரித் தம்பதிகள் ஓராண்டுவரையில் யார் வீட்டிலும் சாப்பிடக் கூடாது. அதற்குப் பிறகு தங்கள் உறவினர் வீட்டில் சைவச் சாப்பாடு சாப்பிடலாம்.

இன்று இருக்கும் பூசாரித் தம்பதிகள் எனக்கு சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னிருந்தே (மாணவர் பருவம் முதல்) நன்றாகத் தெரிந்தவர்கள் என்பதைப் பெருமையுடன் தெரியப்படுத்திக் கொள்ளுகிறேன்.

# 19. இளைஞருக்கு வழிவிடும் தலைவர்கள்

அடர்ந்த காடுகளில் வாழும் ஆதிவாசிகள்—பழங்குடி மக்கள் இடையிலும் ஒருவித ஜனநாயக முறை உள்ளது

தங்களுடைய விவகாரங்களைக் கவனிக்க அவர்கள் மூப்பன் அல்லது தலைவன் என்ற பெயரில் தலைவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர். நிர்வாக சபை போன்ற அமைப்புக்கான உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப் படுகின்றனர்.

ஆதிவாசிகள் பின்பற்றும் தேர்தல் முறையில் உதாசீனத்தை அல்லது கவனக்குறைவை நாம் கொஞ்சமும் காண முடியாது. அவர்கள் நடத்தும் தேர்தல் மிகவும் நேர்மையாக இருக்கும். இது நான் நேரில் காடுகளில் கண்டறிந்த உண்மையாகும்.

## வயதானல்

ஆதிவாசிகளின் அரசியலில் இன்னொரு குறிப்பிடத்தக்க அம்சம் உள்ளது. தலைவனுக்கு மிக வயதாகிவிட்டால் அவன் தலைமைப் பதவியை இளைஞர்களிடம் விட்டுக் கொடுக்கிறுன். இளைஞர்கள் அனுபவம் பெற்று பிற்காலத்தில் முன்னுக்கு வரவேண்டும் என்று அவன் விரும்புவது இதற்குக் காரணம்.

அங்கத்தினர்களும் சரி, வயதாகிவிட்டதும் பதவியிலிருந்து விலகி இளைஞர்களுக்கு வழிவிடுகின்றனர்.

இவ்வாறு இளைஞர்களிடம் பதவிப் பொறுப்பை ஒப்படைத்த பிறகு பதவி விலகியவர்கள் அந்த இளைஞர்களுக்குப் பக்கத்துணையாக நின்று பல யோசனைகளைக் கூறுகின்றனர்.

## அக்கறையில்லை

காடுகளில் உள்ள ஆதிவாசிகள் நகர்ப்புறங்களில் நடக்கும் தேர்தலைப் பற்றி அக்கறை காட்டுகின்றனரா? அடர்ந்த காடுகளில் வாழும் ஆதிவாசிகள் நமது தேர்தலைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. நடுக் காடுகளில் வாழும் ஆதிவாசிகளுக்கு எல்லா இன்பங்களும், தேவைகளும் காட்டிலேயே கிடைப்பதாலும், தவிரவும் அவர்களுக்கு இடையில் "முதலமைச்சர்" "எம்.எல்.ஏ." என்ற மாதிரியில் தலைவனும், உறுப்பினர்களும் இருப்பதாலும் அவர்களுக்கு வெளி உலகைப் பற்றியோ, நமது தேர்தலைப் பற்றியோ அக்கறை இல்லை.

ஆனால் நகரங்களின் அருகிலும் கிராமங்களின் அருகிலும் வாழும் ஆதிவாசிகளும், மலைவாசிகளில் சிலரும்தான் தேர்தலில் பங்கு கொண்டு ஓட்டளிக்கின்றனர்.

## யாருக்கு ஓட்டு?

5 மைல், 10 மைல் என்று பாராமல் யார் தங்களைத் தேடிக்கொண்டு வந்து ஓட்டுக் கேட்கிறார்களோ அவர்களுக்கு ஆதிவாசிகள் கூடுமான வரையில் கஷ்டத்தைப் பார்க்காமல் நடந்து வந்து ஓட்டளித்துச் செல்கின்றனர்.

"ஓட்டுப் போடத் தெரியுமா?" என்று நான் அவர்களைக் கேட்டபோது அவர்கள் என்ன பதில் சொன்னார்கள் தெரியுமா?

"நாங்கள் ஓட்டுச் சாவடிக்குச் சென்ருல் ஒழுங்காக வும், நிதானமாகவும் ஓட்டுப் போடுகிறேம்! ஆனுல் தேர்தல் முடிந்தபின் செல்லாத ஓட்டுக்களை அறிவிக்கும்போது எங்க ளுக்கு ஆச்சரியமாக இருக்கிறது" என்று ஆதிவாசிகளில் சிலர் என்னிடம் கூறினர்.

## அம்பு வில்

ஓட்டுப் போடச் செல்லும் ஆதிவாசிகள் தங்களுடைய சம்பிரதாயப்படி அம்புகளையும் வில்லையும் தோளில் மாட்டிக் கொண்டு செல்கின்றனர். இவற்றை அவர்கள் தங்களுடைய ஆடையின் ஒரு பகுதி போலக் கருதுகின்றனர். எனவே இவற்றை வெளியே வைத்துவிட்டு உள்ளே வர வேண்டும் என்று தேர்தல் அதிகாரிகள் கூறிஞல் ஆதிவாசிகள் எளிதில் அதை ஏற்பதில்லை.

சமீபத்தில் ஆந்திர மாநிலத்தின் பத்திராசலம் தொகு தியில் "பாட்பி" மலைப்பகுதியில் வசிக்கும் மலைவாசிகள் ஓட்டுப் போடுவதற்கு தங்கள் சம்பிரதாயப்படி தோளில் வில்லையும் அம்புகளையும் சுமந்து வந்தனர். தேர்தல் அதிகாரிகள் அவர்களை ஓட்டுச் சாவடிக்குள் அனுமதிக்காமல் அம்பையும் வில்லையும் வெளியில் வைத்துவிட்டு வந்து ஓட்டு போடுமாறு கூறினராம்.

எனினும் முதலில் மறுப்புத் தெரிவித்த மலைவாசிகள் பின்னர் அவற்றை வெளியே வைத்துவிட்டு ஓட்டு போட்டுச் சென்றனர்.

அப்படித் தேர்தல் அதிகாரிகள் செய்திருக்கக்கூடாது. ஏனென்ருல் கிருஸ்தவப் பாதிரிமார்களையும், கன்னியர்களை யும் தங்களுடைய மேல்அங்கியை வெளியில் வைத்துவிட்டு வரும்படி சொல்ல முடியுமா? காரணம் அது அவர் களுடைய சம்பிரதாயம் அல்லவா?

அதைப்போலவே பாதரட்சையோடு வரும் ஆங்கிலோ இந்தியர்களிடம் பாதரட்சையை நீக்கிவிட்டு வாருங்கள் என்று கூறமுடியுமா? அங்ஙனமிருக்க ஆதிவாசிகளிடம் மட்டும், அவ்வாறு கூற என்ன காரணம்? அந்தத் தேர்தல் அதிகாரிக்கு, "மானிட இயல் அறிவு" இல்லாததே காரணமாயிருக்கலாம் போலும்.

நகரங்களில் நடக்கும் தேர்தல்களில் ஆண்கள் பெண்களாகவும், பெண்கள் ஆண்களாகவும் மாறிய விந்தைகளையும் வாக்காளர் பட்டியலில் காணலாம்.

மேலும், பீகார் மின்சாரத்துறை அமைச்சர் ஸ்ரீ கிருஷ்ண சின்ஹாவை இறந்துபோனதாக வாக்காளர் பட்டியலில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. இன்னும் சில இடங்களில் கிராமம் கிராமமாக வாக்காளர் பட்டியலில் மக்கள் பெயரைக் காணேம். ஆனல் சில இடங்களில் வாக்காளர் பட்டியலையே வேதவாக்காக தேர்தல் அதிகாரிகள் கருதுகின்றனர். இது முற்றிலும் வருந்தத்தக்க செய்தியாகும்.

இவைகளுக்கெல்லாம் என்ன காரணம்? என்று ஆராயும் பொழுது சென்சஸ் எடுக்கச் சென்ற நபர்களுக்குக் கொடுக்கப்பட்ட பதிவுப் புத்தகம்தான் காரணம். ஏனென்ருல் அந்தப் பதிவுப் புத்தகம் அச்சடித்திருக்கும் அச்சுகள் மிகவும் சிறிய எழுத்துக்கள். மாலை ஐந்து, ஆறு மணிக்கே கண்ணல் பார்த்து வாசிக்க முடியாத நிலையில் மங்கிய பழுப்புக் காகிதமாக இருக்கின்றன. இந்தக் குறைபாடுகளை எல்லாம், ஏன் அதிகாரிகள் என்று பட்டம் வைத்துக் கொண்டிருப்பவர்கள் நீக்கக்கூடாது!

கடமையில் கவனக்குறைவாகவும் உதாசீனமாகவும் இருப்பதே காரணம் அல்லவா? இவ்விதமான உதாசீனமும், கவனக்குறைவும் ஆதிவாசிகளுக்குள் தேர்ந்தெடுக்கும் தேர்தல் முறையில் கொஞ்சம்கூட நாம் காணமுடியாது.

அவர்களுக்குள் நடத்தும் தேர்தல் மிகவும் நேர்மையாக இருக்கும். அதை நான் நேரில் காடுகளில் கண்டறிந்த உண்மையாகும்.

## மந்திரி ஆக ஆசை

நகரங்களின் அருகில் வாழும் ஆதிவாசிகள் தேர்தலில் நிற்க ஆசைப்படுகின்றனர். ஆனால் அதற்கு தங்களிடம் பணவசதி இல்லை என்று கூறுகின்றனர்.

தேர்தலில் நின்று மந்திரியாக வேண்டுமென்றும் தங்களுக்கு ஆசை இருப்பதாக சில ஆதிவாசிகள் என்னிடம் தெரிவித்தனர்.

ஜனக்கணிதி, வாக்காளர் பட்டியல் ஆகியவற்றைத் தயாரிக்க குடும்பத்தில் உள்ளவர்களின் எண்ணிக்கையை அதிகாரிகள் கேட்டால் ஆதிவாசிகள் உண்மையான தகவல் கொடுப்பதில்லை.

## குலதெய்வம்

''எங்கள் குலதெய்வத்தின் கட்டளைப்படி நாங்கள் குழந்தைகள் எத்தனை என்று எண்ணிப் பார்க்கக்கூடாது. குழந்தைகளின் சரியான எண்ணிக்கையும் நாங்கள் வாழுமிடங்களில் உள்ள ஆண் பெண்களின் கணக்கையும் கொடுத்தால் காட்டு தேவதை எங்கள் எண்ணிக்கையை குறைத்துவிடுவாள். எனவே குறைத்தோ கூட்டியோதான் கூறுவோம்'' என்று அவர்கள் கூறுகின்றனர்.

சில ஆதிவாசிக் குடும்பங்களை அணுகி விவரம் கேட்டால் அவர்கள் ஒன்றும் கூறாமல் காட்டினுள் ஓடி மறைந்துவிடுகின்றனர். தகவல் சேகரிக்க வரும் அதிகாரிகள் சில சமயங்களில் காடுகளிலுள்ள யானை, கரடி முதலிய காட்டு

மிருகங்களுக்குப் பயந்து காடுகளுக்குள் செல்லாமல் ஆதி வாசிகள் வரட்டும் என்று காத்திருந்து கிடைத்த தகவலை பதிவு செய்வதுண்டு.

சில சமயங்களில் ஆதிவாசிகள் சந்தைக்கு வரும் போதும், தேயிலைத் தோட்டங்களுக்கு வேலைக்கு வரும் போதும் அவர்களைக் கேட்டுத் தகவல் பதிவதும் உண்டு.

ஆனால் மேலே கூறியபடி ஆதிவாசிகள் தங்களுடைய தேவதைக்குப் பயந்து உண்மையான தகவலை அளிப்பதில்லை.

சரியான தகவலைப் பெற ஆதிவாசிகளில் விஷய மறிந்த சிலர் ஒரு யோசனை தெரிவித்தனர். 'எங்களில் படித்தவர்களை சந்தித்துத் தகவல் பெறலாம். அல்லது எங்களிடம் தேன், பறவைகள், கோழிகள் வாங்க வரும் வியாபாரிகளின் உதவியை நாடினால் எங்கள் ஆதிவாசி களின் கணக்கு ஓரளவுக்குச் சரியாக இருக்கும்" என்று அவர்கள் கூறினர்.

# 20. மாக்கள் பாதுகாப்பின் அவசியம்

பல்லாண்டுகளுக்கு முன் உலகில் மனிதன் தோன்றினன். அவன் தோன்றுவதற்குப் பல கோடி ஆண்டுகளுக்கு முன்பே மாக்கள் உலகில் தோன்றின என்பது அறிஞர்கள் ஒப்புக்கொள்ளும் உண்மையாகும்.

இன்று உலகிலிருக்கும் விலங்குகளும், தண்ணீரில் வாழும் மீன் வகைகளும், ஆகாயத்தில் பறக்கும் பறவை இனங்களும் பண்டைக் காலத்தின் உருவங்களுக்குக் கொஞ்சம் மாறுபட்ட உருவத்தை உடையவைகள். பண்டைக் காலத்தில் உலகில் வாழ்ந்த விலங்குகள் பல இன்று அடியோடு மடிந்து மறைந்து போயின. அப்படி மறைந்து போகக் காரணம் என்ன?

பண்டைக் காலத்தில் மனிதனிடம் முதன் முதலில் பழகி அன்று முதல் இன்றுவரையில் அவனுக்குத் தொண்டாற்றி வருவது நாய். அதுமட்டுமன்று. அது பண்டைக் காலம் முதல் உருவம் மாருமலிருக்கிறது. அதற்குக் காரணம் மற்ற விலங்குகளாலும், பண்டைக் காலத்தில் வாழ்ந்த மக்களாலும், நாய் இனம் அழிக்கப்படவில்லை. அதை மக்கள் பாதுகாத்து வேட்டையாடுவதற்கும் தங்கள் காவ லுக்கும் வைத்துக் கொண்டார்கள். மக்களின் பாதுகாப்பு நாயிடம் இருந்ததால், அது அன்றுமுதல், இன்று வரையில்

உருவத்திலும், பழக்கவழக்கத்திலும், மாறுமல் வாழ்ந்து வருகின்றது. ஆனல் மற்ற விலங்குகளோ கொஞ்சம் கொஞ்சமாகப் பல வழிகளில் அழிக்கப்பட்டன. சில தாமாகவே அழிந்து போயின. ஏனென்றுல், பண்டைக் காலத்திலிருந்த விலங்குகள் மானிடருடைய தேக பலத்தைக் காட்டிலும் பன்மடங்கு பலமுடையனவாக இருந்தன.

ஆகையால் மக்கள் அந்த விலங்குகளிடமிருந்து சற்று விலகியும், மறைந்தும் வாழத் தொடங்கினர்கள். ஆனல் அவ்விலங்குகள் தமக்குள் ஒன்ருேடு ஒன்று சண்டை போட்டுக்கொண்டபோது மக்கள், அக்காட்சியினைத் தடுக்காமல் அவைகளில் ஒன்று மடிந்ததும், அதைக் கண்டு நடனமாடி மகிழ்ந்தனர். ஏனென்றுல் வேட்டையாடாமல் மூன்று நான்கு நாட்களுக்கு வேண்டிய இறைச்சிகளைத் தீயிலிட்டு வதக்கியும், பாறையில் சூரிய வெப்பத்தால் காய வைத்தும் பயன்படுத்திக் கொண்டார்கள்; பிறகு தங்களுக்கு வேண்டும்பொழுது, உண்டு மகிழ்ந்து, தங்கள் வாழ்க்கையை நடத்தி வந்தார்கள்.

மேலும் தங்களுக்குத் துன்பம் விளைவிக்கும் பெரிய விலங்குகளைக் கூட்டமாகக் கூடிக்கொண்டு அது வரும் வழியில் மலையின்மேல் நின்றுகொண்டு, பெரிய பெரிய பாறைகளை அதன்மேல் உருட்டித் தள்ளியும் கொன்றனர். இவ்வாறு கொடிய விலங்குகள் ஒன்ருேடொன்று போரிட்டு மடிந்தாலும், பண்டைமக்கள் விலங்குகளை அவசியமில்லாத அளவுக்கு வேட்டையாடியதாலும், தரையிலும், தண்ணீரிலும், ஆகாயத்திலும் பண்டைக்காலத்தில் வாழ்ந்த விலங்கினங்களும், பறவையினங்களும், மீன் இனங்களும் பூண்டோடு மறைந்துவிட்டன. ஏனென்றுல் விலங்குகளின் பாதுகாப்பு அவசியத்தை மக்கள் அன்று அறியாமலிருந்தார்கள்.

உலகில் பண்டைக் காலத்தில் வாழ்ந்த விலங்குகளில் சிலவற்றைப்பற்றி நான் கீழே விவரித்துள்ளேன் :

**ஸ்டீகோசுரஸ் :** இந்தப் பழங்கால பயங்கரப் பிராணிகள் இக்கால யுத்த டாங்குகளைப் போன்ற பலமான தோலையே கவசமாகக் கொண்டவை. இவற்றினுடைய முதுகில் எதிரிகளிடமிருந்து தப்பித்துக் கொள்வதற்காகப் பலமான கேடயம் போன்ற உறுப்புகள் உண்டு. இது ஏறத்தாழ 32 அடிகள் நீளமும் 13 அடி அகலமுள்ளதாகவும் இருப்பதால் இதனால் எளிதில் திரும்ப முடியாது. அதனால் பின்புறம் வரும் பகைவர்களைத் தாக்குவதற்காக இதனுடைய வாலிலும் ஈட்டி போன்ற கூர்மையான முட்கள் உண்டு. வட அமெரிக்காவில் உள்ள மேற்கு ஜூராசிக்கில் காணப்பட்ட இப்பயங்கர மிருகம் பார்ப்பதற்குத்தான் பயங்கரமானதே தவிர நடைமுறையில் கோழை உள்ளம் படைத்த பரம சாதுதான்.

**மமூத் :** இது பார்ப்பதற்கு யானையைப் போன்று இருந்தாலும், இக்காலத்து யானையை விட உருவத்திலும் வலிமையிலும் பெரியது. கடுமையான பனி மிகுந்த சைபீரியக் காடுகளில் வாழ்ந்த இதற்குச் சடை நாய்களுக்கு இருப்பது போன்ற அடர்த்தியான உரோமமும், மிக நீளமான வலிமையான வளைந்த நகங்களும் உண்டு. இது சாக பட்சிணியாக இருந்தாலும், இது எதிரிகளைக் கண்டால் அது எவ்வளவுதான் வலிமையுடையதாக இருந்தாலும், தன்னுடைய (தந்தங்கள்) கொம்புகளால் முட்டித் தள்ளி, கால்களால் நசுக்கிக் கொன்று, துதிக்கையால் தூக்கி எறிந்து விடுமாதலால் இதனிடம் எந்த மாமிசபட்சிணியும் வாலாட்டுவதில்லை.

**பிரான்டோசுரஸ் :** இன்றைக்கு சுமார் 15,000 ஆண்டுகளுக்கு முன் வடஅமெரிக்க நீர் நிலைகளின்

ஓரங்களிலே உலவிய நடமாடும் மாமிசமலை போலுள்ள
விலங்குகள் இவைகள். ஒன்றினுடைய எடை 50,000
பவுண்டுகளைவிட அதிகமாக இருக்கும் என்றால்
அதனுடைய உருவத்தை நீங்களே கணக்கிட்டுக்
கொள்ளுங்கள். (இன்றிருக்கும் உருவத்தில் பெரிய ஐந்து
யானைகளை மூட்டையாகக் கட்டினால் எப்படி இருக்குமோ
அப்படி இருக்கும். இத்தனைக்கும் இது மாமிசபட்சிணி
அன்று. தழைகள், கிழங்குகள், தண்டுகள் முதலியவை
களைத் தின்னும் சாகபட்சிணிதான். இதற்கு உடல் மலை
போல் இருந்தாலும், எதிரிகளுக்குப் பயந்து இது எப்
பொழுதும் தண்ணீரிலேயேதான் வாழும். தரையிலும்
வாழும். சுமார் 200 ஆண்டுகள்கூட உயிர்வாழக் கூடியது
இது. சூரிய வெப்பத்திலும், வெளிச்சத்திலும் சிறிது
உலாவுவதற்கும், முட்டையிடுவதற்கும்தான் இது
தண்ணீரைவிட்டுத் தரைக்கு வருமாம்.

**டெரனோடன்:** இது பார்ப்பதற்கு வௌவாலைப்போல்
காணப்படும். இந்த பழங்காலப் பறவைக்கு முன்னங்
கால்களோடு ஒட்டிய பலமான இறக்கைகள் உண்டு.
இதனுடைய எலும்புகள் இலேசாக இருப்பதால் இது
எளிதாகப் பறக்கின்றது. இதனுடைய அலகில் கூர்மையான
ரம்பம் போன்ற பற்கள் உண்டு. அதனுடைய உதவியால்
இது மீன்களையும் கடலிலே உள்ள புழு பூச்சிகளையும்
பிடித்துத் தின்னும். இதனுடைய வால் மிக விநோதமானது.
நுனியில் தட்டையாகவும், வெகு நீளமாகவும் உறுதி
யானதாகவும் திகழும். அந்த வாலைத் தூக்கிக்கொண்டு,
இது பறக்கும் காட்சி காண்பதற்கு மிகவும் வசீகரமாக
இருக்கும். ஆப்பிரிக்காவில் உள்ள டென்டைகார் பகுதியில்
வாழ்ந்த இதன் ஒரு இறக்கையே சுமார் 32 அங்குல நீளம்
இருக்குமென்றால், அதனுடைய உருவத்தை நீங்களே
கணக்கிட்டுக் கொள்ளுங்கள்.

**டைரனேசுரஸ்:** இது வடஅமெரிக்க அடர்ந்த காடுகளில் வாழ்ந்த பழங்காலப் பிராணிகளிலேயே மிகப் பழமையானதும், விநோதமானதும் ஆகும். இதற்குச் சிறிய தலையும், வாத்தின் அலகு போன்ற வாயும் உண்டு. இப்பிராணி, மற்ற பிராணிகளை மிரட்டக்கூடிய பயங்கர மான மிருகம். இதன் கையில் மற்ற பெரிய விலங்குகள் சிக்கிக் கொண்டால், அவற்றை லேசில் விட்டுவிடாது. இதனுடைய உயரம் 20 அடி இருக்கும். இது 50 அடி நீளமுடையதாகும். இதனுடைய வாயில் மாமிசபட்சணி களுக்குரிய கோரமான பற்கள் உண்டு. இதற்குத் தன் னுடைய பலமான உடலை தூக்கக்கூடிய கால்களும், இக் காலத்தில் சில மானிடருக்கு இருப்பதுபோல குட்டையான முன்னங்கைகளும் இருக்கின்றன. இது ஓடிச்சென்று தன் இரையைக் கைபோன்ற முன்னங்கால்களால் பிடித்துக் கொண்டு தின்னும்.

இந்தப் பயங்கர மிருகத்தின் எலும்புக்கூடு ஒன்று தற்போது நியூயார்க்கிலுள்ள இயற்கை வரலாற்றுப் பொருட் காட்சிச் சாலையில் இருக்கிறது.

**டிலோசொசுரஸ்:** இது இராட்சச உருவத்தில் சிறியதாக இருந்தாலும், கடல் மீன்களுக்கு இதுதான் எமன். இதனுடைய நீளம் 28 அங்குலம்தான் என்றாலும் இதனுடைய இரம்பப் பற்களுக்கு எப்பேர்ப்பட்ட பெரிய திமிங்கலமாக இருந்தாலும் அஞ்சி ஓட வேண்டியதுதான். காண்பதற்கு மீன் போன்றும் இல்லாமல் விலங்கு போன்றும் இல்லாமல் இரண்டும் கலந்தாற்போல் இருக்கும். இது இரண்டும்கெட்டான்போல் வாழும். நீர் வாழ்வன எப்படி நிலத்தில் வாழ்வனவாக மாறின என்பதற்குத் தகுந்த எடுத்துக்காட்டாகும். தென்ஆப்பிரிக்க கடற்கரைப் பகுதியில் காணப்பட்ட இந்த விநோதப் பிராணி இப் பொழுது உயிருடன் இல்லை என்றாலும், அதனுடைய

எலும்புக்கூடு அமெரிக்கப் பொருட்காட்சிச் சாலையில் இருக்கிறது. இதைப்போலவே சுமார் 50,000 ஆண்டுகளுக்கு முன் பயங்கரமான விலங்குகள் உலகில் இலெமூரியா கண்டத்தில் வாழ்ந்தன. இந்த விலங்குகளும் அங்கேதான் வாழ்ந்தன. அன்று தரையில் வாழ்ந்த விலங்குகளில், இன்று நாம் காண்பவை இரண்டேதான். ஒன்று யானை, மற்றொன்று காண்டா மிருகம். தண்ணீரில் வாழ்ந்த விலங்கு இனத்தைச் சேர்ந்த திமிங்கலம் ஒன்றுதான் இன்னும் உயிருடன் வாழ்ந்து வருகின்றது. ஆனால் இந்த விலங்குகளைப்போல் ஆயிரமடங்கு உயரமும், பலமும், பருமனும் கொண்டு வாழ்ந்த விலங்குகள் மடிந்து மண்ணாய்ப் போயின.

விலங்குகள் அங்ஙனம் மடியக் காரணம் என்ன? இன்று "வன விலங்குப் பாதுகாப்பு" அலுவலகமிருப்பது போல், அன்று உலகில் எங்குமில்லை. இன்று இருப்பது போன்ற கட்டுப்பாடுகள், அன்று காட்டுக்குள் இல்லை. ஏனென்றால் அன்று உலகம் முழுவதும் வாழ்ந்த மக்கள் மாமிசம் உண்ணும் மக்களாகவே வாழ்ந்தனர். இன்று அனுமதிச் சீட்டு இல்லாமல் காட்டுக்குள் நுழைந்து வேட்டையாடக்கூடாது. மேலும் அப்படி அனுமதிச் சீட்டு இருந்தாலும், இன்ன இன்ன விலங்குகளைத்தான் வேட்டையாட வேண்டும் என்ற நிபந்தனைகளைக் கடைப்பிடித்துத் தான், இன்று காட்டில் வேட்டையாட வேண்டும்.

பண்டைக் காலம் போல் இன்று கண் மூடித்தனமாக வேட்டையாடினால் ரூபாய் 300. 400/ என்று அபராதம் கட்டவேண்டிவரும். ஆனால் பண்டைக் காலத்தில் இவைகள் கிடையா. யாரும் எந்த விலங்கையும், எந்தக் காட்டிலும் சென்று வேட்டையாடலாம்.

வேட்டைக்காரர்களுக்கும், தங்கள் விரோதி விலங்குகளுக்குப் பயந்தும், புல், பூண்டு முதலிய உணவுக்காகவும்,

சில விலங்குகள் ஒரு நாட்டை விட்டே வேறுநாடுகளுக்குள் குடிபுகுந்தன. அப்படி இந்தியாவில் சாத்பூரா மலைப் பதிகுயில் அன்று வாழ்ந்த "கங்காரு" என்ற மிருகங்கள் இன்று இந்தியாவிலிருந்து பூண்டோடு மறைந்து ஆஸ்திரேலியா கண்டத்தில் காணப்படுகின்றன. அந்நாடே அதன் தாயகமாக மாறிவிட்டது. இந்தக் காரணங்களால் "வனவிலங்குப் பாதுகாப்பு" மிகவும் அவசியம் என்பது உண்மையன்றோ. அதற்காக ஓர் அலுவலகமும் அவசியமாயிற்று. இதற்குப் பிறகு வனவிலங்குப் பாதுகாப்புக் கமிட்டியார், சட்டதிட்டங்களையும், ஏற்படுத்தினார்கள். அதன்படி வேட்டையாடும் சிக்காரிகள் வயிற்றில் குட்டிகளிருக்கும் விலங்குகளை வேட்டையாடக் கூடாது—என்றும், கொம்புகள் நீளமாக வளர்ந்த விலங்குகளையும் சிங்கம், யானை முதலியவைகளையும் வேட்டையாட வேண்டுமானால் தனியாக அரசாங்கத்தாரிடம் அனுமதி பெறவேண்டுமென்றும் சட்டம் உண்டாக்கி இருக்கின்றனர்.

ஆனால் இன்று வனவிலங்குப் பாதுகாப்பாளர்கள் உடனடியாகச் செய்யவேண்டியது என்ன? அந்தந்த விலங்களுக்கு வேண்டிய அவசியமான பாதுகாப்பு வசதிகளைக் காடுகளில் செய்யவேண்டும். அப்பொழுதுதான் அவைகளின் எண்ணிக்கையும் அதிகமாகும். வனவிலங்குப் பாதுகாப்பின் அவசியத்தை இனியாகிலும் உணர்ந்து ஆவன செய்ய வேண்டுகின்றேன்.

# 21. காடர்கள் கற்பிக்கும் காட்டுக் கல்வி

'அறியாமையை அனைவரிடமுமிருந்து போக்க வேண்டும், நீக்க வேண்டும்' என்று கற்றவர்களும், கல்லாதவர்களும் விரும்புகின்றனர். ஆனால் கல்வி என்பது எத்தனையோ விதங்களாக மாறுகின்றது. எத்தனையோ வேறுபாடுகளுடன் தோன்றுகின்றது. குழந்தைகளுக்கு முதன் முதலில் ஒவ்வொரு தாயும் ஆசிரியராகவும், குருவாகவும் இருக்கிறாள். விலங்குகளுக்கும், மற்ற எல்லா உயிரினங்களுக்கும் தாய்தான் முதல் ஆசிரியை என்பதை மறைக்கவோ மறுக்கவோ முடியாது. ஆனால், அந்தத் தாய் கற்பிக்கும் கல்வி, இடம், பொருள், ஏவல் என்பதைப்போல் மாறுபடுகின்றது.

நகரங்களில் வாழும் பெற்றோர்களைவிட, காடுகளிலும் மலைகளிலும் வாழும் பெற்றோர்கள் போதிப்பதில் மிகவும் கண்ணும் கருத்துமாக இருக்கின்றனர். ஏனென்றால் கற்பதைக் கசடறக் கற்காவிட்டால், காடுகளில் உயிருக்கே ஆபத்து உண்டாகும்.

நகரங்களில், "ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது" என்பதைப்போல் படித்துப் பட்டங்கள் பல பெற்றாலும், அனுபவமில்லாவிட்டால், அவன் பிழைப்பதற்கே அருகதை அற்றவன் என்பார்கள். படிக்காதவர்கள் சிலரும் மேதை

களாக விளங்குவதை அன்றும் கண்டோம். இன்றும் காண்கின்றோம். காட்டில் வாழும் மக்கள் ஆதிகாலம் முதல் இன்றுவரையில் தங்கள் குழந்தைகளுக்கு என்னென்ன கல்வி கற்றுக் கொடுத்துவிடுகின்றனர் தெரியுமா?

குழந்தைகள் நடக்க ஆரம்பித்ததும், முதலில் நீந்துவதற்குக்கற்றுக் கொடுக்கின்றாள் தாய். குழந்தை கொஞ்சம் வளர்ந்ததும தனித்து வாழ்வதற்கு வேண்டிய குடும்ப வேலைகளையும் சமையல் வேலைகளையும் கற்றுக்கொடுக்கிறாள். பெண் குழந்தை வயதுக்கு வந்ததும், முதலில் மருத்துவம் கற்றுக் கொடுக்கின்றாள். அத்துடன் அவளுக்குப் பயிர்த் தொழில் முதலியவைகளையும் அறுவடைக் காலங்களில் இயற்கையைக் கண்டு பெண்களுடனும் ஆண்களுடனும் தனித் தனியாக நடனமாடும் விதங்களையும் கற்றுக்கொடுக்கின்றாள்.

வயதுக்கு வந்த பெண்ணுக்கும் வாலிபனுக்கும் தங்கள் கற்பை எங்ஙனம் பாதுகாத்துக் கொள்ளல் வேண்டும் என்பதையும், கணவனும் மனைவியும் நடந்து கொள்ள வேண்டிய முறைகளையும் சொல்வதோடு நில்லாமல் மற்ற குடும்பங்களில் உண்டாகும் பல சிக்கல்களைத் தீர்த்து வைக்கப் பஞ்சாயத்துக் கூடிப் பேசும்பொழுது கவனிக்கும்படியும் செய்வார்கள். ஆண்பிள்ளைகளைச் சுமார் பத்துப் பதினைந்து வயது முதற்கொண்டே வேட்டைக்கு அழைத்துச் செல்கின்றார் தந்தை. அப்படி வேட்டைக்கு அழைத்துச் செல்லும்பொழுது பல விலங்குகளின் கால் சுவடுகளை அவர்களுக்கு அனுபவ வாயிலாகக் காட்டுவார். அச்சுவடு வேகமாக எதையோ பார்த்து ஓடிய இந்த விலங்கினுடையது; இது பசியால் அலைந்து பதுங்கிய மிருகத்தின் சுவடு; இது எதன் மேலோ பாய்ந்த பொழுது, தன் காலைத் தரையில் ஊன்றிய சுவடு. இது இந்த மிருகத்தின் குரல் என்பன போன்றவற்றை அவர்களுக்கு ஆண்களும் பெண்களும் சொல்லித் தருவது உண்டு. ஆண்

களுக்குத் தெரியும் பல அனுபவங்கள் சாதாரணமாகப் பெண்களுக்கும் தெரியும். பெண்களுக்குத் தெரியும் எல்லாக் கலைகளும் ஆண்களுக்கும் தெரியும். சில ஆண்கள் மட்டும் மருத்துவமும் கற்று வைத்திருக்கின்றனர் என்பதிலிருந்து அவர்களுடைய அன்றாட வாழ்க்கைக்கு எவ்வளவு உபயோகமானவைகளை அவர்கள் கற்பிக்கின்றனர் என்று நாமே தெரிந்து கொள்ளலாம் அல்லவா?

நம் நாட்டில் தலைமுறை தலைமுறையாகப் பெற்றோர்கள் கற்பித்து வரும் இந்தக் கலைக்கல்வியை இன்று மேலை நாடுகளில் தனிக் கல்லூரிகள் நிறுவிப் பல பட்டங்களைப் பெற்றவர்களைக்கொண்டு போதிக்கின்றனர். அந்த ஏட்டுச் சுரைக்காய் போதனையைவிட நம் நாட்டு காடர்களின் போதனை உயர்ந்ததல்லவா?

## உதவிடும் பழக்கம்

காட்டிலும் மலையிலும் ஒருவருக்கொருவர் மிகவும் உதவி செய்யும் பழக்கமுடையவர்கள். ஆறு மைல், பத்து மைல் தொலைவில் நடக்கும் கிராம சந்தைக்கு வந்தவர்கள், உடம்பு சுகமில்லாமல் சந்தைக்கு வராதவர்களுக்காகச் சந்தையிலிருந்து அவர்கள் சொல்லி அனுப்பும் பொருள்களை வாங்கித் தாங்களே தூக்கிக்கொண்டு செல்வார்கள். மேலும் ஒரு குடும்பம் வியாதியால் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தாலும், அக்குடும்பத்தின் தாய் பிரசவித்திருந்தாலும் அக்குடும்பத்திற்கு வேண்டிய சமையல் விஷயங்களையும், வியாதிக்காரர்களுக்கு வேண்டிய கஞ்சி முதலியவைகளையும், பக்கத்தில் குடியிருக்கும் ஏதாவது ஒரு குடும்பம், எக்குறைவுமின்றி கவனித்துக் கொள்ளும். காடர்களிடம் இன்றும் பண்டமாற்று முறை நடைமுறையிலிருக்கிறது. மேலும் வான நூல் நிபுணர் எடுத்துக் கூறும் பல செய்திகளை இன்றும் காட்டு மக்கள் எடுத்துக் கூறுவதைக் கண்டேன். தங்கள் காட்டைவிட்டு வெளியில்

போகும்போது, மழை எப்பொழுது பெய்யும் என்பதைத் தெரிந்துகொண்டுதான் வெளியில் போவார்கள். மழை இந்த நேரத்தில் பெய்யும் என்று கூறினல், அப்படியே அன்றைக்கு மழை பெய்வது கண்டு ஆச்சரியப்பட்டேன். மேலும், சில சமயங்களில் காட்டில் நான் தங்கியிருந்த பொழுது, இடியும் மின்னலுமாக இருப்பது கண்டு உடனே ஓட்டமும் நடையுமாக எங்கள் குடிசையை நோக்கி ஓடு வோம். அப்பொழுது என் பக்கத்திலிருக்கும் காடர்கள் மோப்பம் பிடித்தும், ஆகாயத்தை பார்த்தும், காற்று வீசும் திசையைக் கண்டும் மழை பெய்யும், பெய்யாது என்று கூறிவிடுகின்றனர்.

சாதாரணமாக ஒருவர் தேன் எடுப்பதற்காக ஒரு மரத்தில் ஏதாவது அடையாளம் செய்துவிட்டுப் போனல், மற்றவர்கள் அந்த மரத்தின் தேனை எடுக்க நினைக்கவும் மாட்டார்கள். தேன் எடுக்க வேண்டியவன் தேன் எடுக்கும் பொழுது, அவனுக்கு வேண்டிய உதவிக்காக இரண்டு மூன்று பேர் கூடப் போவார்கள். அப்படிப் போனவர்கள் எடுக்கும் தேனை நியாயமான முறையில் பங்கிட்டுக் கொள் கின்றனர். மேலும், காட்டில் வேட்டைக்குச் சென்ருலும் இப்படியேதான். வேட்டையாடும் விலங்குகளைப் பங்கிட்டுக் கொள்ளுகின்றனர்.

மேலும், காடர்கள் காட்டில் சில மூங்கில்களை வெட்டிக் கொண்டு வந்தால், அவற்றை தங்களுக்கு என்று வைத்துக் கொள்வதில்லை. கொண்டு வந்த பொருள் யாருடைய குடும்பத்திற்கு மிகவும் அவசியமோ, அவர்களுக்குக் கொடுப்பது உண்டு. மூங்கில் வெட்டுவதற்கென்று காட்டுக்குப்போய் நேரத்தை வீணுக்கமாட்டார்கள். முக்கிய மான வேலைக்காக காட்டு வழியாகப் போகும்பொழுது, வரும்வழியில் இந்த வேலைகளையும் செய்வார்கள். எழுதப படிக்கத் தெரியாத அந்த அப்பாவிகள் தங்கள் விரல்களின் உதவியால், "இன்றைக்கு இத்தனை வேலைகள் செய்தோம்"

என்றும் "நாளைக்கு இத்தனை வேலைகள் செய்து முடிக்க வேண்டும்" என்றும் நிர்ணயம் செய்யும் அழகே அழகு.

## "மிறல்" ஆட்டம்

சாதாரணமாக எல்லா காடர்களும் இயற்கையைத்தான் வழிபடுகின்றனர். ஆனால், குறித்த நாளில் மிகுந்த தெய்வ பக்தியுடன், ஆண்டவனை வழிபடும்போது, அக்கூட்டத்தில் யாராவது 'மிறல்' ஏறி ஆடுவார்கள். அந்தச் சமயத்தில் யார் யார் என்னென்ன கேட்க வேண்டுமோ அவைகளை யெல்லாம் கேட்பார்கள். யார் யாருக்கு தெய்வம் என்ன பரிகாரம் சொன்னதோ அவைகளையெல்லாம் அவர்கள் உடனே செய்துவிடுகின்றனர். அவர்கள் வாழும் ஊருக்குச் செய்ய வேண்டியது பற்றியும் தெய்வம் எடுத்துக் கூறும். அவைகளை எல்லோரும் சேர்ந்து செய்துவிடுவார்கள். காடுகளில் நடந்து போகும் பொழுது எந்தெந்த மூங்கிற் காட்டில் மூங்கிற் குழாயில் அரைப்படி தண்ணீர் இருக்கும் என்பதைத் தங்கள் பிள்ளைகளுக்குச் சிறுவயது முதலே கற்றுக் கொடுக்கின்றனர். மேலும் சிறுவயது முதல் தங்கள் குழந்தைகளுக்குச் சிக்கனத்தைப்பற்றி, எடுத்துக் கூறி, பொருள்களை வீணுக்கக்கூடாது என்ற கட்டுத் திட்டங்களை யும் அவர்களுக்கு அறிவுறுத்துகிருர்கள்.

ஒரு குடும்பத்திற்கு அன்றைக்கோ அல்லது மறு நாளைக்கோ எவ்வளவு ஆகாரப் பொருள்கள் வேண்டுமோ, அந்த அளவுதான், அவர்கள் அன்றைக்கு பறவைகளையோ, மீன் முதலியவைகளையோ பிடிக்கின்றனர். உபயோகப் படுத்துகின்றனர்.

ஓடும் தண்ணீரில் ஏதாவது தின்பண்டங்களைக் கரைப் பார்கள். அந்த வாசனையை உணர்ந்ததும் மீன்களெல் லாம் வெளியில் வந்து, தண்ணீரில் மிதக்கும்படி தூரத் தில் வைத்திருக்கும் கூடையில் சிக்கும். பிறகு கூடையைத்

தண்ணீரிலிருந்து தூக்குவார்கள். மற்ெறாரு முறை குச்சிகளில் ஏதாவது ஆகாரத்தைக் கட்டி, ஓடும் ஆற்றில் வரிசையாக அந்தக் குச்சிகளைக் கரையில் படுக்கவைத்து, கற்களைத் தூக்கிக் குச்சிகளின் மேல் வைத்துவிடுவார்கள். ஏனென்றால் குச்சிகள் தண்ணீரில் அடித்துக்கொண்டு போகக்கூடாது அல்லவா! சிறிது நேரத்திற்கெல்லாம் தண்ணீரிலிருக்கும் நண்டுகள் அந்தக் குச்சிகளில் அகப்பட்டுக்கொண்டிருக்கும். பிறகு குச்சிகளை எடுத்து நண்டுகளை எடுத்துக் கொள்வார்கள். ஆனால், அன்று தங்கள் குடும்பத்திற்கு எவ்வளவு நண்டுகள் வேண்டுமோ அவ்வளவுதான் பிடிப்பார்கள். ஒவ்வொரு காரியத்திலும் பொருள்களை வீணாக்கமாட்டார்கள். மேலும், பாக்கு மட்டையால் விசிறி செய்துகொள்ளுவார்கள். மலஜலம் கழிக்கக் காட்டுக்குப் போய்வரும் பொழுது, குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரையில் அவரவர்களின் வீட்டுக்கு வேண்டிய விறகை எடுத்துக்கொண்டு வருவார்கள்.

மேலும், ஒரே சமயத்தில் நான்கு பறவைகளைப் பிடிக்கும் பறவைக் கூண்டு ஒன்று வைத்திருக்கின்றனர். ஆனால் அந்தக் கூண்டில் பிடிக்கும் பறவையையும் தங்கள் குடும்பத்திற்கு வேண்டிய அளவுதான் பிடிப்பார்கள். மேலும் இமயமலைப் பகுதியில் வாழும் பாங்கினீர் என்ற ஒருவகை மலைவாசிகள் மீன்களைக் கூரான மூங்கில் அம்புகளைக்கொண்டு ஒரே குத்தாகக் குத்தித் தங்களுக்கு வேண்டிய அளவுதான் பிடிக்கின்றனர்.

பண்டைக்காலம் முதற்கொண்டே இவர்கள் சிக்கனமாக வாழ்வதைக் கண்டால் நமக்கு....?

# 22. மரங்களை அழித்த மகான்!

ஒரு சனிக்கிழமை காலையில் சென்னையிலிருந்து என் நண்பன் வீட்டிற்குப் போய் வரலாமென்று புறப்பட்டேன். இரண்டு நாட்கள் திருத்தணியில் தங்குவதற்கு வேண்டிய சாமான்களையும் தயார் செய்து கொண்டு புறப்பட்டேன். வண்டியும் திருத்தணியை வந்து சேர்ந்தது. எனது நண்பரும் எனக்காகக் காத்திருந்தார்.

பிறகு நாங்கள் இருவரும் வீடு போய்ச் சேர்ந்தோம். பகல் சாப்பாடு முடிந்ததும், நானும் ஆனந்தனும் ஊரைச் சுற்றிப் பார்க்கலாமென்று புறப்பட்டோம். திருத்தணியிலிருந்து ஏழு மைல் தூரத்தில் இருக்கும் 'அருங்கொளம்' என்ற இடத்துக்குச் சென்றோம். அந்த அருங்கொளம் என்ற இடத்தில் பல வருஷங்களுக்கு முன் ஒரு பெரிய தோட்டம் இருந்ததாம். பல விதமான மரங்களும் அந்தத் தோட்டத்தில் வளர்ந்திருந்ததாம். கோடைக்காலங்களில் பகல் நேரத்தில், அந்தத் தோப்பில் சிலர் வெயில் தாங்க முடியாமல் படுத்துத் தூங்கினால் போதும், அவ்வளவுதான், படுத்தவர்கள் நான்கு அல்லது ஐந்து நாட்களுக்குப் பின் மரணமடைந்து விடுவார்களாம்.

நாளுக்குநாள் இந்த விஷயம் அந்த ஊர் பூராவும் பரவியது. அந்த ஊர் ஜனங்கள் அந்தத் தோட்டத்தில் முனி, பேய் முதலியவைகள் இருக்கின்றவென்று நினைத்து அந்தத் தெய்வங்களுக்குப் பால், தேங்காய் முதலியவைகளைப் பூசாரியின் மூலம் கொடுத்துப் பூசை செய்து வந்தார்கள்.

சில வாலிபர்கள் 'பேயாவது பிசாசாவது' என்று சொல்லிப் பகல் நேரத்தில் வெயிலின் கொடுமை தாங்காமல் தப்பித் தவறிப் படுத்துக்கொண்டால், படுத்த வாலிபர்கள் மூன்று அல்லது நான்கு நாட்களுக்குள் பரலோகம் போய்ச் சேர்ந்து விடுவார்களாம். இதைப்போலவே குழந்தைகள், வாலிபர்கள் பெரியவர்கள், பெண்டிர், அயலூரார் முதலிய கணக்கில்லா மக்கள் அந்தத் தோட்டத்திற்கு பலியாகியிருக்கிருர்களாம்.

தற்காலமாக இருந்தால் காரணத்தை உடனே கண்டு பிடித்திருப்பார்கள். பழைய காலத்தில் நடந்த சம்பவம் அல்லவா? ஆகையால், அந்த ஊர் மக்களில் சிலர், அந்தத் தோட்டத்தை அழிக்க வேண்டாமென்றும் மரங்களை வெட்ட வேண்டாமென்றும் தீர்மானித்து அந்தத் தோட்டத் திற்கு யாதொரு கெடுதியும் உண்டாகாமல் பாதுகாத்துப் பூசை முதலியவைகள் செய்து வந்தார்களாம். ஆனால் வெகு சிலரே அழித்துவிடவேண்டுமென்று சொல்லிவந்தார்களாம். நாட்கள் செல்லச் செல்ல அந்த தோட்டத்துப் பக்கமே ஒருவரும் போகமாட்டார்களாம்.

பல வருஷங்களுக்குப்பின், பல நாடுகள் சுற்றிப் பிரயாணம் செய்த ஒரு பெரியார், வைத்தியத் துறையிலும் பழக்கமானவர்; அந்த ஊருக்கு வந்தாராம். அவர் அந்தத் தோட்டத்தைப் பற்றிப் பலர் பலவிதமாகச் சொல்வதைச் செவி சாய்த்தார். அவர் பல ஊர்கள் சுற்றி அனுபவசாலி யாக இருந்தபடியால், அந்தத் தோட்டத்தை நன்ருக ஆராய்ந்து முடிவில் அந்தத் தோட்டத்தில் "கடுமையான விஷமுள்ள மரங்கள்" பல இருக்கின்றனவென்றும், ஆகை யால் அந்தத் தோட்டத்தில் யாராவது மூன்று அல்லது நான்கு மணி நேரங்கள் தங்கிலுைம் அவர்களுக்கும் அபாயம் ஏற்படலாம் என்றும், அப்படிப் படுத்தவர்களுடைய உடல் பூராவும் அந்த விஷம் பரவி விடுவதால் அவர்கள் இரண்டு மூன்று நாட்களுக்குள் இறந்துவிடுகிருர்கள் என்றும் சொன்ஞராம்.

இந்த விஷயங்களைக் கேள்விப்பட்டதும் அந்த ஊர் மக்கள் ஒன்ருகக் கூடி, அந்தத் தோட்டத்தை இருந்த இடம் தெரியாமல் வேரோடு அழித்து விட்டார்களாம். அதற்குப் பின் இப்பொழுது அந்த இடத்தில் ஒன்றுமே இல்லையாம். என் நண்பர் இப்படிக் கூறினுர். அன்று மாலை சென்னை வந்து சேர்ந்தேன்.

# 23. இமயவாசிகளின் நம்பிக்கைகள்

இமயமலை அடிவாரப் பகுதிகளில் டாஃப்லாக்கள், பாவிகள், லாக்கர்கள் ஆகிய மலைவாசி மக்கள் வசிக்கிறார்கள். நல்ல உயரமுள்ளவர்களான அவர்கள் தமிழ் நாட்டில் வாழும் குருவிக்காரர்களைப்போல் கழுத்தில் பெரிய பெரிய வளையங்களை அணிந்துகொண்டிருப்பார்கள். ஆண்களுடன் பெண்களும் நீண்ட மூங்கிற்குழாயில் சுங்கான் பிடிப்பது வழக்கம். தடித்த உடையை அணிந்துகொண்டிருக்கும் அவர்களது பிரதான கலைகளில் ஒன்று 'மாந்தரீகம்' ஆகும்.

அவர்களிடையே பல விசித்திரமான மூட நம்பிக்கைகள் உள்ளன. உதாரணமாக, டாஃப்லாக்கள் மலைப்பிராந்தியத்தில் அடர்ந்த புதர்களுள் செல்லும்பொழுது பூமியிலிருந்து ஒரு கருங்கல்லை எடுத்துப் பாதையின் ஓரத்தில் மற்றொரு கருங்கல்லின்மீது வைப்பது வழக்கம். இவ்வாறு ஒவ்வொரு டாஃப்லாவாலும் வைக்கப்பட்ட கற்கள் நாளடைவில் மாபெரும் கற்குவியலாகிப் பாதையின் இரண்டு புறங்களிலும் காணப்படுகின்றன. சில சக்திகளை உண்டாக்குவதற்காகவே இவ்விதம் செய்யப்படுகிறதாம். அதாவது ஒவ்வொருவரும் ஒவ்வொரு கருங்கல்லை எடுத்து வைக்கும்பொழுது ஒரு மந்திரம் சொல்லியே வைப்பார்களாம், மந்திரம் தெரியாதவர்கள் தங்கள் குல தெய்வத்தை நினைத்துக்கொண்டு வைப்பார்களாம்!

"சகுனப் பறவைகள்" என்று டாஃப்லா மக்களால் அழைக்கப்படும் ஒரு வகைப் பறவைகள் இங்கு உண்டு. அவர்கள் வேட்டைக்குப் போகும்பொழுதோ அல்லது முக்கியமான காரியமாகப் போகும்போதோ பாதையில் இடப்பக்கத்திலிருந்து அப்பறவைகள் கூவுமேயானால், நோக்கம் நிறைவேறாது என்று எண்ணி கூட்டமாய் கிராமத்திற்கே திரும்பி விடுவர். பிறகு அக் குறிப்பிட்ட பறவை வலப்பக்கத்தில் என்று கூவுகிறதோ அன்றுதான் கிளம்புவர். அதுவரை அவர்கள் மேற்கொண்ட அந்த முக்கியமான காரியத்தைச் செய்யாமல் காத்திருப்பர். பறவைகளின் ஒலியைத்தான் அவர்கள் மிகவும் நல்ல சகுனம் என்று கருதுகின்றனர்.

டாப்ஃப்லா மக்களில் பெரும்பாலோர் தலைவலி, காய்ச்சல் போன்ற சாதாரண நோய்களை இயற்கையாக மானிடருக்கு உண்டாகுபவை என்று கருதுவதில்லை. அவை உடம்புக்குள் உள்ள விரோதிகள் ஏவிய மந்திரங்களே என்று கருதுகின்றனர். அவற்றை நீக்கிக்கொள்ள டாஃப்லாக்கள் தங்கள் உடம்பின்மேல் பலவித இரும்பு வளையங்களை அவ்வப்போது அணிகின்றனர். மேலும் அவர்கள் தங்கள் உடல்மீது பட்டை பட்டையாய்ப் பலவித வண்ணங்களையும் பூசிக்கொண்டு விரோதிகளைச் சமாளிக்கும் வகையில் ஆவேசமாய்ப் பாடிக் குதித்து ஆடுவர்.

டாஃப்லாப் பெண்கள் கர்ப்பம் தரிப்பதைக்கூட "மந்திரத்தின் மகிமை" என்றே எண்ணுகின்றனர். ஒரு டாஃப்லாப் பெண் கர்ப்பம் தரிக்காமலே இருந்தாலோ அல்லது நாள் தவறி கர்ப்பமானாலோ, அதை அவர்கள் தங்களுடைய விரோதிகள் தங்கள் மனைவிகளுக்கு ஏவிய "கொடிய மந்திரம்" என்று கருதுகின்றனர். தமிழ்நாட்டிலும்கூட நீலகிரி மலைப்பிராந்தியத்தில் வாழும் குரும்பர்களும் படகர்களும் அவ்வாறே கருதுகின்றனர். குறிப்பாக படகர் சமுதாயத்தாருக்கு ஏதாவது வியாதி அல்லது வலிப்பு

வந்தால் அது காட்டில் வாழும் குறும்பர்களின் மந்திர வேலை என்றே நினைப்பர். அதற்காகவே பண்டைக்காலம் முதல் இன்றுவரை நீலகிரியில் சில பகுதிகளில் வாழும் படகர்கள் ஆண்டுதோறும் குரும்பர் குடும்பங்களுக்கு நெல், கிழங்கு, மாடு, ஆடு முதலியவை கொடுத்து அவர்களிடம் சமாதான மாகவே இருக்கும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டுள்ள னர்.

கருவுருத டாஃப்லாப் மங்கையர் கர்ப்பம் தரிக்க சில மந்திரவாதிகளை நாடுவதும் உண்டு. ஆனால் மந்திரம், மாயம் தோற்றுப்போனால் மந்திரவாதிபாடு அதோ கதிதான். அவர்களைத் தங்கள் மலையை விட்டே ஓட்டிவிடுவார்கள்! மழை பெய்வதற்கும், மந்திரம் அவர்களுக்குப் பயன்படும். அதற்குப் பின்தான் தானியங்களை வயலில் விதைப்பர். புயல், காற்று, மழை எல்லாமே மந்திர—மாயத்தால்தான் உண்டாகின்றனவென்று அவர்கள் நம்புகின்றனர். மந்திர வாதிக்கு நல்ல பெயர் கிடைத்துவிட்டால், அவனைப் பல்லக் கில் உட்கார வைத்து மலையைச் சுற்றிக்கொண்டு வருவர்! இல்லையேல் விரட்டி விடுவர்.

அசாமில் "மிஜோ" ஜில்லாவின் தென்கிழக்கு எல்லையில் அமைந்துள்ளதே "பாவி—லாக்கர்" பிராந்தியம். இந்தியா வில் சுயாட்சி உரிமைகொண்ட பகுதிகளில் இது மிக சிறிய தாகும். இப்பிராந்தியத்தில் சுமார் 25 ஆயிரம் மலை மக்கள் வாழ்கின்றனர். இவர்களில் ஒரு பிரிவினர் "பாவி இனம்" என்றும் மற்றொரு பிரிவினர் "லாக்கர்" இனம் என்றும் அழைக்கப்படுகின்றனர். இந்த இரு பிரிவினரும் வெவ்வேறு மொழி பேசுவதோடு மாறுபட்ட கலாச்சாரத்தையும் கொண் டவர்.

"குகி—சின்" இன மக்களின் வழித்தோன்றலே இந்த மக்கள் என்று கூறப்படுகிறது. இவர்களைப் போன்ற இனப் பிரிவினர் பெருமளவில் இப்பிராந்தியத்தை அடுத்து

பர்மாவிலுள்ள "சின்" மலைகளில் வாழ்கின்றனர். இந்திய அரசியல் அமைப்பில் 6—வது பட்டியலின் கீழ் இப்பிராந்தியத்திற்கு சுய ஆட்சி அளிக்கப்பட்டு, 1953—ஆம் ஆண்டு ஏப்ரல் 23—ஆம்தேதி பிராந்திய கவுன்சில் அமைக்கப்பட்டது. இக்கவுன்சில் வரிகளை விதிக்கிறது. சுங்கம் வசூலிக்கிறது. பிராந்தியத்திற்குள்ளாக நடைபெறும் தொழில் வர்த்தகம் ஆகியவற்றின் மீதி கட்டுத்திட்டங்களை விதிக்கிறது. மலைஜாதியினரின் மரபுகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் நீதி பரிபாலனம் செய்கிறது. சட்டம் ஒழுங்கைக் கவனித்து க்ஷேம நல நடவடிக்கைகளையும் மேற்கொள்கிறது. "பாவி, லாக்கர்" பிராந்தியத்தில் நிலவரி கிடையாது என்பது குறிப்பிடத்தக்கது. காரணம், அங்கு வாழும் மக்கள் பயிர் அறுவடை முடிந்ததும், நிலத்தில் தீமூட்டிவிட்டு வேறு நிலத்திற்குச் சென்று பயிரிடுவதேயாகும். எனவே வீட்டு வரிதான், அரசாங்கத்திற்கு பிரதான வருமானத்தை அளிக்கிறது. அதை அதிகரிக்க பிராந்திய கவுன்சில் பல புதிய சட்டங்களை நிறைவேற்றியுள்ளது. ஆட்சிக் கவுன்சிலின் உத்தரவுகளை மீறுவோருக்கு அபராதங்கள் விதிக்க புதிய சட்டம் ஒன்று இயற்றப்பட்டு உள்ளது. அதன்படி அபராதம் விதிக்கப்படுவோர் அவ்வகையில் பன்றியையோ, அதற்கான விலையையோ அபராதத் தொகையாகச் செலுத்தலாம். திருமணத்திற்கு மணமகனிடமிருந்து திருமணப் பதிவு கட்டணமாக ஐந்து ரூபாய் வசூலிக்க மற்ளுெரு சட்டம் போடப்பட்டுள்ளது.

"பாவி—லாக்கர்" பிராந்திய கவுன்சில் நிர்வாகம் ஏற்பட்ட பிறகு அங்கு அடிமைமுறை ஒழிக்கப்பட்டுவிட்டது. ஆனால் அந்த மக்களிடையே மத குருக்களோ, பூசாரிகளோ கிடையாது. திருமண வைபவங்களில் கல்யாண தம்பதியை ஜோடி சேர்த்தவர் கோழி ஒன்றைப் பலி இடுகிறார்.

அதுபோலவே பாவி, லாக்கர் மக்களிடையே மற்றும் பல விசித்திரப் பழக்கவழக்கங்கள் காணப்படுகின்றன. அவர்களுடைய கல்யாண மாப்பிள்ளை வரதட்சிணை பணம் கொடுத்தால்தான் அவனுக்கு மணப்பெண் கிடைக்கும். அதிகப் பணம் கொடுத்தால் உயர்குலத்துப் பெண் கிடைக்கும்.

முதலில் மாப்பிள்ளை வீட்டாரைச் சேர்ந்த ஒருவர் பெண் வீட்டுக்குப்போய் அவர்களது கருத்தறிந்து வருகிறார். பெண் வீட்டார் சம்மதித்த பிறகு மாப்பிள்ளையின் சார்பில் பெண்ணின் பெற்றோருக்கு நீண்ட கத்தி பரிசளிக்கப்படுகிறது. திருமணத்துக்கான நல்ல சகுனத்தை அந்தக் கத்தி காட்டிவிடுமாம். அது பரிசளிக்கப்பட்ட தினத்தன்று இரவில் பெண்ணின் பெற்றோருக்கு நல்ல கனவுகள் ஏற்பட்டால், அவர்கள் திருமணத்திற்கு ஒப்புக்கொள்வர்; கெட்ட கனவு ஏற்பட்டால் மறுத்து விடுவர். நல்ல கனவு காணப்பட்டு சகுனமும் சரியாக அமைந்தால், அடுத்து பண விவகாரம்பற்றிப் பேசப்பட்டு, அதன்பின் திருமணம் நடைபெறும்.

அங்குள்ள மலைஜாதிப் பெண்கள் கற்புநெறி தவறுதவர்கள். "கூடா நட்பு" என்பது அரிது. விபசாரம் என்ற பேச்சே கிடையாது. கலாச்சாரமும் பண்புகளும் முழு அளவில் அவர்களால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இவ்வித வாழ்க்கை முறையைக் கொண்ட அம்மக்கள் தங்களுக்கு அளிக்கப்பட்ட சுயாட்சியைப் பயன்படுத்தி முன்னேற்றப் பாதையில் சென்றுகொண்டிருக்கின்றனர்.

# 24. பண்டை ஆதிவாசிகள் கொலையும் விடுதலையும்

சில ஆண்டுகளுக்கு முன் ஆங்கிலேயர் ஆட்சியில் பெரிய குற்றம் செய்தவர்களையும், அரசாங்கக் குற்றவாளிகளையும் கொலை செய்யாமல், அந்தமான் தீவுக்கு அனுப்பி வந்தார்கள் என்பது நமக்குத் தெரியும்.

மேலும், இன்று கிழக்கு பாகிஸ்தானிய விடுதலை வீரர்கள் தங்களுக்கு விடுதலை வேண்டும் என்று போராடுவதால், அங்கே வாழ்ந்த குடிமக்கள் இந்தியாவிற்கு ஓடிவந்து அடைக்கலம் புகுந்து, வாழ்ந்து வருவதும் நமக்குத் தெரியும். மேலும், கோபத்தால் அடிக்கப்பட்டோ அல்லது விளையாட்டுப் போட்டியிலோ, குத்துச் சண்டையிலோ எதிராளி கொலையுண்டால், கொலைக்குக் காரணமாய் இருந்தவனுக்குத் தூக்குத் தண்டனை இல்லை. ஆனால் சதித்திட்டங்கள் செய்து ஒருவனைக் கொலை செய்தால் கொலை செய்தவனை நீதி மன்றத்தில் விசாரித்து, அவனுக்குத் தூக்குத் தண்டனை கொடுப்பார்கள். ஏனென்றால் சதி செய்து கொலை செய்தால், தீர்ப்பு "கொலைக்குக் கொலை" என்பதாகும்.

ஆனால் இப்பழக்கங்கள், இந்தச் சட்டங்கள் உலகில் எப்பொழுது உண்டாயின? என்று ஆராய்ச்சி செய்யும் பொழுது, இன்று நேற்று மனிதன் நாகரிகம் அடைந்தபின் உண்டானதில்லை. பல்லாண்டுகளுக்கு முன்பே உண்டானதாகும்.

இன்று காட்டில் வாழும் ஆதிவாசிகளிடம் பல்லாண்டு காலமாகவே இந்தப் பழக்கம் நடைமுறையில் இருந்து வருகின்றது என்பதைக் காணும்பொழுது நமக்கு வியப்பு ஏற்படாமலில்லை. இந்தியாவில் பலபகுதிகளில் வாழும் ஆதிவாசிகளிடம் நெருங்கிப் பழகிய நான், ஆங்காங்கே அந்தந்தப் பகுதிகளில் வாழும் ஆதிவாசிகள், குற்றம் செய்தவனைப் பஞ்சாயத்தின் மூலம் விசாரித்து அவனுக்குத் தக்க தண்டனை கொடுப்பதை அறிந்துள்ளேன். பெரிய குற்றமாக இருந்தால், அவனைத் தங்கள் ஊரிலிருந்து மற்றொரு ஊருக்கு அனுப்பி விடுகின்றனர். ஆனால் இந்தப் பழக்கம் எப்பொழுது உண்டானது தெரியுமா?

உலகம் உண்டானது பல கோடி ஆண்டுகளுக்கு முன் என்றாலும், சுமார் 4000 ஆண்டுகளுக்கு முன் (கி.மு. 2000) ஒருவனை ஒருவன் கைப்பிசகாகவாவது அல்லது பகையின் நிமித்தமாவது கொலை செய்தால் கொலைக்குக் கொலை— என்ற முறையில் கொலைப் பாதகனைக் கொலையுண்டவனுடைய உறவினர்கள் கொலை செய்து வந்தார்கள். இஸ்ரவேலர் கானான் தேசத்தை ஜெயித்தபின் அவ்வூரில் புதிய சட்டம் ஒன்று உண்டானது. ஒருவன், ஒருவனைக் கைப்பிசகாகக் கொன்று விட்டால், அவன் தன் ஊர் எல்லையை விட்டு ஓடிப் போய் மற்றொரு ஊரில், ''அடைக்கலம்'' புகுந்து வாழ்வதற்காகப், பண்டைக் காலத்தில் ஆறு பட்டணங்களை உண்டாக்கி வைத்திருந்தனர். அப்பட்டணங்கள், ''யோர்தான் நதி'' க்குக் கிழக்கே மூன்றும், மேற்கே மூன்றுமாக உண்டாக்கப்பட்டு அதற்கு, ''அடைக்கலப் பட்டணம்'' என்று பெயர் வைத்தனர்.

இந்தப் பட்டணங்கள் குற்றம் செய்தவன் ஊரிலிருந்து சுமார் முப்பது மைல்கள் தூரத்திலிருக்கும்படி அமைக்கப் பட்டிருக்கும். மேலும், 4000 ஆண்டுகளுக்கு முன்னமே, அந்த முப்பது மைல் தூரமிருக்கும் ஊர்களுக்குக் குற்றவாளி

யாதொரு தடையுமின்றி, ஆபத்துமின்றி ஓடிப்போகக் கூடியதாக அந்த வழிகளெல்லாம் பழுது பார்த்து வைக்கப் பட்டிருந்தனவாம். கொலையுண்டவனுடைய உறவினர்கள், ஊரை விட்டு ஓடிப்போனவன்மீது, அடைக்கலம் புகுந்த ஊரில் சென்று, குற்றம் கூறினால், குற்றவாளி அடைக்கலம் புகுந்த ஊரிலிருக்கும் மூப்பன், அவன் செய்த—குற்றத்தைப் பற்றி விசாரணை செய்து கொலையாளி, "பகையின் நிமித்தம் சதி செய்துகொன்றான்" என்று அறிந்தால் பழிவாங்குகிறவன் குற்றவாளியைக் கொல்லும்படி தீர்ப்புக் கூறுவான். கொலை செய்தவன் கோபத்தால் கைப்பிசகாய்க் கொன்றான் என்று மூப்பன் கண்டால், கொலையாளிக்கு யாதொரு ஆபத்தும் வராதபடி அவனை, அக்காலத்தில் ஏற்படுத்தப்பட்ட "அடைக்கலப் பட்டணத்தில்" பாதுகாப்புடன் வைத்துப் பார்த்துக் கொள்ளச் செய்வான். ஆனால் எப்பொழுது கொலையாளிக்கு விடுதலை! தெரியுமா?

கொலை செய்தவன் தனக்கு, "அடைக்கலப்பட்டணத் திற்கு ஓடிப்போ!" என்று தீர்ப்புக் கூறிய முதல் மூப்பன் மரணமடைந்தான் என்ற செய்தியைக் கேள்விப்பட்டதும் அன்றே விடுதலை கிடைத்துவிட்டதாகக் கருதித் தன் சொந்த ஊருக்குப் பயமின்றிப் போகலாம். போவான்!!

பண்டைக் காலத்தில் ஆதிவாசிகளிடையே கொலை செய்தவனுக்குத் தண்டனை எத்தனை ஆண்டுகள் நீடிக்கு மென்று சொல்லமுடியாது. ஆனால் இன்று அடர்ந்த காடு களில் வாழும் ஆதிவாசிகள் தம்மில் யாராவது குற்றம் செய்தால், குற்றவாளியை அக்காட்டில் வாழும் தலைவன் அல்லது மூப்பன் விசாரிப்பான். குற்றவாளியிடம் அந்த ஊர் மக்கள் ஒரு வாரம் அல்லது இரண்டு வாரங்கள் பேச மாட்டார்கள். அவனுடைய குடும்பத்தாருக்கு ஒரு பொருளும் கொடுக்கமாட்டார்கள், குற்றவாளி எங்கு சென்றாலும் தனியாகத்தான் போகவேண்டும். தீக்குச்சி இல்லை என்றால், இரவில் இருளில்தான் உட்கார்ந்திருக்க

வேண்டும். மறுநாள் காலையில் சுமார் 4—5 மைல்கள் நடந்து மலையடிவாரத்திற்குச் சென்றுதான் வாங்கிக் கொண்டு போகவேண்டும். இந்தத் தண்டனை என்ன அவ்வளவு கஷ்டமானதா, என்று நகரங்களில் வாழும் மக்கள் நினைக்கலாம். ஆனால் காட்டில் வாழ்ந்து பழக்க முடையவன் நான். ஆகையால் இது எவ்வளவு கஷ்ட மானது, எவ்வளவு வேதனையானது, என்பது எனக்குத் தான் தெரியும். இந்தக் கஷ்டங்களுக்குப் பயந்து குற்ற வாளி தன் குற்றத்தை உணர்ந்து மூப்பன் அல்லது தலைவன் கொடுக்கும் தண்டனையை ஏற்றுக்கொள்ளுவான்.

குற்றவாளிக்கு மூப்பன் கொடுக்கும் தண்டனை என்ன? அவர்கள் வாழும் (ஊரில்) பாடியின் நன்மைக்கும், உப யோகத்திற்கும் உகந்ததாகப் பாடியில் ரோடு வெட்டுதல், பொதுக்கிணறு தோண்டுதல் முதலிய பொதுவேலைகளைக் கொடுத்து இலவசமாகச் செய்யும்படி கட்டளையிடுவான். குற்றவாளி அந்த வேலைகளைச் செய்யச் சம்மதித்தால் பாடியில் உள்ள மக்கள் குற்றவாளியிடம் எப்பொழுதும் போலவே பழகுவார்கள்.

இங்ஙனம் குற்றவாளிகளைத் தண்டிக்கும் முறை சுமார் 4000 ஆண்டுகளுக்கு முன்னமே உலகில் பல பகுதிகளில் இருந்ததாக விவிலிய சரித்திரம் சான்று கூறுகிறது.

# 25. உலகம் வேறு உளரும் உள்ளம் வேறு கூறும்

மைசூரிலிருந்து—உதகைக்குப் போகும் வழியில் 69 வது மைலில் மசினிகுடிக்குத் தனிவழி பிரிகிறது. அவ் வழியில் சுமார் பதினைந்தாவது மைலில் யானைக்காடுகள் இருக்கின்றன. அங்கே யானைகளின் லத்திகளைச் சேகரிப்ப தற்காகக் கசவர்கள் என்ற ஆதிவாசிகள் வாழ்கின்றனர்.

இன்றிருக்கும் புதியவழி ஏற்படுவதற்கு முன், மக்கள் மைசூரில் இருந்தும், கேரளாவிலிருந்தும் இந்த மசினி குடி வழியாகத்தான் உதகைக்கு, வியாபாரத்திற்கு வந் தார்கள். 'மசினி' என்ற தெய்வத்தை அந்த வியாபாரி கள் ஒரு மரத்தடியில் கொண்டுவந்து வைத்து, ஒரு குடியைக் கட்டினார்களாம். (குடிகோவில்) ஆகையால் அவ் விடத்திற்கு "மசினி குடி" என்று பெயர் வைத்தனர். இந்த மசினிகுடி காட்டில் மொத்தம் 423 கசவர்கள் தாம் இருக்கின்றனர். அவர்களின் குடிசைகளில் சில நாட்கள் தங்கினேன்.

"கசவர்" என்ற பெயருக்கு, "உழைப்பாளிகள்" என் பது பொருள் என்று கூறுகின்றனர். இவர்கள் மைசூரிலி ருந்து இங்கு வந்து குடிபுகுந்த காரணம், பண்டைக்காலத் தில் மைசூரில் ஏற்பட்ட பல போர்களே ஆகும். இவர்கள் போருக்குப் பயந்து அங்கிருந்து பல இடங்களில் சிதறுண்டு

போனதாகக் கூறுகின்றனர். இவர்கள் தங்கள் குழந்தைகளைத் தூக்கும் விதத்தைக் கண்டால், "இது என்ன மூட்டை" என்று கேட்கும்படித் தோன்றும். குழந்தையைச் சுருட்டி மூட்டையாகக் கட்டித் தூக்கிக் கொள்கின்றனர்.

மசினிகுடியில் மாதத்தில் ஓர் ஆள் யானையால் பலி ஆகாமல் இல்லை என்பதை அடிக்கடி பத்திரிகையில் வாசிக்கிறோம். சாதாரணமாய் இந்தியாவில் இமயம் முதல் கன்னியாகுமரி வரையில் வாழும் ஆதிவாசிகளும் காட்டு வாசிகளும், மலைவாசிகளும் குறிப்பாக பெண்கள் தங்கள் பற்களைச் சில மருந்துப்பொடிகளை வைத்துக் கறுப்பாக்கிக் கொள்ளும் பழக்கத்தைக் கண்டேன். அதே பழக்கமுடைய இந்தக் கசவப் பெண்களும் அதற்கு ஓர் காரணத்தைக் கூறுகின்றனர்.

"காட்டில் வாழும் பெண்களுடைய பற்களின் அழகைக் கண்டு வனதேவர்கள் வந்து தங்கள் தேவியர்களோ வென்று நினைத்துவிடுவார்களாம். அப்படித் தேவர்கள் நினைத்தால் தங்கள் குடும்பம் அழிந்துபோகும் என நினைக்கின்றனர். ஆகையால் காட்டு மங்கையர்கள் தம் அழகைக் குறைக்க அப்படிச் செய்து கொள்ளுகின்றனராம். மேலும் மற்ற கிராமவாசிகளும் அவர்களைக் கண்டு ஆசைப்படலாம் என்றும், இரவில் சில மிருகங்களுக்குப் பெண்களின் வெள்ளைப்பற்கள் 'பளிச்' சென்று தெரியுமாதலால் அபாயம் ஏற்படாமல் இருக்க என்றும் கூறுகின்றனர். சாதாரணமாய் நகரங்களில் "குடும்பக் கட்டுப்பாடு" என்று ஆயிரமாயிரமாகப் பணச்செலவு செய்கின்றனர். ஆனால் காட்டில் வாழும் மக்களுக்கு மூன்று குழந்தைகளுக்கு மேல் ஒரு குடும்பத்திலும் இல்லை. அதற்கு என்ன காரணம் என்று அடிக்கடி நினைப்பதுண்டு. மேலும் ஒரு குழந்தைக்கும் மற்றொரு குழந்தைக்கும் குறைந்தது மூன்று நான்கு ஆண்டுகள் வயது வித்தியாசம் இருக்கின்றது. ஆனால்

நகரங்களிலோ சில குடும்பங்களில் ஒன்பது மாத வித்தியா சத்தில் கூடக் குழந்தைகள் இருக்கின்றன. மூன்று குழந்தைகளுக்கு மேல் காட்டுவாசிகளிடம் இல்லாமைக்கு என்ன காரணம் தெரியுமா? அவர்களிடமிருக்கும் சில நம்பிக்கைகள்தாம். மலைவாசிகளிடை மூன்று பெண் குழந்தைகளை ஒருத்தி வரிசையாகப் பெற்ருல் நான்கா வதாகப் பிறக்கும் குழந்தை கட்டாயம் ஆணுகத்தான் இருக்க வேண்டுமாம். அல்லது மூன்று ஆண் குழந்தை களைப் பெற்ற ஒருத்திக்கு நான்காவதாகப் பிறக்கும் குழந்தை கட்டாயம் பெண்ணுகத்தான் இருக்க வேண்டு மாம். அப்படித் தொடர்ந்து பெண்ணே அல்லது ஆணே பிறந்துவிட்டால் தங்கள் குடும்பத்தில் முக்கியமானவர் ஒருவர் இறந்துவிடுவார் என்று நம்புகின்றனர். அப்படித் தவறிப் பிறப்பதற்கும் வழி வைத்துக் கொள்ளமாட்டார்கள். அப்படிப் பிறந்தால் உடன் தலைவாசல் நிலைப்படிக்குக் கீழே குழி தோண்டி, அதில் அக்குழந்தையைப் படுக்க வைத்து எடுத்துவிடுகின்றனர். அப்படிச் செய்தால், அது பிறந்ததனுல் உண்டான அபசகுனம் போய்விடுமாம்.

சாதாரணமாய் மலைவாசிகள், காட்டுவாசிகள் எல்லோ ருக்கும் கண்களும் காதுகளும் நன்ருகப் பார்க்கவும், கேட்க வும் ஆற்றல் பெற்றுள்ளன. காடுகளில் சுமார் எழுபது வயதுடைய கிழவனின் காதும் கண்ணும் வேலை செய்வது போல், நகரங்களில் வாழும் இருபது வயது வாலிபனுக்கும் வேலை செய்யாததை அனுபவவாயிலாகக் கண்டேன். இதற்குக் காரணத்தை பல காட்டுவாசிகளிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் "கார்—பஸ், விமானம் முதலியவற்றின் ஓசைகளில் பண்டைக் காலத்தைவிட இன்று எங்கள் காதும் கண்ணும் அதிகமாகப் பாதிக்கப்பட்டு மந்தமாகி விடுகின்றன. எங்களுடைய மூதாதையர்களின் காதுகளும் கண்களும் எங்களுடைய காது கண்களைக் காட்டிலும் நன்ருக இருந்தன" என்று கூறினர்கள்.

இதைப் பற்றி நான் நகரத்திற்கு வந்ததும் பல டாக்டர்களிடம் கேட்டேன். அவர்கள், அமைதியான இடங்களில் வாழும் மக்களுடைய காதும் கண்ணும், என்? மற்ற எல்லா உறுப்புக்களுமே நீண்ட நாட்கள் வரையில் நன்ருக வேலை செய்யும் என்றும், இந்த உண்மையைப் பல மேலை நாட்டு நிபுணர்களும் டாக்டர்களும் ஒப்புக் கொள்கின்றனர் என்றும் கூறிஞர்கள். இந்த கசவர்களிடம் சில மூட நம்பிக்கைகள் தொன்றுதொட்டு இருந்து வருகின்றன. அந்த விதமான மூடநம்பிக்கையால் சில சமயங்களில் குடும்பங்களில் நன்மையும் தீமையும் ஏற்படுவது உண்டு.

"இந்த காட்டில் பெரிய சிலந்திகள் வாழ்கின்றன. ஆனல் அவைகளைக் கொல்வதில்லை. ஏனென்ருல் கொன்ருல் தீமை உண்டாகுமாம். ஆனல் முயலின் பாத அடையாளத்தைக் கண்டால் அது நன்மைக்கு அறிகுறி என்று நினைக்கின்றனர். மேலும் ஆமையைக் கனவில் ஆண்கள் கண்டால் தங்கள் குடும்பத்தை நாடி அதிர்ஷ்டம் வருகிறது என்பதற்கு அது அறிகுறியாம். மற்ருென்று, மனைவி தன்னை விரும்புகிருள் என்று கருதி தங்கள் குடிசையை விட்டு வெளியே போகாமல் அவள் அருகிலேயே இருப்பார்களாம். சாதாரணமாய் எந்தக் காட்டு வாசிகளும் தங்களிடமுள்ள பல ரகசியங்களைப் பிறருக்குக் கூறுவது மிகவும் கடினம். நான் சில ஆண்களிடம் காதல் செய்திகளை கூறுவதோடல்லாமல் அவர்களுடன் நானும் நன்ருகப் பழகிவிட்டதால்தான் பல ரகசியங்களை நான் சேகரிக்க முடிந்தது. நாம் நாவடக்கமுள்ளவர்களைப்போல் அடக்கமாகவும் பேசாமலும் இருந்தால் பல விஷயங்களைச் சேகரிக்க முடியாது. ஆகையால் நான் சிலரிடம் காதல் கதைகளைச் சொன்னல்தான் அவர்களும் பல காதல் விஷயங்களைக் கூறுவார்கள். தங்கள் குடும்பத்தில் யாராவது மலையை கனவில் கண்டால் தம் செல்வம் மலை போல அதிகமாகும் என்று கருதுகின்றனர். மேலும் பிரசவமான அறைக்குள்ளோ, பிரசவமாகும் அறைக்குள்ளோ

நாயோ பூனையோ அனுமதிக்கப்படுவதில்லை. பிள்ளை பெறப் போகும் மங்கையின் முன்னால் பூனை, நாய் என்று கூறுவது கூட இல்லை.

இப்படி பகலெல்லாம் பல குடிசைகளுக்குச் சென்று செய்திகளைச் சேகரித்த பின், மாலை நான் தங்கியிருந்த நண்பரின் குடிசைக்கு வந்தேன். அன்று நடந்தது எங்களுக்கு களைப்பாக இருந்தது. அன்றிரவு நண்பரின் குடிசையில் சாப்பிட்டேன். பிறகு கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்தோம். எங்கே படுப்பது என்ற சிந்தனை என் உள்ளத்தை வருத்தியது. படுப்பதற்கு ஒரு திண்ணை. குடிசைக்குள் இருக்கிற நண்பருக்கும் அவர் மனைவிக்கும் திண்ணையின் மேல்தான் படுக்கை போடப்பட்டது. அவர்களுக்கு குழந்தைகள் கிடையா. ஆனால் மற்ற குடிசைகளில் போய் படுத்துக் கொள்ளலாமென்றாலோ அவைகள் இதற்கு மேல் வசதிக் குறைவுள்ளவை. திண்ணையின் மத்தியில் நண்பரும் இடப்பக்கத்தில் நானும், வலப்பக்கத்தில் நண்பரின் மனைவியும் படுத்துக்கொண்டோம். சிறிது நேரத்திற்கெல்லாம் குழந்தைகள் உள்ளத்துடன் தூங்க ஆரம்பித்துவிட்டார்கள். எனக்குத் தூக்கம் வரவில்லை. காரணம் புதிய இடம் என்பது ஒன்று. மிருகங்களின் கூக்குரல் மற்றொன்று. இந்நிலையில் உட்கார்ந்து ஆண்டவனை நினைத்தேன். என் வாய், ''என் இறைவா! உம்மை நம்புகிறேன் நல்லவர்களுக்குப் பரிசளிப்பவர் நீர் என் இறைவா! உயிருள்ள விசுவாசத்தோடு உம்மை நம்புவதற்கு அருள் புரியும். நானோ பாவி. நான் சாகும் வரையில் குழந்தை உள்ளமாகவே எல்லோரிடமும் வாழ, பழக அருள் புரியும். இச்செல்வமே எனக்குப் போதும். மனம் நொந்து வருந்தும்போது நீர் என்னைக் கைவிடவில்லை. ஆனால் அதைத் தாங்க சக்தி தாரும். எல்லோரும் என் சகோதரி சகோதரர்கள்'' என்று ஆண்டவனை நினைத்துவிட்டுப் படுத்தேன்; பிறகு தூங்கிவிட்டேன்.

எப்பொழுதும் அதிகாலையில் எழுந்திருக்கும் பழக்கமுடையவன் நான். ஆகையால் காலையில் கண்ணைத் திறந்தேன். கசவன் என் படுக்கையில் உட்கார்ந்திருந்தான். நானோ அவன் படுக்கையில் படுத்திருந்ததைக் கண்டேன். உடனே திடுக்கிட்டு எழுந்தேன். அந்த குளிர்ப் பிராந்தியத்திலும் எனக்கு "குபீர்" என்று வேர்த்துவிட்டது.

"ஐயோ!" என்று என் நெஞ்சில் கையை வைத்துக்கொண்டேன். அவன் உடனே வெளியில் போகலாமென்று சைகை காட்டினான். நானும் கசவனும் வெளியில் போனோம். கசவன் கையில் அரிவாள் இருந்தது. அதைக் கண்டதும் என் கை கால்கள் எல்லாம் "டைப்" அடித்தன. வாய் தடுமாறியது.

"ஐயாமாறு ஏன் நடுங்கிறீங்கோ" என்றான். அரிவாளைப் பார்த்துக்கொண்டே, அவன் "நான் எப்படி மத்தியில் வந்தேன்? இப்பொழுது நீர் என்னைத் துண்டு துண்டாகக் கூட வெட்டிப் போடலாம். ஆனால் எனக்கு ஒன்றுமே தெரியாது" என்றேன்.

கசவன் சாதாரணமாய் சிரித்துவிட்டு, "நான் இரவில் இரண்டு மூன்று முறை வெளியில் வந்து கொடிய விலங்குகள் எங்கள் குடிசையை நாடிவராமலும், எங்கள் வெள்ளாமையை நாசம் செய்யாமலும் இருக்கும் பொருட்டு அங்கே கட்டியிருக்கும் தகர டின்னை "டம்—டம்" என்று ஓசை செய்துவிட்டுப் போவேன். அப்படி வெளியில் வந்துவிட்டு உள்ளே போனபோது நீங்கள் புரண்டு படுத்துவிட்டீர்கள். நீங்களோ போட்ட கை போட்ட கால் அப்படியே இருக்க மரம்போல் படுத்திருந்தீர்கள். உங்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை. யார் தூங்குவதையும் நாம் கெடுக்கக்கூடாது. அது பெரிய பாவம், ஆகையால் நான்

உங்களுக்குப் போர்வையை நன்றாகப் போர்த்திவிட்டு, உங்கள் படுக்கையில் படுத்துக்கொண்டேன். அதனால் என்ன குற்றம்! ஏன் இப்படி பயப்படுகிறீர்கள். அது அவளுக்குத் தெரிந்தாலும் ஒன்றும் சொல்லமாட்டாள். எழுந்து என் பக்கத்தில் வந்து படுத்திருப்பாள். அவ்வளவு தான்'' என்று குழந்தை உள்ளத்துடன் பேசிவிட்டான். பிறகு நானும் கசவனும் சிறிது தூரம் நடந்து போகும் பொழுது ''கசவா! பண்டைக்காலத்தில் நீங்கள் மன்னர் பரம்பரையாகவோ அல்லது அரச சபையில் வேலை செய் தவர்களாகவோ இருக்க வேண்டும்; ஏனென்றால் பண்டை யில் மன்னர்களும், பல புலவர்களும் வாழ்ந்த காலத்தில் இப்படியே பல சம்பவங்கள் நடந்திருக்கின்றனவென்று பல தமிழ் நூல்கள் கூறுகின்றன'' என்று பண்டைக்காலத் தில் நடந்த கண்டியூர் சீநக்கரின் குணத்தை எடுத்துக் கூறினேன்.

''கண்டியூர் சீநக்க முதலியார் என்பவர் கி.பி. பன்னி ரண்டாம் நூற்றாண்டில் சோழ நாட்டில் கண்டியூரில் தர்மம் மிக்க செல்வந்தராக வாழ்ந்து வந்தார். இவர் பெரிய கொடை வள்ளல். பல புலவர்களுக்குப் பரிசில் கொடுத்தார். அவர்களுள் முதலியாருக்கு மிகவும் நெருங்கியவராகித் திகழ்ந்தவர், ''பொய்யா மொழிப் புலவர்'' ஆவர். புலவரிடம் முதலியாருக்கு அன்பு அதிகம். உடல் இரண்டு; உயிர் ஒன்று போல் நண்பர்களாக இருந்தனர். இங்ஙனமிருக்க ஒரு நாள் முதலியார் மரணமடைந்தார். அத்துயரத்தைத் தாங்காத மனைவியும் உயிர் துறந்தாள். முதலியார் மறைந்ததையும் அவர் மனைவியார் உயிர் இழந்து அருகில் படுத்திருப்பதை யும் கண்ட ஊர் மக்கள் திரண்டு வந்து கண்ணீர் பெருகிக் கதறினார்கள். சுடுகாட்டில் ஈமத்தை அடுக்கி அதன்மேல் சடலங்களை வைத்தனர்.

முதலியார் பிணத்தையும், அவர் அருகில் மனைவியின் பிணத்தையும் கண்டார், பொய்யாமொழிப் புலவர். தம்

உள்ளத்தில் அடங்கியிருந்த துயர வெள்ளத்தைக் கவியாகப் பாடினுர்.

> "அன்று நீ வானுலகம் ஏகினுய்—மன்றல்
> கமழ் மாறனே! கண்டியூர்ச் சீநக்கா செல்லக் கிட"

என்ருர்.

"சீநக்கரே! அன்று ஒரு நாள் இரவில் நீர் வெளியில் எங்கோ சென்றிருந்தபோது உம்முடைய படுக்கையில் படுத்துத் தூங்கி விட்டேன். உம்மனைவியார் உமக்காக காத்திருந்து பிறகு தூக்கக் கலக்கத்தில் நீரேதான் தனக் குத் தெரியாமல் வந்து படுத்து விட்டீர்" என்று நினைத்து வந்து என் அருகில் படுத்துவிட்டார். நள்ளிரவில் வந்த நீர் அக்காட்சியைக் கண்டீர்! என்னைத் துண்டு துண்டாக வெட்டியிருக்கலாம். ஆனுல் நீரோ யார் மேலும் சந்தேகப் படவில்லை. "கொஞ்சம் தள்ளிப்படுக்கவும்" என்று கூறி என் அருகில் படுத்தீர். அப்பொழுது விழித்த நான் என் மடமைக்கு மனவேதனைகொண்டு மயங்கி விழுந்து "மன்னு!......" என்று நடுங்கினேன். என் வாயை மூடிய வாறே அவளுக்குத் தெரிந்தால் உயிர்விடுவாள் என்று கூறினீர். என் கற்பனைக்கு எட்டாத மனிதத் தன்மை அது. அப்படி அன்பின் உயர்வைக் காட்டிய என்னை இன்று தனியேவிட்டு நீர் மட்டும் மனைவியுடன் வானுலகம் செல் வது நியாயமா? நான் எங்ஙனம் இதனைப் பொறுப்பேன். அன்று நீ கூறிய வார்த்தைகளை நான் இன்று கூறு கிறேன் "சற்றுத் தள்ளிப் படும்! சீநக்கரே! சற்று ஒதுங்கிப் படுத்து எனக்கும் இடம்—இடம்!" என்று கூறிக்கொண்டே மயங்கித் தரையில் விழுந்தார். பொய்யா மொழிப் புலவரின் உடலையும், சீநக்கர் அருகில் வைத்துத் தீ மூட்டினர். மூன்று உடல்கள் எரிந்தன. "அன்று வாழ்ந்த மக்களையும் நீ இன்று வென்றுவிட்டாய். உன்னுடைய உயர்ந்த குணத்தையும் கல்லில் அல்லவா செதுக்கி வைக்க வேண்

டும் கசவா! இதை நான் உலக மக்கள் அறிந்து போற்றச் செய்யும் பொழுதுதான் என் உள்ளம் நிம்மதி அடையும். ஆனால் இக்காட்சியை யாராவது கண்டால் என்ன நினைத்துப் பேசுவார்கள்." உலகம் வேறு பேசும் ஆனால் நம் உள்ளமோ வேறு சொல்லும்" என்று கூறிக் கண் கலக்கத்துடன் விடை பெற்றேன்.

# 26. மலைவாசிகள் கண்ட மாணிக்கம்

ஆதியில் மனிதன் கிழக்குத் திசையில் தோன்றினான். அங்கிருந்துதான் பல பகுதிகளுக்கும் பரவினான். ஆதியில் ஆண்களும், பெண்களும் தலையைச் சொரிவதற்கு முதன் முதலில் கைகளைத்தான் உபயோகப்படுத்தினார்கள். பிறகு பறவைகளின் கால் விரல்களை முட்டிவரையில் வெட்டிப் பறவைகள் தங்கள் நகங்களால் சொரிந்து கொள்வதைப் போல் சொரிந்து கொண்டார்கள்.

அதற்குபின் மீனின் முள்ளைக்கொண்டு சொரிந்து கொண்டார்கள். இதற்கும் பல நூற்றாண்டுகளுக்குப் பின்பு மனிதனின் விலா எலும்பைக்கொண்டு சொரிந்து கொண்டார்கள். பிறகு கவைத்த கொம்புகளால் தங்களுடைய கூந்தலில் 'சிக்' எடுத்துக் கொண்டார்கள். மூங்கிற் கொம்பு களைப் பிளந்து பிளந்து சிக்கெடுத்துக் கொண்டார்கள். பிறகு மூங்கில், கட்டைகளில் வரிசை வரிசையாகப் பிளந்து சீப்புப்போல் செய்து கொண்டார்கள். அந்த நாகரிகமே ஈர்க்கொளியாக இன்றும் இருக்கிறது. எலும்புகளைப் பிளந்தும் சீப்புச் செய்ய ஆரம்பித்தார்கள்.

இது இங்ஙனமிருக்கும்பொழுது ஒரு பக்கத்தில் மக்கள் கூட்டங்களுக்குத் தலைவி உண்டானாள். தலைவியின் கையில் சுமார் 500 பேர் இருந்தார்கள். தலைவி மறைந்து, மூப்பன்

உண்டானான். இன்றும் சில காடுகளில் மூப்பன்மார்கள் உள்ளனர். மூப்பன் மறைந்து தலைவன் உண்டானான். தலைவனுக்கு பெரிய பெரிய காடுகள் சொந்தமாக இருந்தன. அந்தக் காட்டில் கால்நடைகளை மேய்ப்பதற்குப் பல ஆயிரக் கணக்கான ஆட்கள் அந்தத் தலைவனுக்கு கீழ் இருந்தார்கள். பண்டைக் காலத்தில் ஆடு, மாடுகளின் எண்ணிக்கை அதிக மாக இருந்ததால் அவனைத்தான் 'தலைவன்—அரசன்' என்று அன்று கூறிவந்தார்கள். அப்படிக் கூறியவர்களில் ஒருவன் தான் "தண்டகன்".

தண்டகனுடைய புஜத் தோற்றத்தையும், சுமார் பதினைந்தடி உயரத்தையும் கண்டு அவனை 'அரக்கன்' என்று பிற்காலத்தில் கூறினார்கள். பண்டைச் சங்ககால நூல்களில் 'லெமுரியா'வில் பதினைந்து அடி உயரமுள்ள மக்கள் இருந்தார்கள் என்று சரித்திரம் கூறுகின்றது. அப்படியிருந்தவன்தான் 'தண்டகன்.' இவன் பண்டைக் காலத்தில் தென்கோடியில் தோன்றிய மக்களில் ஒருவன். அன்று தென்னாடு பயங்கரமான காடாக இருந்தது. அதனை "தண்டகன்" அரசுபுரிந்து வந்தான். ஒரு பெரிய காட்டை அந்த 'தண்டகன்' ஆண்டதால் 'தண்ட காரணியம்' என்று அதற்குப் பெயர் உண்டாயிற்று.

தண்டகனுக்குப் பிறகு 'குறும்பர்கள்' என்ற ஓர் இன மக்கள் அப்பகுதியிலிருந்த காட்டைச் சீர்திருத்தம் செய்து ஆண்டார்கள். இந்தக் குறும்பர்கள் தண்டகன் மரபைச் சேர்ந்தவர்களே. இந்தக் குறும்பர்கள் கும்பல் கும்பலாகக் கால்நடைகளை வளர்த்துக் கொண்டு மரத்தடியில் வாழ்ந் தார்கள். ஒரு பகுதியில் குறும்பர்களும், மற்றொரு பகுதியில் சேர, சோழ, பாண்டியர்களும் அரசு புரிந்தார்கள். கரிகாலன் வழியில் நெடுமுடிக்கிள்ளிக்கும் நாக நாட்டு மன்னனின் மகள் பீலிவளைக்கும் பிறந்தவன் 'ஆ தொண்டைமான்' அன்றுமுதல் இவன் வழியினருக்குத்

'தொண்டையர்' என்றும், இவராண்ட நாட்டுக்குத் தொண்டைநாடு' என்றும் பெயர் வழங்கலாயின.

ஆ தொண்டைமானுக்குப் பட்டம் கட்டவேண்டிய வயதில் எதிர்ப்பு உண்டானது. மன்னனின் முக வாட்டத்தைக் கண்ட உண்மையுள்ள அன்றைய அமைச்சர், "சோணாட்டின் வடக்கெல்லேக்கு அருகில் உள்ள பெரிய காடு தண்டகாரணியம் எனப்படும். அதை வேடர், குறும்பு என்ற மக்கள் நாடாக்கி, அதில் இருபத்தி நான்கு கோட்டைகளைக் கட்டிக்கொண்டு அரசு செலுத்துகின்றனர். மேலும் அக்குறும்பர்களில் பலர் தங்களைப் பல்லவர்கள், கண்டர்கள், கடம்பர்கள் என்று சொல்லிக்கொண்டு தனித் தனியாக அரசாண்டு வருகிறார்கள். அவர்களை ஜெயிக்க ஆ தொண்டைமானை அனுப்புவதற்கு இதுதான் தக்க சமயம்" என்று கூறினார். அப்படியே போரில் குறும்பர்கள் தோற்றுப் போனார்கள். அந்த நாட்டை ஆ தொண்டைமான் ஆண்டதால் அது 'தொண்டை மண்டலம்', 'தொண்டை நாடு' என்று பெயர் பெற்றது.

ஆ தொண்டைமானிடம் போரில் தோல்வி அடைந்த குறும்பர்கள், பல நூறு மைல் பரப்பில் காடுகளிலும், மலே களிலும், பல ஊர்களிலும் சிதறுண்டு போய், தங்களைப் பல மலே ஜாதி மக்களாக மாற்றிக்கொண்டார்கள். பிற்காலத்தில் தொண்டைமான் பரம்பரையில் குலோத்துங்க சோழன் ஒரு முனிவனுடைய மகளை காட்டில் மணந்தான். அவளுக்குப் பிறந்த மகனுக்குத் 'தொண்டைமான்' என்றே பெயரிட் டான். பட்டத்தரசிக்கும் ஒரு மகன் பிறந்தான். பட்டத்தரசி மகனுக்குத் தென் சோழநாட்டையும், முனிவரின் பேரனை தொண்டைமானுக்குப் பெண்ணையாற்றின் வடக்கிலுள்ள வட சோழ நாட்டையும் பட்டம்சூட்டி அரசாளும்படி ஏற்பாடு செய்தான். (காட்டு) தொண்டைமான் காஞ்சியைத் தலே நகரமாக்கி, அன்றுமுதல் வடகிழக்கிலிருந்த காட்டில் பறைந்து வாழும் குறும்பர்களை அடியோடு துரத்தினன்.

அன்று குறும்பர்களுக்கு உரியதாயிருந்த நாடே 'தொண்டை மண்டலம்', 'தொண்டை நாடு' என்றுனது.

தொண்டைமான் பல காடுகளை வெட்டி சீர்திருத்தம் செய்தான். அங்ஙனம் செய்ததில் மாங்காடு, பூங்காடு, ஆற்காடு, வேப்பங்காடு, காரைக்காடு, வன்னியக்காடு, ஆலங்காடு, ஈக்காடு, ஏற்காடு (சேலம்) முதலியன சில. காட்டைச் சீர்படுத்தியபின் தன் தலைநகரத்திலிருந்து (காஞ்சி) பல வேளாளர் குடும்பங்களை அக்காடுகளில் வேளாண்மையின் பொருட்டு புதியதாகக் குடியேறும்படி கட்டளை இட்டான். அங்ஙனம் சேர்வராயன் மலையிலும், ஏற்காட்டு மலையிலும் குடிபுகுந்தவர்களே இன்று 'தமிழ் மலையாளிகள்' ,என்றும் புதிய ஆதிவாசி இனமக்களாக மாறி வாழ்கிறுர்கள். அப்படி இன்று கணக்குப் பார்த்தால், சுமார் எண்ணூறு மலைகளில் தமிழ் மலையாளிகள் சிதறுண்டு வாழ்கிறுர்கள் என்று அறியலாம். அப்படி வாழ்ந்தாலும் அவர்கள் எல்லோரும் இன்று தங்களைக் "காஞ்சி மண்டலத்தார்கள்" என்றே கூறிக் கொள்ளுகின்றனர்.

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே தொண்டைமான் சேலத்தில் ஆறு மில்லியன் டன்கள் மதிப்புள்ள உலோகங்கள் கிடைக்கும் என்று அறிந்தான் போலும். அதை இன்று நாம் புதியதாகக் கண்டுபிடித்து விட்டோம் என்று பறைசாற்றிக் கொள்கிறேம். அங்ஙனம் சேலத்தில் அன்று கிடைத்த இரும்பின் மகிமையால் பல பழைய பொருள்கள் இன்று நமக்குக் கிடைக்கின்றன. என் சுற்றுப் பிரயாணத்தில் அத்தகைய சில பொருட்கள் சிவகாசியில் என் கையிலும் சிக்கின. கிடைத்த பொருட்களில் ஒன்று பண்டைக் காலத்தில் மங்கையர்கள் சிக்கெடுக்கும் கருவி, அக்கருவி சுமார் ஓரடி நீளமுள்ளது. அதில் மூன்று நீண்ட ஊசிகளைப்போல் இரும்புக் குச்சிகள் இருக்கின்றன. கைப்பிடியின் உள்ளே சிறு சிறு கற்களைப் போட்டிருக்கின்றனர். அந்த இரும்பின் காலம் சுமார்

இரண்டாயிரமாண்டுகள் என்று கணக்கிட்டிருக்கின்றனர். இதைப்போல் இரும்பு ஈர்க்கொளிகள் ஐந்து பற்களிலிருந்து நான்காகி, மூன்ருகி இப்பொழுது ஒரே ஒரு கம்பியாக விளங்குகின்றன. அவற்றைக் கொண்டு இன்று மலைகளிலும், காடுகளிலும், சில கிராமங்களிலும் மக்கள் 'சிக்' எடுத்துக் கொள்கின்றனர்.

மற்ருெரு பொருளும் சிவகாசியில் கிடைத்தது. அதை இன்று சிலர் (Boomerangs) (பூமராங்ஸ்) 'வளைதடி' என்று கூறுகின்றனர். ஆனல் அது 'வளைதடி' அன்று. 'வளைதடி' என்பது ஆஸ்திரேலியாவிலிருக்கும் ஆதிவாசிகள் உபயோகப்படுத்தும் ஒருவிதக் கருவி. அது மரத்தால் உண்டானது என்றும் அல்லது மூங்கிலால் உண்டானது என்றும் எல்லா ஆங்கிலேய அகராதியிலும், என்சைக்லோபிடியாவிலும் குறித்துள்ளனர். ஆனல் எனக்குக் கிடைத்த 'வளைதடி'யோ இரும்பால் உண்டானது. இதனை எறிந்தால் திரும்பி வராது. மேலும் இதின் மற்ருெரு பக்கத்தில் உருண்டை வடிவமாகச் செய்து அதனுள் சிறுசிறு கற்களை போட்டிருக்கின்றனர். அப்படி அதன்மூலம் பறவைகளையோ அல்லது மற்ற பொருளையோ அடித்தால், உருண்டையாக இருக்கும் பகுதியிலிருக்கும் கற்களின் ஓசையால், பறவைகள் ஓடிவிடும் அல்லவா? மேலும் இதனுள் இருக்கும் கற்களைக்கொண்டு காலத்தை நிர்ணயிக்கும்போது இது சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் செய்யப்பட்டது என்று கூறலாம். மேலும் இதைப்பற்றி இன்று காடுகளில் கேட்கும்பொழுதும், ஆராய்ச்சி செய்யும் பொழுதும், பண்டைக்காலத்தில் வட்டமாக நின்று கோலாட்டம் அடிப்பதுபோல் அடித்துக் கூத்தாடும்பொழுது இந்த 'வளைதடி'யை உபயோகப்படுத்தினர்கள் என்று தெரிகிறது. மேலும், குரவை கூத்தாடும்பொழுது இதைத் தாளம் போடவும் உபயோகப்படுத்தினர்கள். இன்றும் சில இடங்களில் இதைப்போலுள்ள கருவிகளைத் தாளம் அடிக்க உபயோகப்படுத்துகிருர்கள்.

மேலும் சுமார் இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்னமே சேலத்திலுள்ள சேர்வராயன் மலையிலும், ஏற்காட்டு மலையிலும் இரும்பும் மற்ற உலோகப் பொருட்களும் கிடைக்கின்றனவென்று தெரிந்த தொண்டைமான், சேலத்திற்கு அனுப்பிய தமிழ் மலையாளிகள் ஏன் இந்த வளைத்தடியைச் செய்திருக்கக் கூடாது என்று எண்ணத் தோன்றுகிறதல்லவா?

## Bibliography Notes

### அடிக் குறிப்புகள்

(1) Tamil Lexicon Vol. VI Page 3556
வளைத்தடி = எறிவாயு தவகை

(2) Ramnad Dist. Manual P. 209

(3) Encyclopaedia Britanica Vol. 4. Page. 236

(4) சத்திய வேத ஆகமம் : பழைய ஏற்பாடு :-
ஆதியாகமம் 11—ம் அதிகாரம் வசனம் ஒன்று.

"உலகத்திலோ வென்றால் ஒரே பாஷையும் ஒரே விதமான பேச்சும் வழங்கி வந்தது.

(2) ஜனங்கள் கீழ்த் திசையிலிருந்து புறப்பட்டபோது சென்னார் நாட்டில் சம பூமியைக்கண்டு அங்கே குடியேறினார்கள்" என்று சுமார் ஐயாயிரமாண்டுகளுக்குமுன் பைபிளில் எழுதி இருக்கிறது.

(5) Webster's International Dictionary — London 1894 Page — 166

Boomarang :— "Weapon used by natives of Australia and in some Parts of India. It is usually a curved stick of Hard Wood.

# 27. காட்டு விலங்குகளின் போதனை முறை!

ஒரு பள்ளியில் ஆசிரியராக வேலைக்குச் செல்பர்வ அதற்குமுன் போதனுமுறைப் பள்ளியில் வாசிக்க வேண்டி யது அவசியமல்லவா? அதைப்போலவே காடுகளில் வாழும் மிருகங்களும், பறவைகளும், ஊர்வன முதலிய எல்லா உயிரினங்களும் தங்கள் தங்கள் குட்டிகளுக்கு முதன்முதலில் சில மாதங்கள் வரையில் பல விஷயங்களைப் போதிக்கின் றன என்பது நீண்டநாள் என் உள்ளத்தில் குடிகொண் டிருந்த ஓர் எண்ணம்.

சில ஆண்டுகளுக்குமுன் ஒரு மேல்நாட்டு சினிமா பார்த்தேன். அதில் ஒரு வெள்ளைக்காரி ஒரு சிங்கக் குட்டியை இளமை முதல் பருவம் அடையும் வரையில் வளர்த்து வருகிறுள். சிங்கம் வாலிபப் பருவம் அடைந் ததும், அதைக் கொண்டுபோய் ஒரு காட்டில் விட்டுவிடு கிறுள். அந்தச் சிங்கக் குட்டிக்கு வேட்டையாடும் விதத் தைப்பற்றி அதன் தாய்ச்சிங்கம் கற்றுக் கொடுக்காததால் அது சாதாரண ஆடுகளையும், காட்டுப்பன்றிகளையும்கூட வேட்டையாடத் தெரியாமல் தன்னைவிடச் சிறிய மிருகங் களிடமிருந்து கொம்புகளால் குத்தும், கடியும் வாங்கு வதைக் கண்டேன். அன்று முதல் என் உள்ளத்தில் "தன் குட்டிகளுக்குத் தாய்ச் சிங்கம் எப்படிப் போதிக்கிறது?

எந்தெந்த வகையில் போதிக்கிறது?'' என்று காணவேண்டும் என்ற அவா உதயமானது. ஆனால் எப்படி அவைகளை நாட்கணக்காகக் காட்டில் உட்கார்ந்து பார்க்க முடியும்? என்றதொரு சிந்தனை உதயமானது. அது என் உயிருக்கும் ஆபத்து. ஆகவே அது நடக்காத காரியம், என்று விட்டுவிட்டேன். சமீபத்தில் ஒரு காட்டில் ஒரு காடரின் குடிசையில் இருந்தபொழுது, என் விருப்பத்தைக் காடர்களிடம் கூறினேன்.

அப்பொழுது, அவர்கள் புலி, சிங்கம், சிறுத்தை, காட்டுப்பூனை முதலியவை பூனை இனத்தைச் சேர்ந்த விலங்குகள். எல்லாம் ஒரே மாதிரியாகத்தான் வேட்டையாடும் விதத்தைத் தம் குட்டிகளுக்குக் கற்றுக் கொடுக்கின்றன. ஆகையால் நீங்கள் காட்டுப்பூனை வேட்டையாடும் விதத்தை கண்டால் போதும். அதற்கு நான் ஏற்பாடு செய்கிறேன்' என்று கூறினர். ஒரு வாரம் கழித்து என்னை மற்றொரு காட்டில் வாழும் மூப்பனுடைய குடிசைக்கு அழைத்துச் சென்றார். அவர் வீட்டில் காட்டுப்பூனை குட்டிபோட்டு சுமார் ஒரு மாதமாகிறது என்றும், அது இன்னும் ஒரு வாரத்தில் தன் குட்டிகளை கொண்டுபோய் வேட்டையாடும் விதத்தைக் கற்றுக் கொடுக்கும் என்றும் கூறி, எனக்கு அதை காண்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொடுத்தார். என்னுடைய நல்ல காலம், அந்தக் காட்டுப்பூனை எங்களைக் கண்டதும் மறுநாளே தன்னுடைய குட்டிகளைத் தூக்கிக்கொண்டு போய், அக்குடிசைக்கு எதிரில் இருந்த ஒரு பாறையில் சுரங்கத்தில் வைத்துவிட்டது. இவைகளை கவனிப்பதற்காக நான் பல நாட்கள் அவர்களது வீட்டில் தங்கினேன். கையில் பைனாக்குலரையும் வைத்துக் கொண்டேன்.

இரண்டு, மூன்று நாட்களுக்குப்பின் தாய்ப்பூனை தன் குட்டிகளைப் பாறை இடுக்கிலிருந்து வெளியில் கொண்டு வருவதையும், பிறகு எதையோ கண்டும், கேட்டும் நடுங்குவதைப் போலவும் செய்வதையும் முதன் முதலில் காட்டியது.

அதற்குப் பிறகு ஒரு வயல் எலியை வேட்டையாடிக் கொண்டு வந்து, குகைக்கு அருகில் வைத்துவிட்டது. பிறகு தன் குட்டிகளை வரிசையாக அழைத்து வந்தது. தாய்ப்பூனை எப்படிப் பதுங்கி ஓர் ஆகாரத்தின்மேல் வாலை ஆட்டிக்கொண்டே பாய்வது என்று காட்டியது. மேலும் பூனை ஆகாரத்தின்மேல் பாயும்பொழுது முன்னங்கால்களையும், பின்னங்கால்களையும் பூமியின்மேல் ஊன்றி ஆகாரத்தின் தூரத்தைக் கணக்குச் செய்து பாயும் வேகத்தையும், பாய்ந்ததும் தன்னுடைய ஒரு கையால் அடிப்பதையும் தன் குட்டிகளுக்குக் கற்றுக் கொடுக்கும் காட்சியைக் கண்டால் ஒரு ஆசிரியர்கூட அவ்வளவு அழகாகக் கற்றுக்கொடுக்கமாட்டார் என்பது திண்ணம்.

தாய் சொல்லிக் கொடுக்கும்பொழுது குட்டிகள் தப்பிதமாய்ப் பாய்வதையும், அந்த ஆகாரத்தைத் தம் காலால் அழுத்துவதையும் கண்ட நான் சற்றுக் கவனித்தேன். ஆனால் தாய்ப் பூனை மறுபடியும் கொஞ்சம் கூட முகத்தைச் சுளிக்காமலும், கோபம் கொள்ளாமலும், மனச் சோர்வு கொள்ளாமலும் கற்றுக் கொடுக்கும் காட்சியைக் கண்டால் நமக்கே சந்தோஷமாய் இருக்கும்.

குட்டிகள் குற்றம் செய்கின்றனவென்று தெரிந்ததும், "மியா-மியா" என்று கத்தியபின் மறுபடியும் பாய்ந்து கற்றுக் கொடுக்கிறது. பிறகு குற்றம் செய்யும் தனிப்பட்ட ஒரு குட்டியை மட்டும், தன்னுடைய "மியா" மொழியில் ஏதோ சொல்லித் தனியாகக் கற்றுக் கொடுக்கிறது. பிறகு சிறிது நேரம் எல்லாக் குட்டிகளுக்கும் பால் கொடுக்கிறது. எப்படிப் பள்ளியில் சிறு பிள்ளைகள் பாடம் படித்தபின், சில தாய்மார்கள் பள்ளியில் காப்பி கொண்டுவந்து கொடுப்பார்களோ அப்படியே தன் குட்டிகளுக்குப் பால் கொடுக்கும். குட்டிகளுக்குப் பால் கொடுத்தபின், தாய்ப்பூனை எப்படிச் சீறுவது? எப்படிக் கடிப்பது? எப்படி அறைவது? முதலியவைகளைக் கற்றுக் கொடுக்கின்றது. அதன்பிறகு குட்டி

களுக்குள் சண்டை மூட்டி விடுகிறது. அப்படிக் குட்டிகள் சண்டை போடும்பொழுது ஒரு குட்டியை மற்ற குட்டிகள் பலமாகத் தாக்கினல் அந்த பயந்த குட்டி தன் தாயிடம் ஓடிவருகின்றது. அந்தச் சமயத்தில் "தனியாகப் பல விரோதிகளிடம் சிக்கிக்கொண்டால், எப்படிச் சமாளிப்பது? எப்படி ஓடுவது? என்பதை எல்லாம் குட்டிகளுக்கும் உடனே தாய் கற்றுக் கொடுப்பதைக் கண்டதும் எனக்கு மிகவும் ஆச்சரியமாய் இருந்தது.

தாய்ப்பூனை தன் குட்டிகளைத் தாக்கும்பொழுது தன் நகம் கீருதபடி, குட்டிகளைப் புரட்டித் தள்ளுவதைக் கண்டால், "ஆண்டவன் படைப்பில் என்னென்ன ஆச்சரி யத்தை வைத்துள்ளார்" என்று நினைக்கவேண்டி வரு கிறது. கடைசியாக ஒவ்வொரு குட்டிக்கும் மரம் ஏறுவ தற்கும், மரத்தில் உட்கார்ந்துள்ள சிறுசிறு பறவைகளைப் பிடிப்பதற்கும் தாய்ப்பூனை செடிகளின் இலைகளுடன் மறைந்து படுப்பதற்கும் கற்றுக் கொடுக்கின்றது. செடி, கொடி, மரங்களில் பூனைகள் பதுங்குவதைக் கண்டால், நமக்கே மிக்க ஆச்சரியமாக இருக்கும். அங்ஙனம் காட்டுப் பூனைக்குட்டி, பந்தலின்மேல் பதுங்கிப் படுத்திருப்பதைக் கண்டதும், "இதுதான் சமயம்; போட்டோ எடுத்துவிடுங் கள். பூனை தன் குட்டிகளுக்குக் கடைசியாகக் கற்றுக் கொடுப்பது, இந்தக் கலைதான். செடிகொடியில் வேட்டை யாடக் கற்றுக் கொடுத்தபின் உடனே தாய்ப்பூனை பிரிந்து ஆண் பூனையுடன் விளையாட ஓடிவிடும்" என்று கூறினர்.

நானும் செடி மறைவில் படுத்திருக்கும் பூனையைப் படம் பிடித்துக்கொண்டேன். பூனை தன் குட்டிகளுக்கு வாழ்க்கையில் வேண்டியதைக் கற்றுக் கொடுத்தபின், தனி யாகக் குட்டிகளைப் போக விட்டுவிடுகின்றது. இவைகளைக் கண்டபின், மிருகங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்யும் ஒரு ஆராய்ச்சியாளரிடம் கூறினேன். அவர் "ஒவ்வொரு மிரு கமும் தன் குட்டிகளுக்கு வாழ்க்கையில் என்ன வேண்டுமோ

அவைகளைக் கற்றுக் கொடுத்துவிடுகின்றன. பறப்பன, ஊர்வன, நடப்பன எல்லாம் தன் குட்டிகளுக்குக் கற்றுக் கொடுத்தபின், அவற்றைத் தனியாக விட்டுவிடுகின்றன" என்று கூறினர்.

காட்டுப்பூனையின் போதன சக்தியை நேரில் கண்ட நான், அன்று முதல் ஒவ்வொரு ஜீவராசியையும் உன்னிப் பாகக் கவனிப்பதுண்டு.

# 28 மனிதப் புலியும், சிக்காரியின் சீற்றமும்

சில நாட்கள் கேரளாவின் வய நாட்டுப் பகுதியில் நான் தங்கினேன். அங்கு நான் தங்கிய இடம் சுல்தான் பத்திரி என்பது ஆகும். அது மைசூரிலிருந்து ஏறத்தாழ தொண்ணூறு கல் தொலைவில் உள்ளது. அங்கு மலைகளும் காடுகளும் நீர் வீழ்ச்சிகளும்தாம் அதிகம். அவற்றின் எழில் மிக்க காட்சிகளைக் கண்டால் நாம் தெய்வ உலகில் இருப்பது போல் தோன்றும். காலை நேரத்தில் கதிரவனின் ஒளிக் கதிர்கள் காடுகளில் நுழைந்து வருவது காண்பதற்கு மிக அழகாகத் தோன்றும்.

ஒரு பக்கத்தில் வயல்களும், மறு பக்கத்தில் மலைப்பகுதிகளும் வேறொரு பக்கத்தில் காடுகளும் சூழ இவற்றிற்கு இடையில் என் நண்பர் தம் இல்லத்தைக் கட்டியிருந்தார். அவர் இல்லத்தில் நான் சில நாட்கள் தங்கியிருந்தேன். நண்பருடைய இல்லம் மிகப் பெரியதாக இருந்தது. வீட்டின் சுவர் முழுவதிலும் காட்டெருமைகளின் கொம்புகளும், புலியின் தலைகளும் தொங்கவிடப்பட்டிருந்தன. நாற்காலிகளிலும் தரையிலும் மான் தோல்களையும் புலித் தோல்களையும், சிறுத்தைத் தோல்களையும் பரப்பியிருந்தார்.

நண்பர் இராசுவுக்குப் பாசுகரன், தினகரன் என்னும் இரண்டு பிள்ளைகள் இருந்தனர். இருவரும், தம் தந்தை

யாரை விடவும், பாட்டனுரைவிடவும் வேட்டையில் மிகவும் கெட்டிக்காரர்கள். வாழையடி வாழையாக வேட்டையாடுவ தால் இவர்கள் துப்பாக்கிகளை வைப்பதற்கே ஒரு தனி அறை உண்டு. இவர்களுக்கு ஏராளமான வயல்களும் ஆடு, மாடு களும் இருப்பதால் வேலையாட்களும் ஏராளமாக இருக் கின்றனர்.

நண்பர் இராசு, தம் வீட்டில் நடந்த ஒரு துயரமிக்க செய்தியைச் சொல்லத் தொடங்கினர். அதைச் சொல்லத் தொடங்கும்போதே அவர் கண்கள் கலங்கின.

"கடந்த ஒரு கிழமையாக ஒரு புலியின் கொடுமையைத் தாங்க முடியவில்லை. அது மாடுகளையும், மாந்தர்களையும் அடித்துக் கொல்கின்றது" என்று பலர்வந்து கூறினர்கள். இதைக் கேள்விப்பட்டதும் சுற்றுப் பக்கங்களில் இருக்கும் வேட்டைக்காரர் பலர் அப்புலியை வேட்டையாடச் சென்றார் கள். அதை ஒருவராலும் சுட முடியவல்லை. இச்செய்தி கடைசியில் எங்கள் காதுகளுக்கும் எட்டியது.

"முதல் நாள் அப்புலியை வேட்டையாடுகிறேன்" என்று பாசுகரன் சென்றான். காட்டில் தனிமையில் அலைந்த பின் கடைசியில் புலியின் பாதச் சுவடு புதியதாகப் பதிந் திருப்பதைக் கண்டான். அந்த அடையாளத்தைப் பார்த் துக்கொண்டே சென்றான். அப்படிப் போகும்போது அப்புலியும் பாசுகரனின் பாதச் சுவட்டை மோப்பம் பிடித்துக் கொண்டே அவனுக்குப் பின்னல் சென்றது. அதை அறிந்து கொண்ட பாசுகரன் தான் செல்லும் வழியை மாற்றினன். அவன் ஊருக்குள் வீட்டை நாடிச் செல்கிறன் என்பதை அறிந்துகொண்ட புலி காட்டில் மறைந்துவிட்டது.

வீட்டிற்கு வந்த பாசுகரன், "மனிதனைத் தின்னும் புலியாக அது மாறிவிட்டது. ஆகையால் நாம் எச்சரிக்கை யாகத்தான் போக வேண்டும். எப்பொழுது புலி ஒரு மனித

னுடைய பாதச் சுவட்டை மோப்பம் பிடிக்கத் தொடங்கி விட்டதோ, அது மனிதனுடைய சுவையைக் கண்ட புலியாகத்தான் இருக்கும்'' என்று தன் தம்பி தினகரனிடம் கூறினன்.

''மனிதனைத் தின்னும் புலியை வேட்டையாடுவது என்ன அவ்வளவு பெரிய தொல்லையா?'' என்று நான் குறுக்கே ஒரு கேள்வியைக் கேட்டேன்.

''அதற்கு அவர் நல்ல கேள்வி கேட்டீர்கள். மனிதனைக் கொல்லும் புலி, மனிதனைவிட புத்திசாலித்தனமாக வேட்டையாடும்'' என்று மேலும் கூறினர்.

சில ஆண்டுகளுக்கு முன் ஒருவர் தன் மனைவியுடன் என் இல்லத்திற்கு வந்திருந்தார். ''இரவு நேரங்களில் வெளியில் செல்ல வேண்டாம். மலம், சிறுநீர் கழிப்பதாக இருந்தாலும் அறையின் உள்ளேயே இடவாய்ப்பு உள்ளது'' என்று கூறியிருந்தோம்.

அன்றுதான் அவர்கள் புதிதாக வந்திருக்கிறுர்கள் என்பதைப் புலி அறிந்துகொண்டது. அன்றிரவு அது வீட்டுத் திண்ணையின் அடியில் மறைந்து படுத்துக் கொண்டிருந்தது. புதியதாக வந்த இடத்தில் அறையினுள்ளே சிறுநீர் கழிக்க வேண்டாம் என்று அந்த அம்மாள் ஏறத்தாழ இரவு எட்டு மணிக்கு வெளியில் சென்றுர்கள்.

சென்றவர்களை ஒரு கூக்குரல்கூடப் போடாதவாறு அந்தப் புலி குரல்வளையைப் பிடித்துத் தூக்கிக்கொண்டு போய்விட்டது. உடனே நாங்கள் தீப்பந்தங்களுடன் சென்றோம். துணியாகிலும் புடவையாகிலும் புதரில் இருக்குமென்று எண்ணினேம். ஒன்றும் காணப்படவில்லை. புதர்களைத் தாண்டித் தாண்டியே தூக்கிச் சென்றிருக்கிறது.

இந்த நிகழ்ச்சிக்கு சில ஆண்டுகளுக்குப்பின் ஏதோ ஓர் ஊரிலிருந்து சுற்றுலாப் பயணத்தில் முப்பதுபேர் வந்திருந்தார்கள். அவர்களிடம் இந்நிகழ்ச்சியைக் கூறி மிகவும் எச்சரிக்கையாக இரவில் படுத்துக்கொள்ளும்படிக் கூறினேம்.

மாலை ஆறுமணிக்கே கதவை அடைத்து விட்டார்கள். இந்த மலைப்பகுதியில் கதவுகளுக்குத் தாழ்ப்பாள் கிடையாது. கதவைச் சாத்திவிட்டு, அதன் பின் குறுக்கே உலக்கையைப் போல் நீண்ட கட்டையைப் பக்கச் சுவர்களில் இரு முனைகளையும் பொருத்துமாறு செருகி விடுவார்கள். வெளியிலிருந்து கதவைத் தள்ளித் திறக்க முடியாது.

இதை எப்படியோ கவனித்துவிட்டது, அன்று அங்கு வந்த புலி. கதவை அடைத்துக் கொண்டு உள்ளே நன்ருக உறங்கிவிட்டார்கள் அந்தச் சுற்றுலாப் பயணிகள். ஆனல் அந்தப் புலி என்ன செய்தது, தெரியுமா?

உள்ளே கதவுக்குப் பொருந்திய கட்டைக்கு எதிரில் வெளிப்பக்கத்தில் சுவரைச் சுரண்டிச்சுரண்டித் தொளை செய்தது. தொளையிட்ட பின் கதவுக்குப் போட்டிருக்கும் கட்டை அதனுடைய காலில் பட்டது. உடனே அதை மெதுவாக மறுபக்கம் தள்ளியது. அப்படித் தள்ளியதும் கட்டை கீழே விழுந்துவிட்டது. கட்டை விழுந்ததும் கதவு இயல்பாகத் திறந்து கொண்டது. கதவு திறந்து கொண்டதும் மனிதரைத் தின்னும் புலி உள்ளே சென்று எதிரில் படுத்திருந்த ஓர் ஆளைத் தூக்கிக்கொண்டு போய்விட்டது.

இந் நிகழ்ச்சி மறுநாள் காலையில்தான் மற்றவர்களுக்குத் தெரிந்தது. கடைசியில் அந்த ஆளின் உடையையும், போர்வையையும் குருதியுடன் அருகில் இருந்த புதிரில் கண்டார்கள்.

மனிதனைத் தின்னும் புலி மனிதனைப் பார்த்துவிட்டால், அவன் பின்னாலேயே ஆறு கற்களுக்குக்கூட அவனுக்குத் தெரியாமல் தொடர்ந்து சென்று மனிதனைத் தின்னும். இத்தகைய புலியை வேட்டையாடப் பாசுகரனால் முடியவில்லை என்று எண்ணி தம்பி தினகரனும் அவனுடன் செல்ல விரும்பினான்.

மறுநாள் உடன்பிறந்தோர் இருவரும் வேட்டைக்குச் செல்வதைக் கண்டேன். பிள்ளைகள் வேட்டைக்குப் போகும் பொழுது தடை செய்யக்கூடாது என்று நினைத்து, ''காட்டில் இருவரும் பிரிந்து வேட்டையாட வேண்டாம். மேலும் இன்று அமாவாசை நாள். ஆகையால் மிகவும் அஞ்சத்தக்க வகையில் காட்டில் இருள் சூழ்ந்து விடுமே'' என்று தடை செய்வதைப் போல் கூறினேன். ''நாங்கள் கவனமாய்த்தான் வேட்டையாடுவோம்'' என்று கூறி இருவரும் என்னிடம் விடை பெற்றுக்கொண்டு மனிதனைக் கொல்லும் புலியை வேட்டையாடப் புறப்பட்டு விட்டார்கள். காட்டுக்குள் சிறிது தொலைவு சென்றதும் ''நான் இந்தப் பக்கம் போகிறேன்'' என்று கூறினான் தினகரன். ''தம்பி! வேண்டாம். சூரியன் மறையும் நேரம். நம்மை நாமே சுட்டுக் கொள்வோம். நம்முடைய கொள்ளுத் தாத்தாவும் இப்படித் தான் காட்டில் தம் தம்பியைச் சுட்டுவிட்டாராம். நாம் புறப்படும் பொழுதும்கூட அப்பா இதைச் சொல்லி அனுப்பினார்கள் அல்லவா? என் உள்ளத்தில் ஏதோ ஒன்று தடை செய்கின்றது? வேண்டாம் என்று கேட்டுக் கொண்டான் பாசுகரன்.

''என்ன அண்ணா! நாம் கல்லூரியில் மெய்யறிவியல் பயிலவில்லையா. இந்த இருபதாம் நூற்றாண்டிலும் இவற்றையெல்லாம் நம்பிக் கொண்டிருந்தால் எப்பொழுதுதான் நம் நாடு முன்னேற்றம் அடையும்?'' என்று மெய்யறிவியல் பேசத் தொடங்கிவிட்டான் தினகரன். பின்பு இருவரும் காட்டில் பிரிந்துபோய் புலியைத் தேடத் தொடங்கினர்.

பாசுகரனும் தினகரனும் வேட்டையில் நல்ல பெயர் வாங்கியவர்கள். இந்த உடன்பிறப்பாளர்கள், அரசர் பலரிடமும் குறுநிலக்கிழார்களிடமும், அரசினரிடமும் பல பரிசுகளும் வேட்டைக்கான பதக்கங்களும் வாங்கியிருக்கின்றார்கள். இவ்வளவு வல்லமையுடைவர்கள் அந்த புலிவேட்டைக்குப் போவதையறிந்து எல்லோரும் மகிழ்வடைந்தனர். மறுநாள் காலையில் புலியுடன் வருவார்கள் என்று எல்லோரும் எண்ணிக் கொண்டிருந்தனர்.

காட்டில் நீண்ட நேரம் காத்திருந்தும் புலி வரவேயில்லை. தினகரன் ஒரு மரத்தின் மீதும், பாசுகரன் ஒரு மரத்தின் மீதும் ஏறி உட்கார்ந்து கொண்டனர். தம்பி தினகரன் உட்கார்ந்திருந்த மரத்தின் அருகிலிருக்கும் புதரில் புலி நகரும் ஓசை கேட்டது. "மாந்தப் புலிகளிலேயே இது மிகவும் கள்ளத்தனமானது' என்று தினகரன் தீர்மானித்தான். ஏனெனில் மங்கிய ஒளியில் தன்னுடைய கண்களைப் பளிச்சென்று காட்டாமல் குனிந்துகொண்டே சென்றது அது.

அந்தப் புலியின் தந்திரத்தைக் கண்டதும் தினகரன் தான் அமர்ந்திருந்த மரத்தின் பட்டைகளைத் தன் விரலால் மெதுவாகச் சுரண்டினான். இந்த சுரண்டல் ஒலியைக் கேட்டதும், புதரில் நகரும் புலி நின்றது. தினகரன் இரண்டு மூன்றுமுறை இப்படிச் செய்தான். புலியும் புதரில் இரண்டு மூன்று முறையும் நின்றது.

தினகரன், "சரி, இது புலியேதான். வேறு வகைக் காட்டு விலங்கு அன்று என்று தீர்மானித்துக் தன் துப்பாக்கியை எடுத்தான். 'டுமீல்' என்று சுட்டான். உடனே புதரிலிருந்து 'ஐயோ' என்று மனிதனுடைய ஓலம் கேட்டது. அஃது அண்ணன் பாசுகரனின் குரல்! ஓடிச்சென்று "ஐயோ அண்ணா!" என்று கதறினான் தினகரன்.

இருள் சூழ்ந்த காட்டின் தன்னந் தனிமையில் தினகரனின் மடியில் பாசுகரனுடைய அழகிய உடல் கிடந்தது. எங்கும் குருதி வெள்ளம். காடே துயர் மிகுந்து ஓலமிடுவதைப்போல் இருந்தது அக்காட்சி.

"அண்ணா! அண்ணா!" என்று கதறினான் தினகரன். பாசுகரன் உயிருக்காகப் போராடிக் கொண்டிருந்தான். தன் கண்களைத் திறந்தான்.

"தம்பி! எனக்கு முன்னால் புலி போனது. ஆனால் அது என்னை உன் மரத்தடிக்கு அழைத்து வந்தது. நீ இருக்கும் மரத்திற்கு முன்னால் புலி வளைந்து வளைந்து தன் பின்னிரண்டுக் கால்களைத் தரையில் ஊன்றி நிற்பதைப் போல் காட்டியது. அடர்ந்த இருளில் அக்காட்சியைக் கண்டு இது நீயாக இருந்தால் என்ன செய்வது என்ற எண்ணத்தில் இருந்தேன். நீயும் இந்தப் புலியைத்தான் தேடுகின்றாயோ என்று எண்ணினேன். புலி வேண்டு மென்றே உன்னுடைய மரத்தடிக்குக் கொண்டுவந்தது போலும்! நீ என்னைச் சுட வேண்டும் என்று அது செய்த சூழ்ச்சியே இது. அதோ அதனுடைய பாதம் நே....ரம்—ரம் கடத்தா....!" இதை முடிப்பதற்குள் அவன் தலை தரையில் சாய்ந்தது. உயிர் உடலை விட்டுப் பிரிந்தது.

அண்ணா என்று அவன் உடலை அணைத்துக்கொண்டான் தினகரன். அவன் பக்கத்தில் இருந்த புதரில் 'சலசல'வென்று ஓசைகேட்டுத் திரும்பினான். புலி அரச நடை போட்டுக்கொண்டு வந்து தினகரன்மேல் பாயத் தொடங்கியது. தினகரன் துயரத்தில் மூழ்கியிருந்தாலும் அவன் நல்ல வேட்டைக்காரன் அல்லவா?

கடுஞ்சினம் கொண்ட கண்ணகியைப்போல் எழுந்தான். தரையில் கிடந்த துப்பாக்கியை எடுத்தான். இருளில் புலியின் கண்கள் தீப்பந்தம்போல் இருந்ததைக் கண்டு

'டுமீல்' என்று சுட்டான். குண்டால் அடிபட்ட புலியும் தினகரன்மேல் கொடுஞ்சீற்றத்துடன் பாய்ந்தது. அவனுக்குப் பல காயங்கள் ஏற்பட்டன. இருந்தும் இறுதியில் புலி தரையில் சாய்ந்தது. ஒரு பக்கம் புலி; மறுபக்கம் அண்ணனின் உடல்; இன்னொரு பக்கம் மயக்கத்தில் புலம்பிக் கொண்டிருந்த தினகரன்!

இயல்பாகக் காட்டில் வாழும் காடர்கள், காட்டில் அடுத்தடுத்து இரண்டு துப்பாக்கிக் குண்டுகளின் ஓசை கேட்டால் உடனே ஐயப்படும் குணமுடையவர்கள். இவ்வகை ஐயப்பாடுகள் இன்றும் காடுகளில் உண்டு. அதைப்போல இரண்டு துப்பாக்கிக் குண்டுகளின் ஒலி கேட்டதும் ஐயப்பாட்டுடன் அக்காட்டில் வாழ்ந்த குறும்பர்கள் தீப்பந்தங்களுடன் ஒலி வந்த திசையை நாடி ஓடி வந்தார்கள். காட்டில் நடந்த கொடூர நிகழ்ச்சியை ஒருவாறு அறிந்து கொண்டார்கள்.

பலரைக் கொன்று தின்ற புலி கொல்லப்பட்டதே என்று நினைத்து மகிழ்வதா? அல்லது நல்ல ஒரு வேட்டைக்காரனை இழந்து விட்டோமே என்று நினைத்துப் புலம்புவதா? என்ற நிலையில் புலியையும், உடன் பிறப்பாளர் இருவரையும் தூக்கிக்கொண்டு அவர்கள் வந்தார்கள்.

"தினகரன் புலியைக் கொன்றுவிட்ட போதிலும், புலியால் அவனுக்கு ஏற்பட்ட பல புண்களால் அவனும் மருத்துவமனையில் இறந்து போனான். இச்செய்தி காட்டுத் தீயைப் போல வயநாடு முழுமையும் பரவியது. வயநாடு நல்ல வேட்டைக்காரர்களை இழந்துவிட்டது" என்று தம்முடைய இரண்டு பிள்ளைகளின் துயரஞ்சான்ற வரலாற்றைக் கூறி முடித்தார் பெரியவர்.

அதுவரையில் நிகழ்ச்சிகளைக் கேட்பதிலேயே ஆழ்ந்திருந்த நான் பெருமூச்சு ஒன்றை விட்டேன். பெரியவரிடம் பிரியா விடை பெற்று வந்தேன்.

# 29. கரடியும் கரையான் புற்றும்

சில மாதங்களுக்குமுன் உதகையிலிருந்து—மைசூர் போகும் மார்க்கத்தில் கூடலூரில் சில நாட்கள் தங்கினேன். கூடலூரில் நீலகிரியில் வாழும் கோத்தர்களில் சிலர் வாழ்கின்றனர். இதற்குக் "கூடலூர்—அக்கால்" என்று பெயர். இங்கிருந்து பஸ்ஸில் நெலாக்கோட்டைக்குப் போகலாம்.

நெலாக்கோட்டைக்கு பழைய பெயர் "கொம்புத் தூக்கி" என்பது. இதற்கு ஏன் கொம்புத் தூக்கி என்று பெயர் வந்தது? பண்டைக் காலத்தில் சில மிராசுதார்கள் இங்கு வாழ்ந்தார்கள் என்றும், அவர்களிடம் பணியாட்க ளாக வேலை செய்த ஆதிவாசிகளாகிய சோளகரும், குறும்பர் களும் இந்த மிராசுதாரர்களை கொம்புகட்டிப் பல்லக்குபோல் செய்து ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குத் தூக்கிக் கொண்டுபோகும் பழக்கமுடையவராயிருந்தனர் என்றும். இப்பழக்கத்தின் காரணமாய் இக்கிராமத்திற்குக் "கொம்புத் தூக்கி" என்று பெயர் வழங்கியது. இந்த நெலாக்கோட் டைக்கு அருகில் பல காடுகள் இருக்கின்றன.

இக்காடுகளில் ஒன்றுதான் "புதர்க்காடு" என்பது. இக்காடுகளில் யானைகளும், கரடிகளும் அதிகம். கரையான் புற்றுகளும், எறும்புப்புற்றுகளும் இக்காடுகளில் ஏராளம். ஆகையால், இந்தப் புற்றுகளில் இருக்கும் கரையான்களை யும், எறும்புகளையும் தின்பதற்காக கரடிகள் வருவதுண்டு

என்று அங்குள்ள நண்பர் ஒருவர் கூறினர். மறுநாள் கையில் கோடாரி, பட்டாக்கத்தி, தீப்பெட்டி, எண்ணெய்த் துணி, கடப்பாரை முதலிய பயங்கர ஆயுதங்களுடன் கரடியைப் புகைப்படம் எடுக்கக் கிளம்பினோம். நெலாக் கோட்டையிலிருந்து "சுல்தான்பத்திரி பிள்ளையார் கோவில்" என்ற மார்க்கமாக சிறிது தூரம் சென்றதும் வலக்கைப் பக்கம் திரும்பிப் புதர்க்காட்டுக்குள் நுழைந்தோம். நுழைந்த போதே என் உடல் முழுவதும் புல்லரித்தது. எங்கு பார்த்தாலும், ஒரே காடு—மூங்கிற் புதர்களில், "மளார்—மளார்" என்ற ஓசை. இந்த ஓசைகளைக் கேட்டதும் எங்கள் உள்ளங்கள் "திக்—திக்" என்று அடித்துக் கொண்டன. திடீர் திடீரென்று யானைகளின் சாணம் ஒரு பெரிய கால்பந்து அளவு புதர்களின் நடுவே காணப்பட்டது. காய்ந்த சாணமாக இருந்தால், யானைகள் வெகு நேரத்திற்குமுன் இங்கே தோன்றி மறைந்து போய்விட்டன என்று தைரியமாக நடக்க ஆரம்பிப்போம். யானையின் சாணம் சற்று ஈரமாக இருந்தால் உடனே எங்கள் உள்ளம் பயத்தால் நடுங்க ஆரம்பிக்கும்.

உடனே நாங்கள் பேசுவதை நிறுத்திவிட்டு நான்குபேரும் நான்கு மூலையில் பார்த்துக்கொண்டே நடக்க ஆரம்பிப்போம். என்னுடைய தோல்பையை முஸ்லீம் நண்பர் ஒருவர் தம் தோளிலும், என்னிடைய பைஞக்குலரை நண்பர் "பஞ" தம் தோளிலும் போட்டுக் கொண்டார்கள். எங்களுடன் வந்த ஆதிவாசி குறும்பன் தன் கையில் கடப்பாரையும், பட்டாக்கத்தியும் வைத்துக் கொண்டான். அன்று காட்டை எல்லாம் சுற்றியபின் பகல் 12 மணிக்கு சூரியன் உச்சியில் தோன்றியது. உடனே குறும்பன், "இன்றைக்குக் கரடி வராதுங்கோ" என்று கூறிவிட்டான். உடனே விசனத்துடன் அக்காட்டிலேயே மிகப்பெரியதாக இருக்கும் ஒரு கரையான்புற்றை அடைந்தோம்.

கரையான் புற்றின் உயரம் 7 அடி; அகலம் 3 அடி. புற்றின் பக்கத்தில் என் நண்பர்களை நிற்க வைத்து புகைப்

படம் பிடித்துக்கொண்டேன். பிறகு நண்பர் ''பஞ''வின் வீடு நோக்கி நடந்தோம். அப்பொழுது சிக்காரி—குறும்பன் கரடிகளைப் பற்றிப் பல செய்திகளைப் பேச ஆரம்பித்தான். அவற்றில் ஒரு செய்திதான் இது:—

''சாதாரணமாய் சிக்காரிகளுக்குக் காட்டில் விலங்குகள் வரும் நேரம், அவை ஆகாரம் தேடுமிடம். தண்ணீர் குடிக்குமிடம் முதலியவைகள் நன்ருகத் தெரியும். சிக்காரி களின் உதவி இல்லாமல் காட்டில் நுழைவது ஆபத்தானது. இமயமலைச் சாரலில் வாழும் இருவகைக் கரடிகளைப் பற்றி எனக்குத் தெரியாது. ஆனால் நம் நாட்டில் வாழும் சாதாரண கரடிகளைப் பற்றிப் பல செய்திகள் தெரியும். கரடிகளைப் பற்றி பல ரசமான கதைகளைக் கேள்விப்பட்டி ருக்கிறேன். கரடியின் வாயின் பகுதிகள் வெள்ளையாக இருக்கும். நெஞ்சில் வெள்ளை நாமம் காணப்படும். நம் நாட்டிலேயே ஆள்கரடி, பன்றிக்கரடி என்று இருவகைக் கரடிகள் உள்ளன. ஆள்கரடி தம்பதிகளைக் கண்டால் கணவனைக் கொலை செய்து விட்டுப் பெண்ணைத் தூக்கிக் கொண்டு போய்விடும்.

நன்ருக வளர்ந்த ஓர் ஆண் கரடியின் எடை சுமார் 400 ராத்தலிருக்கும். பெண் கரடி சுமார் 200 அல்லது 300 ராத்தலிருக்கும். காட்டில் பிரயாணம் செய்யும் பொழுது தூரத்தில் குகைகளும், இடியால் எரிந்த மரங்களும் தெரிந் தால் உடனே மிகுந்த விழிப்போடு நடந்து போவோம். காரணம் அந்த இடங்களில் தான் கரடிகள் வாழும். கரடிகள் அதிநுட்பமான மோப்ப சக்தியும் சப்தத்தைக் கேட்கும் நுட்பமும் உடையவை. காட்டில் எங்கே பழங்கள் பழுத்து இருக்கின்றன என்பது கரடிகளுக்குத் தெரியும். ஆனல் காடர்கள் மாலையில் வௌவால்கள் பறக்கும் திசையைக் கண்டு, பழம் எத்திசையில் பழுத்திருக்கிறது என்பதை தெரிந்து கொள்வார்கள். ஆகையால் காட்டில் பழங்கள் நிறைந்த இடங்களில் சுமார் 20—30 மைல்கள் கரடிகள் பிரயாணம் செய்யும். சிக்காரிகள் முதலில் மரங்களைத்தான்

கவனிப்பார்கள். ஏனென்றால் கரடி மரத்தின் மேலிருந்து கொண்டே மனிதர்களின் மேல் அப்படியே தாவிக் கடித்துக் கொலை செய்துவிடும். சாதாரணமாய் கரடி நன்றாக மரமேறும். ஆனால் அதற்கு மரத்திலிருந்து கீழே இறங்கத் தெரியாது. ஆகையால் மரத்தின் மேலிருந்து தொப்பென்று கீழே விழுந்துவிடும். கரடிக்குத் தடித்த மயிர்கள் அடர்த்தியாக வளர்ந்திருக்கும். கரடி மரத்தில் ஏறித் தேனைக் குடித்துவிடும். ஆனால் தேனீக்கள் கொட்டினால் கரடியின் உடலில் வளர்ந்திருக்கும் மயிர்கள் தடுத்துவிடும். அதிகமான தேனைக் குடித்துவிட்டுப் போதையில் படுத்திருக்கும் பழக்கமும் உண்டு.

கரடிகள் கறையான் புற்றைக் கண்டால் அதைப் பெயர்த்து எடுத்துவிட்டுத் தன் அகன்ற உதடுகளைப் பிதுக்கி கறையான் புற்றின் வாயில் வைத்து அப்படியே உள்ளே உறிஞ்சுவிடும். அப்படிச் செய்யும்பொழுது எறும்புகளும் கறையான்களும் படிக்கணக்கில் கரடியின் வயிற்றில் போய்விடும். சாதாரணமாய்க் கரடிகள் மனிதர்கள் வருவதைக் கண்டால் ஓடிப்போகும். ஆனால் திடீரென்று மனிதர்களை எதிர்எதிராகக் கண்டால் ஏற்பட்ட அச்சத்தால் அது என்ன செய்வதென்று தோன்றாமல், மனிதனின்மேல் விழுந்து கடித்துவிடும்; நகத்தால் கிழித்துவிடும். சில தரை கரடிகள், ஜதைஜதையாக வாழும் சிறு சிறு விலங்குகள், பறவைகள் முதலியவைகளைப் பிடித்துத் தின்னும். காட்டில் பிரயாணம் செய்யும் மக்கள் சாதாரணமாய்க் கரடிகளைக் கண்டால் அவற்றின் கண்ணில் தம்முடைய உருவம் தெரியாமல் மறைந்து கொள்வதே சிறந்ததாகும். கரடி என்ன செய்துவிடும் என்று நினைத்து சிலர் எதிரில் நடந்து போவார்கள். அப்படிப் போகும் மனிதர்களைக் குட்டிக் கரடிகளே கிழித்துப் போட்டுவிடும்" என்று மிகவும் அழகாகத் தன் அனுபவத்தைச் சொல்லிக் கொண்டே வந்தான் குறும்பன். எல்லோரும் பண வீட்டுக்கு வந்து சேர்ந்தோம்.

# 30 காடர் கண்ட ஒளி

சரித்திர காலத்திற்கு முற்பட்டனவாகச் சொல்லப் படுகிற அநேக மிருகங்களில் பூர்வீக மனித இனமும் ஒன்று. அவனைச் சுற்றியிருந்த மிருகங்களிலிருந்து அவனை வேறு படுத்துவதற்குப் போதிய ஏது இல்லை. விலங்குகளைப் போலவே, அவன் கொட்டைகளையும், பழங்களையும் விதை களையும், கிழங்குகளையும் சாப்பிட்டான். சில சமயங்களில் வேறு மிருகங்களைக் கொன்று அவற்றை உண்டான்.

மத்திய ஆப்பிரிக்காவிலுள்ள காடுகளில் இன்று வாழும் வாலில்லாக் குரங்குகளுக்கும், அன்று வாழ்ந்த மனித இனத் தாருக்கும் தோற்றத்திலும் பழக்கவழக்கங்களிலும் அதிக வித்தியாசமில்லை. ஆனால், மனிதனே சீர்திருத்தமடைந்து விட்டான். வாலில்லாக் குரங்குகள் பழைய காலத்திலி ருந்த நிலையிலிருந்து மாறவில்லை.

மனிதன் தனக்கு ஆபத்து உண்டாகும்பொழுது ஒரு கொம்பையோ அல்லது கல்லையோ எடுத்து மற்ற மிருகங் களைக் கொல்வதற்கு அவற்றை உபயோகப்படுத்தினது தான் அவன் இயற்கையை ஜெயித்ததற்கு ஆரம்பம். மனிதனுக்குச் சிங்கம், புலியைப்போல் உறுதியான நகமும் பல்லும் அன்று முதலே இல்லை. தன்னுடைய விரோதி களிடமிருந்து தப்பி ஓடிப் போவதற்கு மான், முயல் முதலிய வைகளைப் போன்ற விரைந்த ஓட்டமும் மனிதனுக்கு இல்லை. பாம்பைப்போல் நஞ்சு கக்கவும் அவனிடம் நஞ்சு இல்லை.

எல்லாவற்றையும்விட மனிதன் பலமில்லாதவனாக இருந்தான். ஆகையால் மனிதனுக்குத் தன்னுடைய எதிரிகளைக் கொல்ல ஓர் ஆயுதம் வேண்டியதாக இருந்தது.

மனிதன் ஆயுதம் செய்யும் மிருகமாக இருந்தான். அது தான் மிருகத்திற்கும் மனிதனுக்கும் உள்ள பெரிய வித்தியாசம். பகலில் மனிதன் தன் விரோதிகளிடமிருந்து தப்பிக் கொண்டாலும் அவன் இருளில் சிக்குண்டு சிதறிப் போனான். காரணம், பூனையைப்போல், புலியைப்போல் மனிதனுக்கு இருளில் கண் பார்வை தெரியாதல்லவா? ஆகையால் அவனுக்கு இரவில், "ஒளி" வேண்டியதாக இருந்தது. ஒளியுடைய பௌர்ணமியன்று அவன் இயற்கையான இன்பமாக இரவைக் கழித்தான். ஆனால் மற்ற நாட்களில் வேதனை உண்டாகவே அவனுக்குச் சிந்தனை பிறந்தது. மற்ற நாட்களில் சூரியனின் ஒளியில் பகல் முழுவதும் அலைந்து தங்களுக்கு வேண்டியவைகளைச் சேகரித்துக் கொண்டு அவைகளுடன் தனக்கென்று அமைந்த இயற்கைக் குகையில் இரவைக் கழித்தான். சிலர் குகை இல்லாத இடங்களில் மரத்தடியில் ஒருவரை ஒருவர் கட்டிப் பிடித்துக் கொண்டு இரவைக் கழித்தார்கள்.

பௌர்ணமியன்று ஒளி தருவதையும் அந்த ஒளியில் மற்ற பொருள்களும், மற்றவர்களும் தெரிவதையும் கண்டான். சில சமயங்களில் மின்னல் இடியின் காரணமாய்ப் பச்சைமரம் எரிவதைக் கண்டு இருளிலிருக்கும் பொருள்கள் அதன் ஒளியில் தெரிவதையும் அறிந்தான். பிறகு மூங்கிற்புதர்கள் ஒன்றோடொன்று தேய்ந்து தீப் பிடித்து எரிவதையும் கண்டான். அதன் ஒளியிலும் இருளில் பொருள்கள் தெரிவதைக் கண்டான். அதன்மேலும் அவனுக்கு நாட்டம் உண்டாயிற்று, எரியும் அத்தீயில் மற்ற கட்டைகளை எடுத்துப்போட்டான். சில இடங்களில் மற்ற கட்டைகளும் தீப்பிடித்து எரிவதைக் கண்டான். அது

அப்படியே எரியும்படி செய்ய அன்று அவன் மரங்களின் கிளைகளை அதன்மேல் போட்டான். தீயைக் கண்டால் மனித இனம் தவிர மற்ற மிருகங்கள் ஓடுவதைக் கண்டு ஆச்சரியமடைந்தான். தனக்கு ஆபத்து விளைவிக்கும் மிருகங்களுக்குத் தீயைக் காட்டித் தப்பித்துக் கொள்ளலா மென்று அவன் யூகித்துக் கொண்டான். எனவே இரவில் அவன் வாழும் குகையின் வாயிலில் தீ மூட்டி வைத்து விட்டு உள்ளே படுத்துத் தூங்க ஆரம்பித்தான். தீயில் ஒளிச் சுடரால் மற்ற மிருகங்கள் வரவில்லை. ஆனால் மழையின் காரணத்தால் தீ அணைந்து போவதைக் கண்டு ஆச்சரியப்பட்டான். தீக்கு விரோதி "தண்ணீர்—மழை" என்று தெரிந்து கொண்டான். அவன் உடனே தண்ணீரைத் தேடி ஓடினான். மனிதன் தீ விபத்தைப் போக்க அணைக்க அன்றும், இன்றும் தண்ணீரைத்தான் உபயோகப்படுத்துகிறான் என்பது தெளிவு. ஆகையால் மனித இனம் அன்றும், இன்றும் காட்டில் தன் இல்லத்தை ஏதாவது ஓர் ஓடையின் அருகில்தான் அமைத்துக்கொள்ளு கிறான்.

ஆதி மனிதனுக்கு "ஒளி" வேண்டியதாக இருந்த தால், மூங்கிற் கொம்புகளை மட்டும் உரசி தீ மூட்ட வில்லை. தான் தற்செயலாக வீசும் சில கற்களிலும் தீச் சுடர் "பளிச் பளிச்" என்று உண்டாவதையும் கண்டு வியப்புற்றான். தான் போகுமிடங்களுக்கெல்லாம் கற்களை தூக்கிச் செல்வது கஷ்டமாக இருந்ததால் அவன் மூங்கிற் குச்சிகளையே தூக்கிச் செல்ல ஆரம்பித்தான். நாடோடியாகத் திரிந்து வாழும் வாழ்க்கையில் ஒரு சிறு முற்றுப்புள்ளி ஏற்பட்டது. காரணம் தண்ணீருக்காகவும், மூங்கிற் புதர்களுக்காகவும் குகையின் வசதிக்காகவும் அவன் சில காலம் ஓரிடத்தில் நிலைத்து வாழும் பழக்கம் உண்டானது. கற்களில் தீ உண்டாவதைக் கண்டு ஆதிமனிதன் அது பூதமோ பேயோ என்று கற்களைப் போட்டுவிட்டுத் தலைதெறிக்க ஓடி மறைந்திருக்க வேண்டும்.

அல்லது அச்சத்தால் மாண்டிருக்க வேண்டும். வெகு காலத்திற்குப்பின் மூங்கிற் குழாயின் பாதியில், சக்கிமுக்கிக் கல்லைத் தேய்த்தால் தீ உண்டாகிறது என்று அறிந்தான். நாட்கள் மறைய மறைய ஒளிகள், பந்தங்கள் வேண்டியனவாக இருந்தன. தீக்கட்டைகளை (தீக் கொள்ளி) கையில் ஏந்திக் கொண்டு இரவில் தன்னை எதிர்க்கும் விலங்குகளைத் தீக் கட்டையைக் காட்டி விரட்டி அடித்து வெற்றி கொண்டான். அன்று முதல் இன்று வரையில் மனிதன் தீக்கொள்ளியால் தேள் முதலியவைகளைக் கொல்வதும், காட்டில் கரடி முதலியவைகளைக் கொள்ளியைக் காட்டி ஓட்டுவதும் பழக்கமாக இருந்து வருகிறது.

ஆகையால் அன்று இரவில் தான் வாழுமிடங்களைச் சுற்றிலும் தீயை மூட்டி வைத்துவிட்டு, இரவை நிம்மதியாகக் கழித்தான். இன்றும் நான் காட்டில் தங்க ஏற்பட்டால் என்னைச் சுற்றிலும் தீக் கட்டைகள் எரிந்து கொண்டே தான் இருக்கும். 'அன்று ஆதிமனிதன் சிரமத்துடன் சிந்தனை செய்து கண்டறிந்ததை நாம் இன்று சுகமாக உபயோகப் படுத்துகிறோம் என்று சிந்தனை செய்யாதவர்கள் எத்தனை கோடி மக்கள்' என்று சுவாமி விவேகானந்தர் கூறினார். சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு சில காடுகளில் செழித்து வளரும் "வெக்கிச் செடி"யின் குச்சிகள் தீயில் எரிவதைக் கண்ட மனிதன் விளக்குகள்போல் வெக்கிச்செடியின் குச்சிகளைத் தனித்தனியாகவும் கட்டுக் கட்டாகவும் இரவில் கொளுத்தி பிடித்துக்கொண்டு பிரயாணம் செய்ய ஆரம்பித்தான். இரவைப் பகலாக்க மனிதன் பல்லாயிரம் ஆண்டுகளாகப் படிப்படியாக முயன்று வந்தான். அந்த வெக்கிச் செடியின் குச்சிகளை நான் இன்றும் சில சமயங்களில் வீட்டில் உபயோகப்படுத்துகிறேன்.

சில ஆண்டுகள் ஓடி மறைந்தன. மனிதன் இரும்புக் குழாயில் எண்ணெய் ஊற்றித் துணிக்கந்தைகளைத் திரியாக வைத்து, அந்த இரும்புக் குழாயைப் பிடித்துக்கொண்டு

செல்லும் பண்டைக் காலத்துப் பழக்கத்தை இன்றும் சில காடுகளில் கண்டேன். சில இடங்களில் என்னுடைய டார்ச்சு விளக்கு பழுதுபட்டு விட்டால் நானும் தற்காலத்தில் அந்த பந்தத்தின் உதவியால்தான் இரவில் காடுகளில் நடந்துபோவது வழக்கம். அன்று மனிதன், மண்ணெண்ணெய் இன்று கிடைப்பது போலவே தற்செயலாகப் பூமியில் ஊற்றெடுத்துப் பாய்வதைக் கண்டான்.

இவைகளுக்கு சில நூற்றுண்டுகளுக்குப் பிறகு மனிதன் 'ஹரிக்கேன்' விளக்கை உபயோகப்படுத்தினுன். அந்த விளக்குகள் நாளுக்கு நாள் மறைந்துவர இன்று காடுகளிலும் காடர்களில் சிலர் ''டார்ச் லைட்டை'' உபயோகப்படுத்துகின்றனர். மேலும் இன்று சில இடங்களில் அரசாங்கத்தார் மின்சார விளக்குகளையும் அமைத்திருக்கின்றனர் என்பதை நினைக்கும்போது நாம் பெருமை அடையத்தான் வேண்டும்.

இவைகளை எல்லாம் ஆராய்ச்சி செய்தபோது ஆதி மனிதன் முதலில் நெருப்பை எப்படிக் கண்டான் என்பது எப்பொழுதும் வெளியாகாத ஓர் இரகசியமாகவே இருந்து வருகிறது.

'புரோமோதியஸ்' (Promothews) என்பவன் எப்படி மோட்ச லோகத்திலிருந்து நெருப்பைக் கொண்டு வந்தான் என்று கிரேக்கருடைய இதிகாசம் கூறுகிறது. இக்கதையை ஓர் அளவுக்கு நம்பலாம். காரணம் மின்னற் பொறியொன்று ஒரு காய்ந்துபோன காட்டு மரத்தை எரித்த படியாலும், மின்னல் வானத்திருந்து வந்தபடியாலும், அன்றைய ஆதிமக்கள் மோட்சத்திலிருந்து தேவதூதன் நெருப்பைக் கொண்டு வந்து போட்டார் என்று கூறுவதில் என்ன குற்றமிருக்கிறது?

நன்ருக ஆராய்ச்சி செய்து பார்த்தால் இன்று நீலகிரியில் வாழும் ஆதிவாசிகள் உபயோகப்படுத்தும் தீக்கடைக்

கோலேயே "டஸ்மானிய தேசத்து" ஆதிவாசிகளாகிய "மிலேச்சர்" களும் உபயோகப்படுத்துகிறார்கள் என்பது தெரிகின்றது. ஆனால் பற்பல மதங்களில் நெருப்புக்கு கொடுக்கப்பட்டிருக்கிற பூர்வீகமான மக்கள் நெருப்பிடம் கொண்டிருந்த விசேஷ அன்பையும் பக்தியையும் காட்டுகிறது. பண்டை ஆதிவாசிகளும் மக்களும் தங்களுக்கு ஒரு பொருள் முக்கியமானதும் அவசியமானதுமாய் இருந்தால் அதனைப் புனிதமான பொருளாக்கிக் கொண்டனர். ஆகையால் அதைத் தன் மதத்தோடு சம்பந்தப்படுத்திக் கொண்டனர். இதனால்தான் சூரிய வணக்கம் செய்கிறவர்களை அன்று முதல் இன்று வரையில் உலகம் முழுவதும் காண்கிறோம்.

பூர்வீக மக்களின் மத விஷயமான சடங்குகளில் நெருப்பு உபயோகப்படுத்தப்பட்டு வந்தது. ரோமர்களும், கிரேக்கர்களும் இன்னும் சில மேலை நாட்டினர்களும் தீயை அணையாமல் பல்லாண்டுகளாகப் பாதுகாத்து வந்தார்கள். அத்தீயை இரவும் பகலும் ரோம் நாட்டில் உயர்ந்த குடும்பத்துக் கற்புள்ள பெண்களால் பாதுகாத்து வந்தனர். அவர்கள் திருமணமாகாதவர்கள். இதற்காகவே கன்னியர்களாக வாழ்ந்தார்கள். பண்டைக்காலம் முதல் இன்று வரையில் நெருப்போடு ஒவ்வொரு மதத்துடன் சம்பந்தப்படுத்தப்பட்ட பல கதைகள் இருக்கின்றன.

இவ்வளவுக்கும் காரணம் ஆதிமனிதன் கண்ட நெருப்பேதான் என்று நினைக்கும்பொழுது நாம் அவர்களை நினைத்துப் பெருமைப்படாமலிருக்க முடியுமா?

# 31. "ஆதிசோப்பு வெக்கிச் செடி"

மனித இனம் உலகில் தோன்றிய காலத்தில் அவர்கள் தாமாகவே குளிக்க வேண்டுமென்பதை அறியாமலிருந்தார்கள். கரடி, குரங்கு, மீன், பறவைகள், மயில் முதலியவைகளைப் பார்த்து மரமேறவும் குழி தோண்டவும் தண்ணீரில் நீந்தவும், நடனமாடவும், ஆகாய விமானம் செய்யவும் படிப்படியாகக் கற்றுக் கொண்டனர் என்பது மானிட அறிஞர்களுடைய கருத்துக்கள். கரடி, காட்டெருமை சில பறவையினங்கள் முதலியவைகள் தண்ணீரில் குளித்துவிட்டுத் தம் அலகுகளாலும், கொம்புகளாலும் தங்கள் உடலை தேய்த்துக் கொள்வதை மனிதன் அன்று கண்டான். பிறகே அவனும் தண்ணீரில் நீந்தவும், தன் உடலைத் தேய்த்து குளிக்கவும் கற்றுக் கொண்டான்.

சில ஆண்டுகள் உருண்டோடின. ஆனல் விலங்குகளைப்போல் பாறையிலும், மரங்களிலும் முதன் முதலில் தன் உடலைத் தேய்த்துக் கொண்டான். பிறகு ஒரு பொருளை எடுத்துத் தேய்த்துக் குளிக்க வேண்டுமென்ற எண்ணம் உண்டானதும், முதன் முதலில் கற்களைக் கொண்டு, கல்லாயுதம் செய்யும்பொழுது, அதைக் கொண்டே தன் உடலில் தற்செயலாக உண்டாகும் நமைச்சலைத் தேய்த்துக் கொண்டான். பிறகு காட்டில் கிடைத்த இயற்கை நார்களையும், வேர்களையும் தன் கையளவுக்குப் பிடித்துக்கொண்டு தன் உடலைத் தேய்த்துக் குளிக்கக் கற்றுக்

கொண்டான். இவ்வாறு ஆதிமனிதன் ஒவ்வொன்றையும் தற்செயலாகத்தான் கற்றுக்கொண்டான்.

ஆனால் அன்று சோப்பு கண்டுபிடிப்பதற்கு முன் இந்தியமலைப் பிராந்தியங்களில் வாழ்ந்த ஆதிவாசிகள் அம்மலைகளில் வளரும் சில செடிகளின் பட்டைகளையும் தழைகளையும் தேய்த்துக் கொண்டபொழுது இன்று சோப்பு தேய்த்துக் குளித்தால் எப்படி நுரை வருகிறதோ அப்படி நுரை வந்து, மனித உடலில் அழுக்குப் போவதைக் கண்டான் ஆதிமனிதன். அப்படிக் கண்ட மனிதர்களில் சிலர்தான் இன்று நீலகிரியில் வாழும் ஆதிவாசிகள். அவர்களில் கோத்தர்களும் ஓரினத்தவர்.

நீலகிரியில் வாழும் ஆதிவாசிகளில் கோத்தர்கள், தோதுவர்கள், குறும்பர்கள், இருளர்கள் மற்றும் பலர், அம்மலையில் வளரும் "வெக்கி" என்ற செடியைக்கொண்டு வந்து அச்செடியின் இலைகளை நீக்கிவிட்டு, மீதி இருக்கும் சிறு சிறு தண்டு, கிளைகளைச் சில கல்லின்மூலம் தட்டி, அச் செடியின் தண்டின் மேலிருக்கும் பட்டைகள் நீக்கிப் பிளவு படுத்துவர். மரத்திலிருந்து பட்டை உரிப்பதைப்போல் அப்பட்டைகளை உரித்து ஒன்றுகச் சேர்த்து, நமக்கு வேண்டிய அளவு கைப்பிடியாக எடுத்து அளவான தண்ணீரில் சுமார் பத்து பதினைந்து நிமிஷங்கள் கரைத்துக் கொண்டே வந்தால் ஒரு கோப்பை தண்ணீரும் கஞ்சியைப் போல் மாறிவிடுகிறது. அதைக் கையில் எடுத்துப் பார்த்தால் "இளகிய அல்வா" போலிருக்கும். பிறகு அதில் கரைத்த பட்டைகளை எறிந்து விடுகின்றனர். அத்தகைய கஞ்சியைத்தான் இந்தியாவில் சில பகுதிகளில் வாழ்ந்த ஆதிவாசிகள் சோப்பு, சீயக்காய், பாசிப்பயிறு முதலியவைகளைக் கண்டறிவதற்கு முன் உபயோகப்படுத்தி வந்தார்கள்,

பல நூற்றுண்டுகளுக்கு முன் கண்ட இந்த 'வெக்கிச் செடி"யின் சோப்பையே இன்றும் நீலகிரியில் வாழும்

கோத்தர்கள் சில முக்கிய தெய்வ வழிபாடுகளின்போது தேய்த்துக் குளிப்பதைக் கண்டேன். தெய்வ வழிபாடு, திருவிழா நாட்களில் முக்கியமாகப் பங்கு பெறுபவர்கள் கடையில் கிடைக்கும் சோப்பை உபயோகப்படுத்துவதில்லை. அப்படிக் குளிப்பதற்குமுன் ஒரு கோத்த சகோதரி தன் தலையில் இதனைத் தேய்ப்பதைக் கண்ட நான் அவர்கள் இல்லத்தில் தங்கியிருக்கும்பொழுது ''கிளிக்'' என்று புகைப் படம் பிடித்தேன்.

இந்த வெக்கிச் செடியின் கஞ்சியை தேய்த்துக் குளித்தால் கண்கள் குளிர்ச்சியடைந்து பார்வை நன்ருகத் தெரியும். தலையில் நரை உண்டாகாது; காதுகள் நன்ருகக் கேட்கும். உடம்பில் தோல் சம்பந்தப்பட்ட வியாதிகள் சீக்கிரத்தில் நம்மை அணுகாது. உடம்பின் தோல் சுருக்கம் விழாது—முதலிய நன்மைகள் உண்டாகின்றன வாம். சுமார் அன்று நான் கண்டவர்களில் ஒரு வயதான சகோதரி தமக்கு நூறுக்கு மேல் வயதிருந்தாலும் நல்ல கண்பார்வையுடன் என்னை அடையாளம் கண்டுபிடித்து ''நீங்கள் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன் வந்தீர்கள்'' என்றும் ''உங்கள் பெயர் இது'' என்றும் ''புதியதாக மூக்குக் கண்ணுடி அணிந்திருக்கிறீர்கள்'' என்றும் கூறிய பொழுது எனக்கே வெட்கமாக இருந்தது. காரணம் நான் அன்று கண்ணுடி அணியாமலிருந்தேன். பிறகு அவர் களிடம் மற்றும் பல செய்திகளையும் பொருள்களையும் சேகரித்துக் கொண்டு விடை பெற்றேன்.

# 32 திருடினால் கை வெட்டப்படும்!

நான் பிரயாணம் தொடங்குவதற்கு சுமார் மூன்று மாதங்களுக்கு முன்பே திட்டங்கள் தயார் செய்து கொள்வதுண்டு. ஒரு முறை அங்ஙனம் தயார் செய்யும்பொழுது என்னுடைய மூன்று டார்ச்சு லைட்களையும் ரிப்பேர் செய்வதற்காக என் நண்பர் மயிலை அமாலுல்கான் அவர்களிடம் யோசனை கேட்டேன். அந்த நண்பரும் ஒரு நல்ல யுனானி வைத்தியர். சிறந்த முகப்பரு மருந்துகளையும் பிரயாணத்திற்கு முன் அவரிடம் வாங்குவதுண்டு.

அப்பொழுது அந்த வைத்தியர், "அதோ நடைபாதையில் உட்கார்ந்திருக்கிறாரே, அவர் மலேயாவில் நன்றாக வாழ்ந்தவர். மலேயாவில் பல தொழிற்சாலைகள் வைத்துப் பலரை வேலை வாங்கியவர் மட்டுமல்ல; பல நாடுகளிலும் சுற்றுப்பயணம் செய்தவர். மலேயாவில் எல்லாச் சொத்துக்களையும் பறிமுதல் செய்துவிட்டதால், இன்று ஏழை அகதியாக இந்தியா வந்து சேர்ந்து நிம்மதியாக நடைபாதையில் பல பொருட்களை ரிப்பேர் செய்கிறார். கொஞ்சம் விஷயம் தெரிந்தவர். உங்கள் டார்ச்சு லைட்களை நன்றாக ரிப்பேர் செய்வார்" என்று கூறினார்.

அந்த மலேயா நண்பரோ, "கருமமே கண்ணாயினார்" என்பதைப்போல் என்னுடைய டார்ச்சை ரிப்பேர் செய்து கொண்டிருந்தார். நான் குறுக்கிட்டு "நீங்கள் பல நாடுகளிலும் சுற்றிப் பல தொழில்களும் செய்திருக்கிறீர்களாமே? நன்றாகவும் வாழ்ந்தவர் என்றும் கேள்விப்பட்டேன்.

அந்த வாழ்க்கையையும் இன்று இந்த நடைபாதையில் வாழும் வாழ்க்கையையும் ஒப்பிட்டுப் பார்த்தால் எது மன நிம்மதியைக் கொடுக்கிறது?'' என்று கேட்டேன். முதலில் என்னை மேலிருந்து கீழ்வரையில் ஒரு பார்வை பார்த்து விட்டு, ''உம்'' என்று ஒரு சிரிப்பும் சிரித்தார்.

''நான் மலேயாவில் சில தொழிற்சாலைகள் வைத்துக் கொண்டு நன்றாக வாழ்ந்தவன். என்னுடைய தொழிற் சாலையில் சுமார் முப்பது நாற்பதுபேர் வேலை செய்து கொண்டிருப்பார்கள். அப்படி வாழ்ந்த நாட்களில் நான் தொழில்களின் நுணுக்கங்களை அறிவதற்காகப் பல ஊர் களுக்குச் சென்றேன். அப்படிச் சென்ற ஊர்களில் நான் ஏழைகள் வாழும் இடங்களிலோ அல்லது நடுத்தரமான வர்கள் வாழும் இடங்களிலோதான் தங்குவதுண்டு. எவ்வளவோ பக்தர்களும், பணக்காரர்களும், ஊரைச் சுற்றிப்பார்க்கும் ரசிகர்களும் அரேபியாவுக்குப் போயிருக்கி றார்கள். அப்படிப் போனவர்களில் பலரைப் பல இடங்களில் கண்டும் அவர்களிடம் உரையாடியுமிருக்கிறேன்.

ஆனால் பலர் அரேபியாவைப் பற்றிய பயங்கர கொடுமை யான செய்திகளையும் இன்னும் அந்த நாட்டில் அடிமை வாணிபம் நடைபெறும் செய்தியையும்தான் கூறுகிறார்களே தவிர, அரேபியாவிலிருக்கும் பல நல்ல கருத்துக்களையும், பல நல்ல செய்திகளையும், பழக்கங்களையும் எடுத்துக் கூறுவ தில்லை. ஒரு ஊருக்கோ ஒரு நாட்டுக்கோ சென்றால், அங்கே இருக்கும் நன்மைகளையும், தீமைகளையும் இரண்டையுமே எடுத்துக் கூறுவதுதான் நல்லது.

ஏழைகள் வாழுமிடங்களில் சாதாரணமாய்ப் பல விஷயங்கள் நமக்குக் கிடைக்கும். அரேபியாவில் திருட்டு என்பதே கிடையாது. மேலும் தெருக்களில் மற்றவர்க ளுடைய மூட்டைகள், பெட்டிகள் இருந்தாலும் அவற்றை யாரும் எடுக்கமாட்டார்கள். அதைக் கொண்டுபோய்க்

காவல்துறை அலுவலகத்தில் சேர்த்து விடுவார்கள். அப்படி யாராவது அரேபிய நாட்டில் திருடினுல் அவர்களுடைய வலது கரத்தை வெட்டிவிடுவார்கள். மேலும், கொள்ளேக் கூட்டத்தார்களில் யாராவது கிடைத்தால் அவர்களுடைய குற்றம் வெளியானுல், உடனே அவனுடைய வலக்கரமும் இடப்பாதமும் துண்டிக்கப்பட்டுவிடும்.

அரேபியாவில் சில குற்றங்களுக்குக் கடுமையான தண்டனே இருப்பதால், அந்த நாட்டில் குற்றம் செய்யலாமென்று பொதுமக்கள் கனவிலும் நினேக்க மாட்டார்கள்.

களேப்பினுல் வழி நடக்க முடியாதவர்களுக்கு, எந்த நாட்டிலும் செய்யாத ஒரு உதவியை அரேபியாவில் செய்கின்றனர். குதிரைகளுக்குப் பெயர் போனது அரேபியா நாடு. அந்த நாட்டுக் குதிரைகளேத்தான் பண்டைக் காலத்தில் இந்தியாவில் அரசாண்ட மன்னர்களும் வாங்கி வளர்த்தார்கள் என்று இந்திய சரித்திரம் சான்று கூறுகிறது. இன்னும் இந்தியாவில் குதிரைப் பந்தயங்களில் ஓடுவனவும் அரேபிய நாட்டுக் குதிரைகள்தான் என்பது நமக்குத் தெரிந்த விஷயமாகும்.

அன்று அப்படிக் களேப்பாக உட்கார்ந்த எனக்கு ஆகாரமும் கொடுத்து வழிப் பிரயாணத்திற்கு ஒரு அரேபிய நாட்டுக் குதிரையும் கொடுத்தார்கள். "இந்தக் குதிரையின்மேல் ஏறிச் சவாரி செய்தால், இது நீங்கள் போக வேண்டிய கிராமத்திற்கு உங்களேக் கொண்டுபோய்ப் பத்திரமாகச் சேர்த்துவிடும். நீங்கள் போய்ச் சேர்ந்ததும், அதன் தொடையில் மூன்று தட்டுகள் தட்டுங்கள். அது ஒரே ஓட்டமாக எங்களிடம் வந்து சேர்ந்து விடும். இதுதான் நாங்கள் வழிப்போக்கர்களுக்குச் செய்யும் உதவி" என்று கூறினுர்கள்.

அப்படியே நானும் அவர்கள் கொடுத்த குதிரையின் மேல் ஏறினேன். அது நான் காட்டிய இடத்திற்குப் பத்திரமாகக் கொண்டுபோய் என்னைச் சேர்த்தது. வாயில்லாப் பிராணியின் அறிவை நினைத்து ஆச்சரியப்படுவதா? அல்லது அதை வளர்க்கும் எஜமானனின் சேவையை நினைத்துப் புகழ்வதா?

பிறகு அந்தக் குதிரைக்குக் கொஞ்சம் ஆகாரமும் தண்ணீரும் கொடுத்தேன். அக்குதிரையை வழியில் ஞாபகமில்லாமல்கூடத் தொடையில் மூன்று தட்டுகள் தட்டக்கூடாதாம். ஏனென்றால் ஆசையாகவும், அன்பாகவும் நமக்கே தெரியாமல் தொடையில் தட்டிவிட்டால், அது உடனே திரும்பி தன் எஜமானின் வீட்டுக்குத்தான், நம்மை அழைத்துக்கொண்டு போய்விடுமாம். எனவே அந்த விஷயத்தில் நாம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

குதிரை ஆகாரம் உண்டபின், அதன் தொடையில் மூன்று தட்டுக்கள் தட்டியதுதான் தாமதம், உடனே அது ஒரு கனைப்பு கனைத்துவிட்டு, தான் வந்த வழியாகவே ஓட ஆரம்பித்தது. அது மறையும்—வரையில் நானும் சிலையாக அந்த வாயில்லாப் பிராணியைப் பார்த்துக் கொண்டே நின்றேன். ‘‘ஆண்டவன் படைப்பில் இதுவும் ஒரு விசித்திரமான செயல்’’ என்று கருதி வியந்தேன்.

அரேபியாவில் தங்கியிருந்த மற்றொரு நண்பர் இன்னொரு முக்கியமான செய்தியையும் கூறினார். ‘‘இதைப் போல் அந்தக் கிராமத்தில் கொடுத்த குதிரையை உதவிக்குக் கொண்டு வந்தவர்கள் மறுபடியும், அதைத் திருப்பி அனுப்பாமல் அபகரித்துக்கொண்டு, தாமே வளர்த்துக் கொள்ளலாம் என்று நினைத்து நாள் கணக்கில் கட்டிப் போட்டு அதற்கு ஆகாரம் கொடுப்பதும் உண்டு. அப்படிப்

பட்டவர்களை, இந்தக் குதிரைகள் எப்படியோ தெரிந்து கொள்ளும். கட்டிப்போட்டு ஆகாரம் கொடுக்கும் வரையில் பொறுமையாக இருக்கும். புதிய திருட்டு எஜமானன் ஏமாந்து, "அது நம்மிடம் பழகிவிட்டது" என்று நினைத்து அதை அவிழ்த்து அதன் மேல் சவாரி செய்தால், அவனை கொஞ்ச தூரம் அவன் போகுமிடத்திற்குக் கொண்டுபோய் சமயம் பார்த்து அவனைக் கீழே தள்ளி நன்ருக உதைத்தும் மிதித்தும்விட்டு, ஒரே ஓட்டமாக, பழைய வழியாகவே, அது தன்னுடைய பழைய எஜமானனின் வீட்டுக்கு ஓடி விடும். அப்படி அவனைக் கீழே தள்ளிவிட்டு ஓடும்போது எழுந்து, கத்தவோ அந்தச் சூழ்நிலையை மற்றவர்கள் தெரிந்துகொள்ளவோ விரும்பமாட்டான். ஏனென்ருல் திருடிக்கொண்டு வந்த குதிரைகள்தான் இப்படிச் செய்யும் என்று அரேபியாவில் எல்லோருக்கும் தெரியும். ஆகையால் அதை யாராவது பார்த்துவிட்டால், குதிரையைத் திருடிக் கொண்டு வந்தாயா?' என்று கேட்டு, அவனுக்குத் தண்டனை கொடுப்பார்கள் அல்லவா? ஆகையால் குட்டை வெளிப்படுத்தாமல், "ஊமையன் கண்ட கனவாக" மௌனமாக எழுந்து சொல்லாமல் கொள்ளாமல், வீடு போய்ச் சேர்ந்துவிடுவான்" என்று நான் தங்கி இருந்த வீட்டின் நண்பர் கூறினர்.

கிழக்கு ஜோர்டானில் உள்ள 'பெடுவின்' பூர்வீக குடிகள் இன்னும் பாலைவனக் காற்றுபோல சுதந்திரமாக உள்ளனர். நாகரீகத்தின் பயன்களை ஏற்க அவர்கள் தயாராக இல்லை. அவர்களைக் குடியேற்ற இன்னும் இரு தலைமுறைகளாகக்கூடும் என பூர்வகுடிகள் கவுன்சில் கருதுகிறது. அவர்களை குடியேற்ற திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. ஆனல், "வீடுகளில் குடியேற நாங்கள் ஒருக்காலும் விரும்பமாட்டோம். சிறைச்சாலையைப்போல் ஒரு வீட்டில் வசிப்பதைவிட சாவதே மேல்" என்று நம் நாட்டில் நடைபாதையில் வாழும் குருவிக்காரர்களைப்போல் கூறுகிருர்கள்.

“இதைப்போல் பல செய்திகள் பல ஊர்களில் இருக்கின்றன. சமயமும், நேரமும் எனக்குக் கிடைக்ும்பொழுது நான் தங்களுக்குச் சொல்லுகிறேன்” என்று கூறி என் டார்ச்சை ரிப்பேர் செய்யும் நண்பர் காஜாமொகிதீன் எடுத்துக் கூறினர். இதைப்போல் ஒவ்வொரு ஊரிலும், நகரத்திலும் மறைந்த நற்செய்திகள் கோடிக்கணக்காக இருக்கின்றன. அவைகளை நாம் துருவித் துருவிப் பார்ப்பதில்லை. கேட்பதுமில்லை. மறைந்து மணணில் புதைந்து போனவைகள் எத்தனையோ! யாருக்குத் தெரியும்?

